

# மயிலை சீனி. வேங்கடசாமி

வீ. அரசு



இந்திய
இலக்கியச்
சிற்பிகள்

உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில் பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை மன்னர் சுத்தோதனருக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்திரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இது வாகவே இருக்கலாம்.

நாகார்ஜுன மலைச்சிற்பம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு.( பட உதவி: நேஷனல் மியூசியம், புது தில்லி)

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# மயிலை சீனி. வேங்கடசாமி

வீ. அரசு



சாகித்திய அகாதெமி

*Mayilai Seeni. Vengatasamy*: Monograph in Tamil by V. Arasu, Sahitya Akademi, New Delhi, 2004. Rs. 25.



முதல் பதிப்பு: 2004

ISBN - 81-260-1720-1

ரவீந்திர பவன், 35, பெரோஸ்ஷா சாலை,
புது தில்லி - 110 001.

விற்பனை

'ஸ்வாதி' மந்திர் சாலை, புது தில்லி - 110 001.

மத்தியக் கல்லூரி வளாகம், பல்கலைக்கழக நூலகக் கட்டடம்,
டாக்டர் அம்பேத்கர் வீதி, பெங்களூர் - 560 001.

443, குணா காம்பளக்ஸ்(பழைய எண்.303 )அண்ணா சாலை,
தேனாம்பேட்டை, சென்னை - 600 018.

ஜீவன் தாரா பில்டிங், 4வது மாடி,
டைமண்ட் ஹார்பர் சாலை, கொல்கத்தா - 700 053.

172, மும்பய் மராத்தி கிரந்த ஸங்கிரஹாலய சாலை,
தாதர், மும்பய் - 400 014.

விலை: ரூ. 25

அச்சு : ஸ்ரீ வெங்கடேஷ்வரா ஆப்செட், சென்னை - 6

இந்நூல்...
இந்தியவியலுக்குள்
திராவிட இயலை
அடையாளப்படுத்தி,
இன்றைய தமிழியல்
வளர்ச்சிக்கு வித்திட்ட அனைத்து
அறிஞர் பெருமக்களுக்கும்

# நன்றி

அறிஞர் மயிலை சீனி. வேங்கடசாமி அவர்களை அறிமுகப்படுத்தும் இக்குறுநூல் உருவாக்கத்தில், பல நிலைகளிலும் உதவியவர்களைப் பதிவு செய்வது எனது கடன்.

வேங்கடசாமி அவர்களின் குடும்பம், சென்னை மயிலாப்பூர், காரணீசுவரர் கோவில் தெருவில் இன்றும் வாழ்ந்து வருகிறது. அவரது பெயர்த்தி அழகம்மை அவர்களும் அவரது துணைவர் புலவர் ஆ.சண்முகம் அவர்களும் இந்நூல் உருவாக்கத்திற்குப் பெரிதும் உதவியவர்கள். வேங்கடசாமி அவர்களின் அரிய ஆவணங்களைப் பார்வையிட அனுமதித்தனர். இந்தக் குறுநூல் எழுதத் தொடங்கும் நேரத்தில்தான், வேங்கடசாமி அவர்களின் ஆக்கங்களைத் தமிழக அரசு அரசுடைமை ஆக்கியது. இத்தருணத்தில் அவரது குடும்பத்தார், சென்னைப்பல்கலைக்கழகத்தமிழ்இலக்கியத்துறையில் வேங்கடசாமி அவர்களின் பெயரில் அறக்கட்டளை நிறுவினர். அவர்களுக்கு நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

வேங்கடசாமி அவர்கள் 1920ஆம் ஆண்டு தொடங்கி எழுதிய கட்டுரைகள் பல இதழ்களிலும் இடம் பெற்றிருந்தன. அவற்றைத் தொகுக்கும் பணியை மேற்கொண்டேன். முதல் நிலையில் கட்டுரைகள் குறித்த விவரப் பட்டியலை உருவாக்கினேன் (இந்நூலின் பின்னிணைப்பில் அப்பட்டியல் உள்ளது). அப்பட்டியல் உருவாக்கத்திற்குப் பலர் உதவினர். எனது மேற்பார்வையின் கீழ் வேங்கடசாமி குறித்த முனைவர் பட்ட ஆய்வை, செல்வி மா. அபிராமி மேற்கொண்டிருந்தார். அவர் வேங்கடசாமி கட்டுரைகள் தொடர்பான பட்டியல் ஒன்றை உருவாக்கினார். புலவர் கோ. தேவராசன் அவர்களும் ஒரு பட்டியலை எனக்களித்தார். இப்பட்டியல்களில் இடம்பெறாத பல கட்டுரைகளை நானும் தொகுத்தேன். கட்டுரைப்பட்டியல் முழுமை பெற்றது. இப்பட்டியலில் உள்ள கட்டுரைகளை எனது மேற்பார்வையில் ஆய்வியல் நிறைஞர் ஆய்வு செய்து வந்த திரு.ப. சரவணன் அவர்கள் மூலம் நகல் எடுக்கச் செய்தேன். இப்பணியை அவர் சிறப்பாகச் செய்தார். அவருக்கு எனது நன்றி உரியது.

இக்குறுநூலை மெய்ப்புத் திருத்தம் செய்வதில் ஆய்வாளர்கள் ப. குணசுந்தரி, மு.வையாபுரி ஸ்ரீ பிரேம்குமார் ஆகியோர் பெரிதும் உதவினர். முனைவர் இரா. சீனிவாசன் அவர்களது உதவி பெரிது. இந்நூலைக் கணிப்பொறியில் முதலில் அச்சிட்ட அரிகிருஷ்ணன். பின்னர் முழுமைப்படுத்தி நூலாக்கிய திரு.வே. இளங்கோ ஆகியோருக்கும் நன்றி.

அறிஞர் மயிலை சீனி. வேங்கடசாமி குறித்து என்னிடம் பலமுறை உரையாடிய பேரா. ந. சஞ்சீவி அவர்களை நினைவு கூறுவது எனது கடன். இப்பணி தொடர்பாகத் தொடர்ந்து ஆர்வ மூட்டியவர்கள் பேரா. கா. சிவத்தம்பி மற்றும் நண்பர் தெ. மதுசூதனன். இந்நூல் பற்றிய விரிவான கலந்துரையாடலை நிகழ்த்தியவர் அ.மங்கை. எனது குழந்தைகள் பொன்னி, சிபி ஆகியோர் பங்களிப்பும் உண்டு.

வேங்கடசாமி அவர்களது ஆக்கங்கள் நாட்டுடைமை ஆதல், சென்னைப் பல்கலைக்கழகத்தில் அறக்கட்டளை நிறுவுதல், பல்வேறு தொகுதிகளாக அவரது கட்டுரைகள் அச்சாதல் ஆகிய பணிகளுக்கு இக்குறுநூல் எழுதும் பணி, ஏதோ ஒரு வகையில் வழி கண்டது. இவ்வாய்ப்பை அளித்த சாகித்திய அகாதெமிக்கு நன்றி.

**வீ. அரசு**

# பொருளடக்கம்

# வாயில்

''ஐந்தடிக்கு உட்பட்ட குறள் வடிவம்; பளபளக்கும் வழுக்கைத் தலை; வெண்மை படர்ந்த புருவங்களை எடுத்துக் காட்டும் அகன்ற நெற்றி; கனவு காணும் கண்ணிமைகளைக் கொண்ட வட்ட முகம்; எடுப்பான மூக்கு; படபடவெனப் பேசத் துடிக்கும் மெல்லுதடுகள்; கணுக்கால் தெரியக் கட்டியிருக்கும் நான்கு முழ வெள்ளை வேட்டி; காலர் இல்லாத முழுக்கைச் சட்டை; சட்டைப் பையில் மூக்குக் கண்ணாடி; பவுண்டன் பேனா; கழுத்தைச் சுற்றி மார்பின் இருபுறமும் தொங்கும் மேல் உத்தரீயம்; இடது கரத்தில் தொங்கிக் கொண்டிருக்கும் புத்தகப் பை. இப்படியான தோற்றத்துடன் சென்னை மியூஸியத்தை அடுத்த கன்னிமரா லைப்பெரரியை விட்டு வேகமாக நடந்து வெளியே வருகிறாரே! அவர்தான் மயிலை சீனி. வேங்கடசாமி அவர்கள்.''

எழுத்தாளர் நாரண. துரைக்கண்ணன் அவர்களின் மேற்கண்ட விவரிப்பு, அறிஞர் மயிலை சீனி. வேங்கடசாமி அவர்களைக் கண்முன் காணும் காட்சி அநுபவத்தைத் தருகிறது. திருமணம் செய்து கொள்ளாமல், இல்லறத்துறவியாக வாழ்ந்தவர். எண்பதாண்டு வாழ்க்கைக் காலத்தில், அறுபது ஆண்டுகள் முழுமையாகத் தமிழியல் ஆய்வுப் பணிக்கு ஒதுக்கியவர். இவரை அறிமுகப்படுத்தும் நோக்கத்தில் இந்நூல் அமைகிறது.

இருபதாம் நூற்றாண்டில் பல புதிய தன்மைகள் நடைமுறைக்கு வந்தன. அச்சு எந்திரத்தைப் பரவலாகப் பயன்படுத்தும் வாய்ப்பு உருவானது. சுவடிகளிலிருந்து அச்சுக்குத் தமிழ் நூல்கள் மாற்றப் பட்டன. இதன் மூலம் புத்தக உருவாக்கம், இதழியல் உருவாக்கம், நூல் பதிப்பு ஆகிய பலதுறைகள் உருவாயின. இக்காலங்களில்தான் பழந்தமிழ் நூல்கள் பரவலாக அறியப்பட்டன. இலக்கிய, இலக்கணப் பிரதிகள் அறியப்பட்டதைப்போல், தமிழர்களின் தொல்பழங்காலம்

குறித்தும் பல புதிய கண்டுபிடிப்புகள் வெளிவந்தன. பிரித்தானியர்களால் உருவாக்கப்பட்ட தொல்பொருள் ஆய்வுத்துறை பல புதிய வரலாற்றுத் தரவுகளை வெளிக்கொண்டு வந்தது. பாரம்பரியச் சின்னங்கள் பல கண்டறியப்பட்டன. தொல்லெழுத்துகள் அறியப்பட்டன. பல்வேறு இடங்களில் எழுதப்பட்ட கல்வெட்டுக்கள் படி எடுக்கப்பட்டு வாசிக்கப்பட்டன. தமிழ் மக்களின் எழுதுமுறை, இலக்கிய, இலக்கண உருவாக்கமுறை ஆகியவை குறித்து, இந்தக் கண்டுபிடிப்புகள் மூலம் புதிதாக அறியப்பட்டது. அகழ்வாய்வுகள் வழி பெறப்பட்ட காசுகள் புதிய செய்திகளை அறிய அடிப்படையாக அமைந்தன. வடக்கு, தெற்கு என்ற இந்தியாவின் பண்பாட்டுப் புரிதல் சிந்துசமவெளி அகழ்வாய்வு மூலம் புதிய விவாதங்களுக்கு வழிகண்டது.

தமிழகச் சூழலில், தொல்பொருள் ஆய்வுகள் வழி பல புதிய கூறுகள் உறுதிப்படுத்தப்பட்டன. ஆதிச்சநல்லூர், அரிக்காமேடு அகழ்வாய்வுகள்; தமிழகத்தின் பல்வேறுஇடங்களில் கண்டு பிடிக்கப்பட்ட வரலாற்றுக்கு முந்தைய காலப் பொருட்கள், ஓவியங்கள் ஆகியவை தமிழக வரலாற்றைப் புதிய முறையில் எழுதுவதற்கு அடிகோலின. மயிலை சீனி. வேங்கடசாமி அவர்கள்(இனி வேங்கடசாமி) மேலே விவரிக்கப்பட்ட சூழலில்தான், தமது ஆய்வுப்பணியைத் தொடங்கினார்.

வேங்கடசாமி சுயமரியாதை இயக்கச் சார்பாளராக வாழ்வைத் தொடங்கினார். பின்னர் பௌத்தம், சமணம் ஆகிய சமயங்கள் குறித்த அக்கறை உடையவராக இருந்தார். இவ்வகை மனநிலையோடு, தமிழ்ச் சூழலில் உருவான புதிய நிகழ்வுகளைக் குறித்து ஆய்வு செய்யத் தொடங்கினார். கிறித்தவம், பௌத்தம், சமணம் ஆகிய சமயங்கள், தமிழியலுக்குச் செய்த பணிகளைப் பதிவு செய்யத் தொடங்கினார். இவ்வகைப் பதிவுகள் தமிழில் புதிய துறைகளை அறிமுகப்படுத்தின. புதிய ஆவணங்கள் மூலம், தமிழ்ச் சமூகப் பண்பாட்டு வரலாறுகளை எழுதினார். சங்க இலக்கியப் பிரதிகள், பிராமி கல்வெட்டுகள், பிற கல்வெட்டுகள், செப்பேடுகள் முதலியவற்றை வரலாறு எழுதுவதற்குத் தரவுகளாகக் கொண்டார். கலைகளின் மீது ஈடுபாடு உடைய மனநிலையினராகவே வேங்கடசாமி இளமை முதல் இருந்தார். தமிழ்க் கலைவரலாற்றை எழுதும் பணியிலும் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார். கட்டடம், சிற்பம், ஓவியம் தொடர்பான இவரது ஆய்வுகள், தமிழ்ச் சமூக வரலாற்றுக்குப் புதிய வரவாக அமைந்தன.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்க காலங்களில் இந்தியவியல் என்ற வட்டத்திற்குள் தமிழகத்தின் வரலாறும் பேசப்பட்டது. இந்தியவியலைத் திராவிட இயலாகப் படிப்படியாக அடையாளப் படுத்தும் செயல் உருப்பெற்றது. இப்பணியில் தம்மை முழுமையாக ஈடுபடுத்தியவர் வேங்கடசாமி அவர்கள். இன்று, திராவிட இயல் தமிழியலாக வளர்ந்துள்ளது. இவ்வளர்ச்சிக்கு வித்திட்ட பல அறிஞர்களுள் வேங்கடசாமி முதன்மையான பங்களிப்பாளர் ஆவார். இப்பெருமகனின் வாழ்க்கை, ஆவணப் பணி, வரலாறு எழுதுபணி, கலை வரலாற்றுப்பணி மற்றும் ஆளுமை ஆகியவை குறித்த அறிமுகமாக இந்நூல் அமைகிறது. வேங்கடசாமி குறித்த முழுமையான தகவல்கள் இந்நூலின் பின்னிணைப்புகள் மூலம் திரட்டப்பட்டுள்ளன. தமிழியல் ஆய்வாளர்களுக்கு இந்நூல் உதவக்கூடும்.

# 1
# வாழ்க்கை

இளமைக்கால வாழ்க்கை, அரசியல் ஈடுபாடு, பல்வேறு அமைப்புகளோடு அவர் கொண்டிருந்த தொடர்பு, அவரது ஆய்வுப்பணி நிகழ்ந்த முறைமை, என்ற வகையில் அவரது வாழ்க்கையை இப்பகுதி பதிவு செய்கிறது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதி ஆண்டில் பிறந்தார் மயிலை சீனி. வேங்கடசாமி. அவர் பிறந்த நாள் 16.12.1900. இருபத்தொன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இருந்து கொண்டு, கடந்த நூறு ஆண்டுகளைத் திரும்பிப் பார்க்கிறோம். இருபதாம் நூற்றாண்டில் நிறைவாழ்வு வாழ்ந்தவர். எண்பது ஆண்டுகள் வாழ்ந்து மறைந்தார். அவர் மறைந்த நாள் 8.5.1980. தமது இருபது வயது தொடங்கி ஆய்வுப் பணியில் ஈடுபட்டவர். அறுபது ஆண்டுகள் தொடர்ச்சியாக இவரது ஆய்வுப்பணி நிகழ்ந்திருக்கிறது. இவ்வகையான வாய்ப்பைப் பெற்ற அறிஞர்கள் மிகச் சிலரே. இந்த அறுபது ஆண்டுகளில் வேங்கடசாமி அவர்களின் ஆய்வுப் பயணத்தின் சுவடுகளைத் தொடர்ச்சியாகப் பார்க்க வேண்டிய தேவை உள்ளது. இருபதாம் நூற்றாண்டின் தமிழ்ச்சமூக வரலாற்றுச் சுவடுகளில் வேங்கடசாமி அவர்களின் ஆய்வுப் பயணச் சுவடுகளும் இணைந்திருப்பதைக் காணலாம்.

வேங்கடசாமி அவர்களின் இளமைச் சூழல் பின் கண்டவாறு அமைந்திருந்தது. தந்தை சீனிவாச நாயக்கர் ஒரு சித்த மருத்துவர். சூரணம், இலேகியம், மாத்திரை, தைலம் இவைகளை உருவாக்கி மக்களுக்கு வழங்கி வந்தவர். மூலிகைகளோடு வாழும் வாழ்வு, இயற்கை சார்ந்தது. இதனால் இயற்கையோடு மனித வாழ்வை ஐக்கியப்படுத்தும் மனநிலை உருவாக வாய்ப்புண்டு. மக்கள் கூட்டத்திலிருந்து தனித்துச் சிந்திக்கும் மனநிலை வாய்க்கும் வாழ்க்கை இதுவாகும். இதனால்தான், இப்பணியைச் செய்தவர்கள் சித்தர்கள் என்று அழைக்கப்பட்டனரோ என்று கருத இடமுண்டு.

சித்த மருத்துவர் இல்லங்கள், சுவடிகள், அச்சு நூல்கள் நிரம்பிய நூலகங்களாக இருந்தன. தமிழில் மிக அதிகமான சுவடிகள், சித்த மருத்துவம் தொடர்பாகவே திரட்டப்பட்டுள்ளன. சீனிவாச நாயக்கர் இல்லத்தில் சுவடிகள் மற்றும் நூல்களைச் சேகரித்து, வாசிக்கும் பண்பு இருந்து வந்திருப்பதைக் காணமுடிகிறது. பக்தி இலக்கிய நூல்கள், அற இலக்கிய நூல்கள் இவரது சேகரிப்பில் இருந்தன. பிரபந்த மரபில் உருவாக்கப்பட்ட இலக்கிய நூல்களான ஏற்றப் பாட்டு, ஏலப்பாட்டு, சேவற்பாட்டு போன்றவையும் இவரது வீட்டு நூலகத்தில் இடம் பெற்றிருந்ததைக் காணமுடிகிறது. சீனிவாச நாயக்கர் ஏட்டுச் சுவடிகள் சேகரிப்பது, சித்த மருத்துவம் தொடர்பான சுவடிகளை எழுதுவது போன்ற பணிகளில் ஈடு பட்டவர் என்று அறியமுடிகிறது. இவருக்கு இரண்டாம் மகனாகப் பிறந்தார் மயிலை சீனி வேங்கடசாமி.

வேங்கடசாமி அவர்களின் தமையன் மயிலை சீனி கோவிந்தராசன், தமிழ்ப் பயிற்சி உடையவர். மகாவித்துவான் மயிலை சண்முகம்பிள்ளை அவர்களிடம் தமிழ்ப் பயின்றவர். ‘தமிழாசிரிய மாணவர் வழிமுறை விளக்கம்’ என்ற குடிவழிப்படம் ஒன்றை வேங்கடசாமி வரைந்துள்ளார் (செந்தமிழ்ச் செல்வி 6:1, 1928). அதில், சிவஞான சுவாமிகள் (1785), திருத்தணிகை கச்சியப்ப முனிவர் (1790), அஷ்டாவதானம் புரிசை சபாபதி முதலியார், வித்வான் மயிலை சண்முகம் பிள்ளை (1905), திரு. மயிலை சீனி, கோவிந்தராசன் என்று வரிசைப்படுத்தியுள்ளார். மயிலை சீனி. கோவிந்தராசன் ‘திருக்குறள் நாடகம்’, திருமயிலை நான்மணிமாலை ஆகிய படைப்புகளைப் படைத்துள்ளார். இவர் தமிழ்ப் பயிற்றுவிக்கும் ஆசிரியராகவும் செயல்பட்டார். இவரிடம் வேங்கடசாமி தமிழ்ப் பயிற்சி பெற்றார்.

''தமிழ்ப்பற்று எனக்கு முன்னோர்கள் வழியாகக் கிடைத்த சீதனம் என்று சொல்லலாம். என் தகப்பனார் வைத்தியத் தொழில் செய்து கொண்டிருந்தார். எங்கள் வீட்டில் ராமாயணம், மகாபாரதம் போன்றவைகளும் ஏட்டுச் சுவடிகளும் நிறைய இருந்தன. என் தமையனார் சீனி. கோவிந்தராசன் வீட்டில் பாடம் சொல்லுவார். படிப்பதிலும் கேட்பதிலும் எனக்கு ஆர்வம் ஏற்பட்டது. ஏட்டுச் சுவடிகளை எடுத்துப் புரட்டிப் பார்ப்பேன். எதுவும் புரியாது. பின்னால் இவற்றையெல்லாம் படித்து ஆராய வேண்டும் என்கிற எண்ணம் எழும். பின்னால் நான் செய்யப் புகுந்த இலக்கிய, வரலாற்று, கல்வெட்டு ஆராய்ச்சிகளுக்கு அன்றே என் மனதில்

வித்தூன்றி விட்டேன்.'' என்று கூறியுள்ளார் வேங்கடசாமி அவர்கள். ('தீபம்' பேட்டி, மார்ச்: 1970)

தந்தையின் மருத்துவப் பின்புலம், தமையனின் தமிழ்ப்பின்புலம் ஆகியவை வேங்கடசாமி உருவாக அடிப்படைகளாக அமைந்தன. தந்தை வழி பெற்ற மனப்பதிவை இவரது 'உணவு நூல்' (1965) என்ற படைப்பின் வழி அறியலாம். வேங்கடசாமி உணவை மருந்தாகப் போற்றும் மனநிலை பெற்றவர். மனிதர்களின் உணவுப் பழக்க நன்மை தீமைகளைத் தர்க்கப் போக்கில் விவாதித்துள்ளார். பகுத்தறிவு இயக்கத் தொடர்பும் இவ்வகை மனநிலைக்கு வாய்ப்பளித்திருக்கிறது. வேங்கடசாமி அவர்களின் ஆய்வுப் பயணத்தைப் புரிந்து கொள்ள மேற்குறிப்பிட்ட வாழ்க்கைப் பின்புலம் உதவும்.

தமது இருபதாவது வயதில் சென்னைக் கலைக் கல்லூரியில் சேர்ந்திருந்தார். கலைத்துறையில் ஈடுபாடு கொண்டிருந்த இவர், கலைக்கல்லூரிப் படிப்பைத் தொடர இயலவில்லை. பாதியில் விட்டு விட்டார். அத்துறையில் தொடர்ந்து படித்திருந்தால், தமிழுக்கு ஓர் அரிய ஓவியர் கிடைத்திருப்பார்; ஆனால் ஆராய்ச்சியாளர் கிடைத்திருப்பாரா? என்பது சந்தேகம். வாழ்க்கையில் ஏற்படும் இவ்வகையான முரண்களே, வாழ்க்கைப் பாதையில் புதிய சுவடுகளை உருவாக்குகின்றன. இவரது கலை ஈடுபாடு, பிற்காலத்தில் பல்வகையான கலை ஆய்வுகளுக்கும் உதவியுள்ளதை அறியலாம். வேங்கடசாமி அவர்களின் இருபத்திரண்டாம் வயதில், இவரின் ஆசிரியராய் இருந்த தமையன் மயிலை சீனி. கோவிந்தராசன் மறைந்தார். குடும்பப்பாரம் இவர் தலையில் ஏறியது. தொடர்ச்சியான படிப்பிற்கு வாய்ப்பின்றி, தனியார் நிறுவனங்களுக்குப் பணிக்குச் செல்ல நேரிட்டது. மோட்டார் எந்திர உதிரி உறுப்புக்களை விற்பனை செய்யும் கடையில் எழுத்தர் பணிக்குச் சென்றார். அப்பணி இவருக்கு உவப்பாக இல்லை. தொடர்ச்சியாகப் படிப்பதற்கும் ஊறுவிளை வித்தது. இப்பணியை விடுத்து இதழியல் துறையில் வேலை வாய்ப்புப் பெற்றார்.

1916இல் தென்னிந்திய நலவுரிமைச் சங்கம் என்ற அமைப்பு உருவானது. வகுப்புவாரி உரிமை முதன்மையாக முன்னெடுக் கப்பட்டது. இந்தப் பின்புலத்தில் சமசுகிருத மொழி மற்றும் பண்பாட்டுக்கு எதிரான இயக்கம், சைவ மீட்பு இயக்கம், தனித் தமிழ் இயக்கம், சுயமரியாதை இயக்கம், பகுத்தறிவு இயக்கம் போன்றவை உருப்பெற்றன. தென்னிந்தியச் சூழலில், குறிப்பாகத் தமிழகத்தில், இவ்வகை இயக்கங்கள் வலிமையுடன் செயல்பட்டன. தமிழக வரலாறு, பண்பாடு, கலை போன்ற பல கூறுகளிலும் இவ்வியக்

கங்களின் செல்வாக்கு உருவானது. இளைஞரான வேங்கடசாமி அவர்கள் இந்தப் பின்புலத்தில்தான் தமிழ்ச் சூழலில் சிந்தனையாளராக உருவாகத் தொடங்கினார். 1922-23 ஆம் ஆண்டுகளில் நீதிக் கட்சியால் நடத்தப்பட்ட 'திராவிடன்' என்னும் நாளேட்டின் ஆசிரியர் குழுவில் ஒருவராகப் பணிபுரிந்தார். பிற்காலங்களில் 'குடியரசு', 'ஊழியன்' போன்ற இதழ்களில் செய்திக் கட்டுரைகள் எழுதினார்.

''வேதம், புராணம், கடவுள், கோயில், விதி, வினை என்று சொல்லிக்கொண்டு நாளுக்குநாள் முட்டாளாகப் போகிற வழக்கத்தைவிட்டு, எந்த விஷயத்தையும் பகுத்தறிவு கொண்டு ஆராயும்படி கேட்டுக் கொள்கிறேன்'' ('குடியரசு' அக்.16: 1932) என்றும், ''சுயமரியாதை இயக்கத் தோழர்கள் தமது சடங்கு முறைகளில் கவனம் செலுத்தி, அதனை மாற்றுவது தொடர்பான சிந்தனைகளில் ஈடுபட வேண்டும்'' ('குடியரசு' நவ. 6: 1932) என்றும் தம் கட்டுரைகளில் குறிப்பிட்டுள்ளார். வேங்கடசாமி அவர்கள், தமது அக்கால மனநிலை குறித்து கூறுவது குறிப்பிடத்தக்கது.

''தாம்பரம் கிறிஸ்தவக் கல்லூரியில் வரலாற்றுப் பேராசிரியராக இருந்த திரு. சற்குணர் எனக்கு வழி காட்டினார். மனதில் பட்டதை, நான் உண்மையென்று மனப்பூர்வமாக நம்புவதைத் தைரியமாகச் சொல்லலாம் என்று என்னை ஊக்கியவர் அவர். பின்னர் 'குடியரசு', 'பகுத்தறிவு' போன்ற பத்திரிகைகளுக்கு ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதியபோது பெரியாரின் அறிமுகம் கிடைத்தது. அவரும் பின் விளைவுகளைப் பற்றிக் கவலைப்படாமல் தனக்குத் தோன்றியதைத் தைரியமாகச் சொல்லக் கூடியவர். அவருடைய தொடர்பும் துணிவாகக் கருத்துக்களைச் சொல்ல எனக்கு உதவியது.'' ('தீபம்' மார்ச்: 1970) மேற்குறிப்பிட்ட குறிப்புகளின் அடிப்படையில் வேங்கடசாமி அவர்களின் தொடக்ககால சிந்தனைப் போக்கைப் புரிந்து கொள்ளலாம். இந்தக் காலங்களில் விபுலானந்த அடிகள், கா. சுப்பிரமணியப் பிள்ளை, திரு. வி.க., தெ.பொ.மீ., ச. த.சற்குணர் ஆகிய அறிஞர் பெருமக்களிடம் தொடர்பு கொண்டிருந்தார்.

பகுத்தறிவு இயக்க இதழ்களில் பணியாற்றியபோது, பள்ளி இறுதி வகுப்பு மற்றும் தொடக்கக் கல்விக்கான ஆசிரியப் பயிற்சி ஆகியவற்றை முடித்திருந்த இவருக்கு, நகராட்சித் தொடக்கப் பள்ளி ஆசிரியர் பணி கிடைத்தது. இப்பணியில் இருபத்தைந்து ஆண்டுகள் செயல்பட்டார். இதில் கிடைக்கும் ஓய்வு நேரங்கள் இவரது ஆய்வுப் பணிக்கு வாய்ப்பாக அமைந்தன. இந்தப் பின்புலத்தில் 1930களில் ஆய்வு நூல்களை எழுதி வெளியிடத் தொடங்கினார். 1934ஆம் ஆண்டின் இறுதியில், சிந்தாதிரிப்பேட்டை உயர்நிலைப் பள்ளியில்

தெ.பொ.மீ. அவர்கள் தமிழ் ஆராய்ச்சி மாநாடு ஒன்றை நடத்தினார். அதில், ச.த. சற்குணர், 'கிறித்துவமும் தமிழும்' என்ற பொருள் குறித்து உரையாற்றினார். அவ்வுரையைக் கேட்ட உத்வேகத்தில் வேங்கடசாமி உருவாக்கியதே 'கிறித்தவமும் தமிழும்' (1936) என்னும் நூலாகும். இந்நூலுக்கு விபுலானந்த அடிகள், சுவாமி ஞானப்பிரகாசர், ச.த. சற்குணர் ஆகியோர் முகவுரைகளைக் கொடுத்து ஊக்கப்படுத்தி யுள்ளனர்.

சித்த மருத்துவம், பகுத்தறிவு இயக்கம் ஆகிய மனப்பதிவுகளில் வளர்ந்த வேங்கடசாமி; சமணம், பௌத்தம் போன்ற கடவுள் மறுப்புச் சமயங்கள் குறித்த ஈடுபாடு உடையவராக இருப்பது இயல்பே. கிறித்தவம், புதிதாக உருவான தொழில் நுட்பங்களை உள்வாங்கி, நவீன சமூக உருவாக்கத்திற்குச் செய்த பங்களிப்பை மதிப்பீடு செய்தார்; இதன் தொடர்ச்சியாக, இயங்கியல் போக்கில் மேற் குறிப்பிட்ட கடவுள் மறுப்புச் சமயங்கள் மீது அக்கறை செலுத்தினார். தமிழின் தொல் இலக்கியம், தொல் கலை, தொல்லெழுத்து ஆகியவற்றில் ஈடுபாடு கொள்ளத் தொடங்கினார். இத்தன்மை இவர் சமணம், பௌத்தம் குறித்த புரிதலில் செயல்பட வித்திட்டது. சமண, பௌத்த தமிழ்க் காப்பியங்கள், சமண, பௌத்த தமிழ் அறநூல்கள் ஆகியவற்றில் தொடர்ச்சியான ஆய்வை இவர் நிகழ்த்தத் தொடங்கினார். 'செந்தமிழ்ச் செல்வி' இதழில் இவர் 1930களின் இறுதி மற்றும் 1940களின் தொடக்கத்தில் எழுதிய சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் பலவும் இச்சமய இலக்கியங்களின் அடிப்படையில் அமைந்துள்ளன. இந்தப் பின்புலத்தில் இவரது இரண்டாவது ஆய்வுநூல் 'பௌத்தமும் தமிழும்' (1940) வெளி வந்தது. முதல் நூலை வெளியிட்ட நிறுவனமே இந்நூலையும் வெளியிட்டது.

தமது முதல் நூலில், கிறித்தவம் தமிழுக்குச் செய்த பங்களிப்பின் சில அரிய தரவுகளைப் பதிவு செய்ததைப் போல, பௌத்தம் தமிழுக்குச் செய்த அரிய தரவுகளை இந்நூலில் பதிவு செய்துள்ளார். புத்தர், புத்தமதக் கோட்பாடுகள் ஆகியவை தொடர்பான, விரிவான அறிமுகங்களை இந்நூல் முன்வைக்கிறது. தமிழகத்தில் இருந்த பௌத்தக் கோயில்கள் குறித்த தகவல்களை இந்நூல் தருகிறது. தமது, தமிழகக் கோயில் கட்டடக்கலை ஆய்வுகளில், பௌத்தக் கோயில் கட்டடக்கலை குறித்தும் ஆய்வு செய்துள்ளார். சைவம், வைணவம் ஆகியவற்றுக்கும் பௌத்தத்திற்குமான உறவு குறித்தும் இந்நூல் கூறுகிறது. 'சாஸ்தா அல்லது ஐயனார்' என்னும் பெயருடன் வைதீகச் சமயங்கள் புத்தரைத் தமது கடவுளர்களில் ஒருவராக ஏற்றுக் கொண்டதை இந்நூலில் வெளிப்படுத்துகிறார். பௌத்த நாட்டுப்புறத்

தெய்வங்கள், பௌத்தச் சடங்குகள், பௌத்த ஒழுகலாறுகள் ஆகியவற்றை வைதீகச் சமயங்கள் உள்வாங்கியதையும் இந்நூல் விரிவாகப் பேசுகிறது. தமிழ்நாட்டில் பௌத்தச் சமய செயல்பாடுகள் குறித்த விவரங்கள் பதிவாக்கப்பட்டுள்ளன.

வேங்கடசாமி அவர்கள் பௌத்தம் தொடர்பாகத் தொடர்ச்சி யாக நூல்களை எழுதியுள்ளார். 'தம்மபத அர்த்தக் கதை' (தம்ம பதார்த்த கதா) என்னும் புத்தகோஷர் எழுதிய நூலிலிருந்து சில கதைகளையும் தம்மபால மகாதேரர் எழுதிய 'பரமார்த்த தீபனீ' என்னும் நூலிலிருந்து சில கதைகளையும் தொகுத்து 'பௌத்தக் கதைகள்' (1952) என்ற நூலாக வெளியிட்டுள்ளார். பௌத்தக் கதை மரபைத் தமிழில் அறிமுகப்படுத்தியதில் இத்தொகுப்புக்கு உரிய இடமுண்டு. 1950களில் தமிழகப் பதிப்பகத்தார் பலரும், தொடர்ந்து பல்வேறு சமய மரபுக் கதைகளை அச்சிட்டனர். அம்மரபில் இந்நூல் முன்னோடியானது. இத்தொகுப்பை வெளியிட்ட நிறுவனம், 'கிறித்து மொழிக் கதைகள்', 'இசுலாமியக் கதைகள்' என்னும் பெயரில் தொகுப்புகளைப் பின்னர் வெளியிட்டது. 'பௌத்தக்கதைகள்' என்ற தொகுப்பு பின்னர் இளைஞர்க்கான 'புத்த மதக்கதைகள்' (1975) என்ற பெயரில் சுருக்கப் பதிப்பாகவும் வெளிவந்தது. 'கௌதம புத்தர்' (1956) என்ற புத்தர் வாழ்க்கை வரலாற்று நூலை வேங்கடசாமி எழுதியுள்ளார். ''புத்தர் சரித்திரங்கள், பள்ளி மாணவர் சரித்திரப் பாடத்தில் கற்கும் கதையாக எழுதப்பட்டுள்ளன. சமய சம்பிரதாயத்தை ஒட்டிய புத்தர் வரலாறு தமிழில் இல்லை'' (முன்னுரை: 1956) என்று கருதிய இவர், பௌத்த மதச் சம்பிரதாயப்படி எழுதிய வரலாறு இந்நூல் என்று குறிக்கிறார்.

சமயத் தலைவர்களின் வரலாறு அற்புதங்கள் நிறைந்தவை களாகச் சொல்லப்படுவது மரபு. வாய்மொழி மரபில் உருவான கதை கேட்போன், சமயத் தலைவரை கடவுளாக வரித்துக் கொள்ள ஏற்ற வகையில் அவ்வரலாற்றுக் கதைகள் அமையும். புத்தர் மரபில் அவ்வகை வரலாறு உண்டு; இத்தன்மையை முழுதும் புரிந்து கொண்டு, விருவிருப்பான மொழிநடையில் இந்நூலை உருவாக்கி யுள்ளார். பௌத்த சமயத்தின் நான்கு வாய்மைகள், எட்டு மார்க்கங்கள், பன்னிரண்டு நிதானங்கள் ஆகியவற்றை அடிப் படையாகக் கொண்டு கௌதம புத்தர் நூலை உருவாக்கியுள்ளார். நூலின் மொழிநடை, முழுதும் வாய்மொழி மரபு சார்ந்து உள்ளது. பௌத்த சமயப் பரப்புதலை நோக்கமாகக் கொண்ட 'புத்த ஜாதகக் கதைகள், பௌத்த மதத்தினரால் கட்டப்பட்டன. இம்மரபு, தொடர்ச்சியாகப் பல்வேறு கதைகள் உருவாக வழி கண்டது.

இப்பின்புலத்தில் வேங்கடசாமி 'புத்தர் ஜாதகக் கதைகள்' (1960) என்ற நூலை உருவாக்கினார். ஜாதகக் கதை மரபை உள்வாங்கி தமிழில் உருவான முதல் நூல் இதுவாகக் கருதலாம். ஒவ்வொரு கதையும் பௌத்த சமயக் கருத்துக்களின் ஏதேனும் ஒரு தன்மையை வெளிப்படுத்தும் வகையில் அமைந்திருக்கும். இராம பண்டிதர், இலக்குமண பண்டிதர், சீதை ஆகிய மூவரும் தசரதனுடைய மக்களாகவும் சீதை பட்டத்து அரசியாக முடி சூட்டப்படுவதாகவும் அமைந்த 'தசரத ஜாதகம்' என்னும் கதை இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ளது. பதின்மூன்று கதைகள் இடம் பெற்றுள்ள இத்தொகுப்பில், புத்தரும் அவரது குடும்பத்தினரும், அவரது தலைமைச் சீடர்களும் பல்வேறு பிறப்புக்களில் நிகழ்த்திய அற்புதங்களாக இக்கதைகள் உள்ளன. வேதாளக் கதைகள், விக்கிரமாதித்தியன் கதைகள் என்ற மரபில் புத்தர் ஜாதகக் கதைகளும் உள்ளன. பகவான் புத்தர் சொல்வதாகவும் சீடர்கள் கேட்பதாகவும் இக்கதைகள் அமைந்துள்ளன. இவ்வகைக் கதை மரபைத் தமிழில் உருவாக்கியதின் மூலம் வேங்கடசாமி குறிப்பிடத்தக்க செயல் புரிந்துள்ளார். இக்கதைகளுக்குள் புத்தமதக் கோட்பாடுகள் எளிமையாக விவாதிக்கப்படுகின்றன.

மணிமேகலை காப்பியத்தில் உள்ள பௌத்தத் தத்துவ மரபு குறித்தும் விரிவாகச் சில கட்டுரைகளில் ஆய்வு செய்துள்ளார். சிங்கள பௌத்த அறிஞர்களோடு தொடர்பு கொண்டிருந்தார். முதலியார் ஏ.டி.எஸ். ஜி. புஞ்சிஹேவா என்ற இலங்கை பௌத்தர், 'பௌத்தமும் தமிழும்' நூலுக்குத் தமிழில் முன்னுரை எழுதியதோடு, சிங்கள மொழியிலும் இந்நூலை மொழி பெயர்ப்பதாகக் குறிப்பு உள்ளது. (பார்க்க: நூல் முன்னுரை) வண. பண்டித. ஹிஸ்ஸெல்லெ. தருமரத்ன தேரோ என்ற தமிழ், சிங்களம் அறிந்த பௌத்தத் துறவியோடும் இவர் தொடர்பு கொண்டிருந்தார். 1964-65இல் எழுத்தாளர் சங்கத் தலைவராக இருந்தபொழுது தமிழ் எழுத்தாளர் மாநாட்டிற்கு அவரைத் தமிழகத்திற்கு அழைத்துள்ளார். தமிழகம், இலங்கை தொடர்பான பௌத்தச் செயல்பாடுகளில், வேங்கடசாமி அவர்களின் பங்கு குறிப்பிடத்தக்கதாக அமைந்துள்ளது.

'கிறித்தவமும் தமிழும்', 'பௌத்தமும் தமிழும்' ஆகியவை நூல் வடிவம் பெற்ற காலத்திலேயே 'சமணமும் தமிழும்' நூல் எழுதத் தொடங்கி, 1943இல் அந்நூல் முழுமை பெற்றிருந்தது. 'காந்தரு வதத்தையின் இசைத் திருமணம்' (1943) என்னும் சிறிய நூல் ஒன்றை வேங்கடசாமி எழுதினார். இந்நூலை சமண அறிஞர் பேராசிரியர் அ.சக்கரவர்த்தி நயினார் தமிழ் இசை மாநாட்டில் வெளியிட்டார்.

இந்நூலில் 'சமணமும் தமிழும்', நூல் வெளிவர இருப்பது குறித்த குறிப்பும் உள்ளது. 'சமணமும் தமிழும் 1954இல் அச்சாகியது. இந்நூல் இருபகுதிகளாகத் திட்டமிடப்பட்டு உருவாக்கப்பட்டது; ஆனால் முதல் பகுதி மட்டுமே அச்சிடப்பட்டது. இரண்டாம் பகுதி வெளிவரவே இல்லை. சமண இலக்கியப் பணி குறித்து இரண்டாம் பகுதி பேசுவதாகக் குறிப்பு உள்ளது; அந்நூல் தமிழுக்குக் கிடைக்காமலேயே போய்விட்டது. முதற்பகுதியில் தமிழகத்தில் சமணம் உருப்பெற்ற வரலாறு, தமிழகத்தில் சமணத்திற்கு எதிராக நிகழ்த்தப்பெற்ற போர், இந்து சமயத்திற்கும் சமணத்திற்கும் உள்ள உறவு ஆகியவை விவாதிக்கப்பட்டுள்ளன. பின்னிணைப்பில் சமணத் தத்துவங்கள் குறித்த குறிப்புகள் தொகுக்கப்பட்டுள்ளன. ஊன் உண்ணாமை, தீபாவளி, சிவராத்திரி, சடைமுடி, எருது வாகனம், நந்தி, காலன் கதைகள், ஐயனார், அடியார் மரபு, சித்தர் வணக்கம் போன்ற பல்வேறு இந்து மதச் செயல்பாடுகள், சமண மதத்திலிருந்து பெறப்பட்டவை என்று வேங்கடசாமி இந்நூலில் வெளிப்படுத்தியுள்ளார். இந்நூல் பத்தாண்டுகள் கழித்து அச்சானதைக் குறித்த ஆசிரியரின் ஆதங்கம் பின்வருமாறு அமைகிறது.

''வாழ்க்கைப் போராட்டத்தின் இடையே கிடைத்த சிறுசிறு நேரங்களையும் பயன்படுத்திக் கொண்டு, என்னால் இயன்ற வரையில் எனது சிற்றறிவுக்கெட்டிய வரையில், ஏறக்குறைய நான்கு ஆண்டுக்குள் இதனை எழுதி முடித்தேன். ஆயினும், முதலில் சொல்லியபடி, 'ஊழ்' இதனைப் பத்து ஆண்டுகளாக வெளிவராமல் செய்துவிட்டது. நேரத்தையும் உழைப்பையும் செலவிட்டு இந்த நூலை எழுதி, ஏன் என் ஆயுளை வீணாக்கினேன் என்று கருதி இதை வெளியிடாமல் இருந்துவிட்டேன். அதற்குச் சில காரணங்கள் உண்டு. அவற்றை இங்குக் கூற விரும்பவில்லை. ஒன்றை மட்டும் கூற விரும்புகிறேன்; உண்மையாக உழைத்து ஆராய்ச்சி நூல் எழுதும் உழைப்பாளிகளுக்குத் தமிழ்நாட்டிலே இடமில்லை என்பதே அது. பாமரர்களைப் பற்றியும் படியாத பணக்காரர்களைப் பற்றியும் கூறவில்லை நான். 'கல்லாத பேர்களே நல்லவர்கள்...நல்லவர்கள்.' கல்வித்துறையிலே மிகவுயர்ந்த நிலைபெற்று ஆராய்ச்சியின் அருமை பெருமைகளை அறிந்தவர்கள் கூட, ஆராய்ச்சியாளரைப் போற்றுவதில்லை என்றால், இந்நூல்களை ஏன் எழுத வேண்டும், ஏன் வெளிப்படுத்த வேண்டும்'' (1954: முன்னுரை)

வேங்கடசாமி அவர்கள் இரண்டு நூல்களை எழுதி வெளியிட்ட பின் மேற்குறித்த மனத்துன்பத்திற்கு ஆளாகியுள்ளார். அது இவரது தொடர்ச்சியான ஆய்வுப் பணியைச் சிறிது தடைபடுத்தியுள்ளதை

அறிய முடிகிறது. ஆனால் அதிலிருந்து மீண்டு, தொடர்ச்சியாக ஆய்வில் ஈடுபட்டுள்ளார். பௌத்தம் பற்றித் தொடர்ந்து ஆய்வு செய்ததைப் போலவே சமணம் குறித்தும் இவர் தமது ஆய்வைத் தொடர்ந்து நிகழ்த்தியுள்ளார்.

'மகாபலிபுரத்து ஜைன சிற்பம்' (1950) என்ற இவரது சிறு நூலை தமிழ்நாடு சமணர் சங்கம் வெளியிட்டது. ''ஜைனர்கள் வளர்த்த கலைகள் மறைக்கப்பட்டன; அல்லது மாற்றப்பட்டன. ஆனாலும் தமிழ் நாட்டிலே ஆங்காங்கே காணப்படுகிற சிற்பங்களும் ஓவியங்களும் குகைக் கோயில்களும் கற்கோயில்களும் பண்டைக் காலத்திலே ஜைனர் வளர்த்த கலைப் பண்புகளை இப்போதும் வெளிப்படுத்து கின்றன.'' (முன்னுரை: 1950) இவ்வகைக் கண்ணோட்டத்தோடு, ஆய்வை மேற்கொண்ட வேங்கடசாமி அவர்கள், மகாபலிபுரத்தில் 'அர்ச்சுனன் தபசு' 'பகீரதன் தபசு' என்று பேசப்பட்ட சிற்பங்கள் சமண சிற்பங்கள் என்று சான்றுகள் வழி நிறுவினார். இவ்வகையில், மகாபலிபுரத்துச் சிற்ப வரலாற்றில் புதிய ஒளியைப் பாய்ச்சினார்.

ஆரணி நல்லறிவு மன்றத்தினர், 'மயிலை நேமிநாதர் பதிகம்' (1955) ஒன்றை வெளியிட்டுள்ளனர். இதனை வேங்கடசாமி பதிப்பித்துள்ளார். 'நேமிநாதர் திருப்பதிகங்களும் மயிலாப்பூர் வரலாறும்' என்பது இந்நூலின் முழுப்பெயர். மயிலைக்கும் சமணத்திற்கும் உள்ள உறவு குறித்த ஆய்வை இச்சிறு நூலில் நிகழ்த்தியுள்ளார். மயிலாப்பூரில், நேமிநாத சுவாமி ஆலயம் என்னும் சமணக் கோயில் இருந்ததற்கான இலக்கியச் சான்றுகள், கல்வெட்டுச் சான்றுகள் ஆகியவற்றை இவ்வாய்வில் கொடுத்துள்ளார். 'ஜைனக் கோவிலுக்கும் பழைய கபாலீசுவரர் கோயிலுக்கும் சொந்தமான நிலங்கள், கிறித்தவக் கோயிலுக்குச் சொந்தமாக்கப்பட்டுவிட்டன' என்றும் எழுதுகிறார் (1955). மயிலாப்பூர் பதிகம் என்னும் முதல்பகுதி அறுசீர் அடி ஆசிரிய விருத்தத்தில் அமைந்த பாக்கள் ஆகும். மயிலையில் உள்ள நேமிநாதரைப் போற்றிப்பாடுவதாக இப்பகுதி உள்ளது. திருமயிலாப்பூர் பதிகம் நேமிநாதரைப் போற்றிப் பாடும் பாடலே ஆகும். மூன்றாம் பகுதி, நேமிநாதரை நோக்கி வேண்டுவதாக அமைந்துள்ளது. இறுதிப் பகுதி இல்லறத்தார்க்குரிய தசதர்மம் பற்றிக் கூறுகிறது. இவ்வகையில், மயிலாப்பூருக்கும் சமணத்திற்குமான உறவை வேங்கடசாமி, ஆய்வு செய்துள்ளார். சமணக் காப்பியம், சமணக் கலைகள், குறிப்பாகச் சிற்பம், சமணக் கோயில்கள் ஆகியவை குறித்துத் தமிழில் முதல் நிலையில் ஆய்வு செய்தவராக வேங்கடசாமி அவர்களைக் குறிப்பிடலாம். சமண அறிஞர்களான பேராசிரியர் அ.சக்கரவர்த்தி, திரு.டி.எஸ். ஸ்ரீபால் ஆகியவர்களோடும் சமண சமய

அமைப்புகளோடும் இவர் தொடர்பு கொண்டு வாழ்நாள் முழுதும் செயல்பட்டதை அறிய முடிகிறது.

வேங்கடசாமி அவர்கள் 1950களின் இறுதிக் காலங்களில் கி.பி. 3ஆம் நூற்றாண்டு தொடங்கி கி.பி. 9ஆம் நூற்றாண்டுக்கு இடைப்பட்ட காலங்களில் ஆட்சி புரிந்த மன்னர்களைப் பற்றிய ஆய்வில் ஈடுபட்டார். கல்வெட்டு, செப்பேடு போன்ற சாசனங்கள் புதிதாக வெளிக் கொண்டுவரப்பட்டன. தொல்பொருள் ஆய்வுகளும் நிகழ்த்தப் பெற்றன. பதிப்பிக்கப்பட்ட இலக்கியப் பிரதிகளில் வரலாறு தொடர்பான செய்திகள் புதிதாக அறியமுடிந்தது. இதனைப் பயன்படுத்தி மேற்குறித்த கால மன்னர்களைப் பற்றிய நூல்களை இவர் உருவாக்கினார். 'மகேந்திரவர்மன்' (1955) என்ற நூல் முதலில் வெளி வந்தது. இந்நூல் மகேந்திரவர்மன் காலத்தில் உருவாக்கப்பட்ட குகைக்கோயில்கள் பதினைந்து பற்றிய விரிவான விவரங்களைக் கொண்டுள்ளது. தமிழில் குகைக் கோயில்கள் பற்றிய விவரங்களை விவாதித்த முதல் நூலாக இதைக் கருத இயலும். தமிழகக் கோயில் கட்டடக் கலை வரலாறு தொடர்பான பல்வேறு விவரங்களை இந்நூல் முன் வைக்கிறது. மண்டளியிலிருந்து படிப்படியாகக் கற்றளிகள் உருவாக்கப்பட்ட வரலாறு; தளிகள் உருவாக்கப் பயன்படுத்தப்பட்ட பொருட்கள்; குறிப்பாகச் செங்கல், சுண்ணாம்பு, மரம் போன்ற விவரங்களை இந்நூல் வழி அறிய இயலும்.

மகேந்திரவர்மன் காலத்தில் உருவாக்கப்பட்ட சிற்பங்களின் தன்மைகள் குறித்தும் இந்நூல் வழி அறியலாம். இக்காலத்தில் வரையப்பட்ட ஓவியங்கள், தமிழக ஓவிய வரலாற்றில் முக்கிய மானவையாகும். இதனை இந்நூல் தெளிவுபடுத்துகிறது. இம்மன்னன் காலத்தில் இருந்த இசை பற்றிய குறிப்புகளும் தொகுக்கப்பட்டுள்ளன. மகேந்திர வர்மன் எழுதிய 'மத்த விலாசம்' நாடகத்தை மொழியாக்கம் செய்து, இந்நூலில் இணைத்துள்ளார். இம்மன்னன் காலத்திய தமிழ் இலக்கியம் பற்றிய விரிவான குறிப்புகளும் இந்நூலில் இடம்பெற்றுள்ளன.

மகேந்திரவர்மன் நூலைத் தொடர்ந்து 'வாதாபி கொண்ட நரசிம்மவர்மன்' (1957) என்ற நூலை உருவாக்கியுள்ளார். கி.பி. 630-668 வரை ஆட்சி புரிந்த இம் மன்னன் காலத்திய சமய நிலை என்பது, சமண, பௌத்த செல்வாக்குக் குறைந்தும், சைவ வைணவச் செல்வாக்கு மிகுந்தும் இருந்ததைத் தெளிவுபடுத்தியுள்ளார். இம் மன்னனின் சமகால அரசர்கள் தொடர்பான குறிப்புகளைக் கல்வெட்டுத் தரவுகள் வழி வெளிப்படுத்தியுள்ளார். ஹர்ஷவர்த்தனன், இரண்டாம் புலிகேசி, இரேணாடு ஏழாயிரம், கொடும்பாளூர் நாடு,

பாண்டிய நாடு, இலங்கைத்தீவு ஆகியவை தொடர்பான சாசனச் சான்றுகளை இந்நூலில் வெளிப்படுத்தியுள்ளார். சைவ அடியார்கள் பலர் இக்காலத்தில் வாழ்ந்தனர். இம்மன்னன் காலத்தில் ஏற்பட்ட பெரும் பஞ்சம் ஒன்றின் விளைவுகள் குறித்தும் அறிய முடிகிறது.

நரசிம்மவர்மன் காலத்தில் உருவாக்கப்பட்ட பாறைக் கோயில்கள் குறித்த தகவல்கள், அவற்றில் இடம் பெற்றுள்ள சிற்பங்கள் குறித்தும் அறிய முடிகிறது. இம்மன்னன் காலத்தில் உருவான சிற்ப வடிவங்கள் குறித்த விரிவான தகவல்களை இந்நூல் கொண்டுள்ளது. தமிழகச் சிற்ப வரலாற்றை அறிய இத்தகவல்கள் பெரிதும் உதவுகின்றன. பக்தி இயக்கத்தின் வீச்சு உருப்பெறத் தொடங்கியது இம்மன்னனின் காலத்தில்தான். அக்காலத்தில் பாடப்பட்ட தேவாரப் பாடல்கள், ஆழ்வார் பாடல்கள் ஆகியவை குறித்த விவரங்களை இந்நூல் புலப்படுத்துகிறது. மகேந்திரவர்மன் காலத்திலிருந்து நரசிம்மவர்மன் கால வளர்ச்சியைப் புரிந்து கொள்ள இந்நூல் உதவுகிறது.

மகேந்திரவர்மன், நரசிம்மவர்மன் ஆகியோர் குறித்த நூல்களைத் தொடர்ந்து, மூன்றாம் நந்திவர்மன் (1958) நூலை வேங்கடசாமி உருவாக்கியுள்ளார். பல்லவ மன்னர்களைப் பற்றித் தொடர்ச்சியான ஆய்வை இவர் மேற்கொண்டிருப்பதை அறிய முடிகிறது. கி.பி. 847 முதல் 872 வரை இம்மன்னன் ஆட்சி புரிந்தான். இம்மன்னன் காலத்தில் சைவ, வைணவ சமயம் செல்வாக்குப் பெற்றிருந்ததை இந்நூல் தெளிவுப்படுத்துகிறது. இசை, கட்டடம், சிற்பம் தொடர்பான பல்வேறு தகவல்களும் தொகுக்கப்பட்டுள்ளன. இம்மன்னன் மீது பாடப்பட்ட 'நந்திக் கலம்பகம்' என்னும் நூல், தமிழ் இலக்கிய வரலாற்றில் தனித்துப் பேசப்படும் நூலாகும். நந்திவர்மன் வரலாற்றை அறிய உதவும் அம்மன்னன் காலத்துச் சாசனங்களை இந்நூலில் ஆவணப்படுத்தியுள்ளார்.

வேங்கடசாமி அவர்கள் ஒவ்வொரு காலச் சூழலிலும் ஒரு குறிப்பிட்ட துறைத் தொடர்பான, தொடர்ச்சியான ஆய்வில் ஈடுபட்டதைக் காண முடிகிறது. சமயங்கள் தொடர்பான ஆய்வை 1930கள் தொடங்கி 1950கள் வரை நிகழ்த்தினர். 1950களின் இறுதியில் பல்லவ மன்னர்கள் தொடர்பான ஆய்வை நிகழ்த்தியிருப்பதைக் காணலாம். 1962ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம், அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறையின் சார்பில் மூன்று அறக்கட்டளைச் சொற்பொழிவுகளை வேங்கடசாமி நிகழ்த்தினார். இவற்றை 'சங்க கால தமிழக வரலாற்றில் சில செய்திகள்' (1970) என்னும் பெயரில் பின்னர் அப்பல்கலைக்கழகம் வெளியிட்டது. இச்சொற்பொழிவுகள்





மூலம் அவரது ஆய்வுப் பாதை வேறு திசைகளை நோக்கிச் சென்றதைக் காண முடியும். 'செந்தமிழ்ச் செல்வி' என்ற இதழில் அதன் தொடக்க காலத்திலிருந்தே வேங்கடசாமி ஆய்வுக் கட்டுரைகளை எழுதி வந்தார். இவ்விதழோடு தொடர்புடைய 'திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்' இவரது நூல்களை 1936 முதல் தொடர்ச்சியாக வெளியிட்டு வந்தது. சமண சமய அமைப்புகளோடு இருந்த தொடர்பு காரணமாக, இவரது சிறு நூல்களையும் கட்டுரைகளையும் அந்நிறுவனம் தொடர்பானவர்கள் வெளியிட்டு வந்தனர். அண்ணாமலைப் பல்கலைக்கழக அறக் கட்டளைச் சொற்பொழிவு, பல்கலைக்கழகங்களின் பேராசிரியர்கள் செய்த ஆய்வுகளின் மீது இவரது கவனத்தைத் திருப்பியது. அண்ணாமலைப் பல்கலைக்கழக அறக்கட்டளைச் சொற்பொழிவில் அதனை வெளிப்படுத்தினார்.

பேராசிரியர்கள் மு. இராகவையங்கார், சிவராசப் பிள்ளை, ச. வையாபுரிப்பிள்ளை, கே.என். நீலகண்ட சாஸ்த்திரியார் போன்றோர் ஆய்வுகளில் காணப்படும் முரண்களை வெளிப்படுத்தும் வகையில் அண்ணாமலைப் பல்கலைக்கழக அறக்கட்டளைச் சொற்பொழிவை நிகழ்த்தினார். பல்கலைக்கழக நிறுவனமயப்பட்ட ஆய்வாளர்கள்; சுதந்திரமான நிறுவனம் சாராத ஆய்வாளர்கள் என்ற முரண் அனைத்துக் காலச் சூழலிலும் செயல்பட்டு வந்திருப்பதைக் காண முடிகிறது. வேங்கடசாமி அவர்கள் தொல்காப்பியர் காலம் குறித்த மேற்குறிப்பிட்ட பேராசிரியர்களின் கருத்தை மறு ஆய்வு செய்தார். தொல்காப்பியர் காலம் குறித்த ஆய்வில் பயன்படுத்தப்படும் 'இறையனார் களவியல் உரை; தமிழகத்தின் வட எல்லை குறித்த விவரம், இலக்கண முறைகள், சொல்லாட்சிகள், (குறிப்பாக ஓரை) வச்சிர நந்தியின் தமிழ்ச்சங்கம் போன்றவை தொடர்பாக சிவராசபிள்ளை, வையாபுரிப்பிள்ளை ஆகியோர் கூறியுள்ள கருத்துக்களை, இலக்கிய சாசனச் சான்றுகளைக் கொண்டு மறு ஆய்வுக்கு உட்படுத்தியுள்ளார். கல்வெட்டுத் தரவுகள், வேங்கடசாமி அவர்களின் வாதத்தை உறுதிப்படுத்தும் வகையில் இருப்பதைக் காணலாம்.

இச்சொற்பொழிவின் அடுத்தடுத்த உரைகளில், தொல்காப்பியர், சங்க இலக்கியம் ஆகியவற்றில் விவாதிக்கப்படும் சொற்கள் குறித்த ஆய்வை நிகழ்த்தியுள்ளார். இதில் தமிழகச் சடங்குகள், மற்றும் நூல்களில் காணப்படும் செய்திகள் குறித்த பிழையான ஆய்வுகளை மறுமதிப்பீடு செய்துள்ளார். 'ஐயர் யாத்தனர் கரணம்' போன்ற தொடர்களின் பொருள் அமைப்புக்கு வேங்கடசாமி புதிய விளக்கம்

தருகிறார். திராவிட இயக்கம் தமிழ் நாட்டில் வளர்ச்சி பெற்றபோது, தமிழ் நூல்களின் காலப்பழமை, தமிழ்த்தேசீயஇனத்தின் அடையாளமாகக் கருதப்பட்டது. இந்நூல்களின் காலத்தைப் பின் தள்ளுவதை வேங்கடசாமி ஏற்றுக் கொள்ளவில்லை. இவற்றில் பேசப்படும் சடங்குகள் ஆரியர் மரபில் இல்லாதவை; தமிழருக்கு மட்டுமே உரியவை என்ற வாதங்களை, இச்சொற்பொழிவில் முன் வைத்தார். இச்சொற்பொழிவில் ஆதாரபூர்வமான ஆய்வுக் கருத்துக்களை முன் வைத்தார். இக்கருத்துகள் ஆய்வு உலகில் பரபரப்பை ஏற்படுத்தின.

அண்ணாமலைப் பல்கலைக்கழகச் சொற்பொழிவு தொடங்கி, பண்டைத் தமிழ் இலக்கிய இலக்கணங்கள் மற்றும் சாசனங்கள் ஆகியவற்றில் கவனம் செலுத்தத் தொடங்கினார். சங்ககாலத்தில் இருந்த மன்னர்கள் குறித்தும் மூவேந்தர்கள் ஆட்சிக்குப் பின் உருவானவர்களாகக் கருதப்படும் களப்பிரர் குறித்தும் தொல் லெழுத்துகள் குறித்தும் ஆய்வை மேற்கொண்டு, சங்க காலத்து வரலாற்றைப் பல பரிமாணங்களில் ஆவணப்படுத்தும் முயற்சியை மேற்கொண்டார். சங்ககாலத் தமிழரின் வாணிகம், சங்க கால விளை பொருள்கள் போன்றவை குறித்தும் ஆய்வுகளை மேற்கொண்டார். இவை 'பழங்காலத் தமிழர் வாணிகம்' (1976), 'சங்க காலத்துப் பிராமிக் கல்வெட்டெழுத்துகள்' (1981) என நூல்களாக வெளியிடப்பட்டன.

அண்ணாமலைப் பல்கலைக் கழக அறக்கட்டளைச் சொற் பொழிவுக்குப்பின், சென்னைப் பல்கலைக்கழக சொர்ணம்மாள் அறக்கட்டளைச் சொற்பொழிவை (1966) வேங்கடசாமி நிகழ்த்தினார். இச்சொற்பொழிவு, சென்னைப் பல்கலைக்கழகக் கீழ்த்திசையியல் ஆண்டு ஆய்விதழிலும் (தொகுதிXXIபகுதிI.1966) வெளியிடப் பட்டது. திராவிட இயக்கம் ஆட்சி அதிகாரம் பெறுவதற்கான வாய்ப்புகள் உருவான காலமும் இதுவாகும். பண்டைத் தமிழ் அரசர்களின் பெயர்களைத் திராவிட இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் சூட்டிக்கொண்ட காலமும் இதுவாகும். இச்சூழலில் சங்க இலக்கியங்கள், பல்கலைக்கழக வட்டாரங்களில் புதிய கண்ணோட்டத் தோடு ஆய்வு செய்யப்பட்டன. இப்பணியில் வேங்கடசாமி அவர்களும் இணைந்து கொண்டார்.

கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் சேரன் செங்குட்டுவன் ஆட்சி புரிந்ததாகக் கூறப்படுகிறது. இம்மன்னன் குறித்தும் இவரது தாயாதிகள் குறித்தும் 'பதிற்றுப்பத்து' என்ற தொகை நூலை அடிப்படையாகக்

கொண்டு ஆய்வு செய்துள்ளார். அகநானூறு, சிலப்பதிகாரம் ஆகியவற்றில் காணப்படும் செய்திகளைப் பயன்படுத்தியும் இம் மன்னன் பற்றிய வரலாற்றை உருவாக்கம் செய்துள்ளார். இம்மன்னன் காலத்தில் தான் தமிழ்க் காப்பியங்களான சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகியவை எழுதப்பட்டன. பத்தினி வழிபாட்டை உருவாக்கியவன் இம்மன்னன் என்பதைப் போன்ற பல தகவல்களை இச்சொற்பொழிவில் வெளிப்படுத்தியுள்ளார். இம்மன்னனின் சமகாலத்தில் அண்டை நாடுகளில் ஆட்சி புரிந்தவர்கள் குறித்த தகவல்களையும் தொகுத்துள்ளார். இச்சொற்பொழிவிற்காகத் தொடங்கிய ஆய்வு, பல தளங்களில் விரிந்து சென்று பல நூல்களையும் உருவாக்க இவருக்கு வாய்ப்பளித்திருப்பதைக் காணலாம்.

சேரன் செங்குட்டுவன் ஆய்வில் தொடங்கி, சங்க காலம் குறித்த விரிவான ஆய்வுகளை வேங்கடசாமி நிகழ்த்தியுள்ளார். அக்காலத்தில் தமிழகம், சோழநாடு, பாண்டிய நாடு, சேரநாடு, துளுநாடு (கொங்கணநாடு), தொண்டைநாடு (அருவாநாடு), கொங்குநாடு என்று ஆறு பகுதிகளாகப் பிரிவுபட்டிருந்ததாகத் தெளிவுபடுத்துகிறார். இப்பிரிவிற்கான வரை படத்தையும் இவர் உருவாக்கியுள்ளார். இந்தப் பின்புலத்தில், ஒவ்வொரு நாடு தொடர்பான ஆய்வுகளையும் மேற்கொண்டுள்ளார். 'துளுநாட்டு வரலாறு' (கி.பி 2ஆம் நூற்றாண்டு) (1966) என்ற நூலை உருவாக்கியுள்ளார். சங்க இலக்கியங்களில் காணப்படும் நன்ன மன்னர்களை அடிப்படையாகக் கொண்டு இவ்வரலாற்றைக் கட்டமைத்துள்ளார். இன்றைக்கு வடகேரளம் மற்றும் தென்கன்னட மாநிலப் பகுதியை அன்றைய துளுநாடு என்று இனம் கண்டுள்ளார். இன்றும் அங்கு துளுமொழி பேசப்படுகிறது.

மேற்குறித்த ஆய்வின் தொடர்ச்சியாக 'கொங்கு நாட்டு வரலாறு' (பழங்காலம் கி.பி. 250 வரையில்) (1974) என்ற நூலை உருவாக்கினார். சங்க இலக்கியம், சாசனங்கள் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு இந்நூலை எழுதியுள்ளார். இந்நாட்டில் ஆட்சிபுரிந்த மன்னர்கள், குறிப்பாகக் குறுநில மன்னர்கள், அந்நாட்டின் எல்லைப் பகுதிகள், அந்நாட்டில் வாழ்ந்த தமிழ்ப்புலவர்கள், உருவான இலக்கியங்கள், காணப்படும் சாசனங்கள் ஆகியவை குறித்த தகவல்களை இந்நூல் விவாதிக்கிறது. 1800 ஆண்டுகளுக்கு முன் கொங்கு நாடு மிக விரிந்த பகுதியாக இருந்தது. தற்போது மிகக் குறுகிய பகுதிக்கு மட்டுமே அப்பெயர் வழக்கில் உள்ளது என்றும் ஆய்வு செய்துள்ளார்.

துளுநாடு, கொங்குநாடு ஆகியவற்றைப் பற்றிய நூல்களைத் தொடர்ந்து, தமிழக அரசு உருவாக்கிய தமிழக வரலாறு எழுதும் தமிழ் நாட்டு வரலாற்றுக் குழுவிலும் இடம் பெற்றார். 'தமிழ் நாட்டு வரலாறு' சங்க காலம் - அரசியல் (1983) என்ற இரண்டாம் தொகுதியில், சென்னைப் பல்கலைக்கழகத்தில் நிகழ்த்திய சேரன் செங்குட்டுவன் ஆய்வின் விரிவாக, சேரர் குறித்த விரிவான தகவல்களைத் தொகுத்துள்ளார். சங்ககாலச் சோழர்கள் குறித்த விரிவான ஆய்வையும் இந்நூலில் மேற்கொண்டுள்ளார். பாண்டியர் குறித்தும் ஆய்வு செய்துள்ளார். கி.பி. 3 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட தமிழகம், ஆறு பிரிவுகளாக இருந்தது என்ற அடிப்படைக் கருது கோளை இவர் உருவாக்கியுள்ளார். வேங்கடசாமி அவர்கள் தமது அனைத்து ஆய்வுகளிலும் இலங்கை தொடர்பான குறிப்புகளைக் கொடுப்பதை மரபாகக் கொண்டுள்ளார். 'தமிழ்நாட்டு வரலாறு' நூலில் 'இலங்கையில் தமிழர்' என்ற ஆய்வை மேற்கொண்டுள்ளார். இவ்வகையில் கி.மு. 2 முதல் கி.பி. 3 ஆம் நூற்றாண்டு முடிய உள்ள சுமார் ஐநூறு ஆண்டுகளின் தமிழக வரலாற்றை எழுதுவதில் வேங்கடசாமி அக்கறை காட்டியதை நாம் அறிய முடிகிறது.

சங்க காலத்துக்குப் பிற்பட்ட காலத்தில் தமிழகத்தில் களப்பிரர்கள் என்ற மன்னர்கள் ஆட்சி புரிந்தனர். இது தொடர்பான பல்வேறு முரண்பட்ட ஆய்வுகள் வெளிவந்துள்ளன. இக்காலம் தமிழர்களின் வரலாற்றில் 'இருண்ட காலம்' என்று மரபு வழிப்பட்ட வரலாற்று ஆசிரியர்களால் குறிக்கப்பெறும். இம்மன்னர்கள் குறித்த ஆய்வை வேங்கடசாமி விரிவாக ஆராய்ந்துள்ளார். இம்மன்னர்களின் நதிமூலம், இவர்கள் காலத்துப் பிற தமிழ் நாட்டு அரசர்கள், சிற்றரசர்கள் ஆகியவர்களின் நிலை, சமயச் செயல்பாடுகள், கலைகள் ஆகியவை குறித்து இந்நூல் பேசுகிறது; இவ்வகையில் கி.பி. 3 முதல் கி.பி. 9ஆம் நூற்றாண்டு முடிய தொடர்ச்சியான வரலாற்றைத் தமது ஆய்வுப் போக்கில் வெவ்வேறு காலங்களில் வேங்கடசாமி எழுதியிருப்பதைக் காணலாம். இவற்றைத் தொகுத்துத் தனித்தனித் தொகுதிகளாகக் கால வரிசையில் அமைந்த தமிழக வரலாறாக வெளியிட இயலும். தமிழக வரலாற்றைத் தொகுப்பதில் இவ்வகையான ஒழுங்கு முறையை அவர் கொண்டிருப்பதை நாம் புரிந்து கொள்ள முடிகிறது. தமிழக வரலாற்றைக் கட்டமைத்து ஒழுங்குபடுத்தியதில் வேங்கடசாமி அவர்களுக்குத் தனித்த இடமிருப்பதை உணரலாம்.

தமிழியலுக்குத் தேவையான பல்வேறு ஆவணங்களையும் தொகுத்து ஆய்வு செய்யும் பணியை இவர் மேற்கொண்டு

வந்துள்ளார். 'சாசனச் செய்யுள் மஞ்சரி' (1959), 'மறைந்து போன தமிழ் நூல்கள்' (1959), 'பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம்' (1962) ஆகியவை இவருடைய தொகுப்புச் சார்ந்த ஆய்வு நூல்களாகும். இவருடைய இத்துறை தொடர்பாகவே தமிழ் ஆய்வாளர்கள், விதந்து கூறுவதைக் கேட்க முடிகிறது; ஏனெனில் இத்தரவுகளை இந்நூல்களில் மட்டுமே பெற முடியும்; அதன் மூலம் பெறும் பயன்கள் மிகுதியாகும்.

1952ஆம் ஆண்டு தொடங்கி, வெறும் பெயர் மட்டும் அல்லது சில பாடல்கள், சில நூற்பாக்கள் என்ற அளவில் அறியப்படும் தமிழ் நூல்களை இவர் தொகுத்து வந்தார். தொகுத்து வந்த இத்தரவுகள், அப்போது தொடராக 'செந்தமிழ்ச் செல்வி' இதழிலும் வெளியிடப் பட்டன. இவை 15 ஆண்டுகளுக்குப் பிறகு நூல் வடிவில் 'மறைந்து போன தமிழ் நூல்கள்' என்று கொண்டு வரப்பட்டது. இவ்வகையான தொகுப்புத் தமிழியலின் பல்வேறு புரிதலுக்கு வாய்ப்பளிப்பதாக அமைகிறது. வேங்கடசாமி அவர்கள் 19ஆம் நூற்றாண்டின் நவீனத் தமிழ்ச் சமூக வரலாற்றை அறிவதற்கான தொகுப்பாக, 'பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம்' என்ற நூலை எழுதினார்.

பதினெட்டாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம் தொடர்பான நூல் எழுதியிருப்பதாகக் குறிப்பு காணப்படுகிறது. ஆனால் நூல் வெளிவந்ததாக அறிய இயலவில்லை. இக்குறிப்பு வேங்கடசாமி அவர்களின் முறைப்படுத்தப்பட்ட ஆய்வுப் போக்கைப் புரிந்து கொள்ள உதவுகிறது. தமிழர்களின் பல்வேறு கலை வடிவங்கள் பற்றிய விரிவான வரலாற்றுப் போக்கில் அமைந்த நூல்கள் தமிழில் குறைவு. இலங்கை தொடர்பான கலை வரலாறு எழுதப்பட்டிருக்கும் அளவிற்குத் தமிழகக் கலை வரலாறு எழுதப்பட்டுள்ளதா? என்ற ஐயம் எழுகிறது. வேங்கடசாமி அவர்கள் தமிழர்களின் கலை வரலாற்றை எழுதுவதில் அக்கறை காட்டியுள்ளார். அவை தனித்த நீண்ட நூல்களாக அமையவில்லை. மகாபலிபுரத்துச் சிற்பங்கள் தொடர்பான (1948) ஆய்வைத் தொடங்கி, பல்லவ மன்னர்கள் காலத்து பல்வேறு கட்டடம் மற்றும் சிற்பக்கலை தொடர்பான விவரங்களை ஆங்காங்கே குறித்துள்ளார். இசை குறித்த ஆய்வுக் குறிப்புகளையும் கூத்து குறித்தும் எழுதியுள்ளார். 'தமிழர் வளர்த்த அழகுக்கலைகள்' (1956) என்னும் நூல் பாடப் புத்தக நோக்கில் உருவாக்கப்பட்ட தரமான நூல்.

''தற்காலத்துத் தமிழ்ச் சமூகம், தனது பழைய அழகுக் கலைச் செல்வங்களை மறந்து விட்டது; 'தன்பெருமை தான் அறியா' சமூகமாக இருந்து வருகிறது. 'கலை கலை' என்று இப்போது

கூறப்படுகிறதெல்லாம் சினிமாக் கலை, இசைக் கலைகளைப் பற்றியே. இலக்கியக் கலை கூட அதிகமாகப் பேசப்படுவதில்லை. ஏனைய அழகுக் கலைகளைப் பற்றி அறவே மறந்துவிட்டனர் இக்காலத்துத் தமிழர். மறக்கப்பட்ட அழகுக் கலைகளைப் பற்றி மேல்வாரியான செய்திகளே இந்நூலில் பேசப்படுகின்றன. அழகுக் கலைகளின் முற்ற முடிந்த செய்திகளைக் கூறுவது இந்நூலின் நோக்கம் அல்ல. அழகுக் கலைகளைப் பற்றிய மேல்வரம்பான, பொதுத் தன்மையைக் கூறும் நூல் ஒன்று வேண்டியிருப்பதை உணர்ந்தே இந்நூல் எழுதப்பட்டது'' (1956: முன்னுரை)

இக்குறிப்பு வேங்கடசாமி அவர்களின் கலைகள் பற்றிய ஆய்வுப் போக்கைப் புரிந்து கொள்ள உதவுகிறது. இந்நூலில் கட்டடக்கலை பற்றிய நுண்ணிய செய்திகள் புதிதாக விவாதிக்கப் பட்டிருப்பதை அறியலாம். தமிழகக் கட்டடக்கலை வரலாற்றில் சங்ககாலக் கட்டடக்கலை பற்றிய புதிய மனப்பதிவை இந்நூல் தருகிறது. இதுவரை பல்லவர் காலத்திற்கு முன் கட்டப்பட்ட கோயில்கள் இருந்ததாக யாரும் கருதுவதில்லை. இந்நூலில் செங்கல் மற்றும் மரங்களைக் கொண்டு கோயில்கள் கட்டப்பட்டதைத் தெளிவுபடுத்துகிறார். தமிழருக்கான, தனித்த சிற்பப் பாணி குறித்தும் பேசுகிறார். தமிழர்களின் இசைக்கலையின் செழுமையை விதந்து பேசுகிறார். தமிழரின் கூத்துக்கலை குறித்து இலக்கிய, கல்வெட்டுச் சான்றுகளைத் தொகுத்து விவாதித்துள்ளார். இவ்வகையில் இந்நூல் ஆழமான விவாதங்களை எழுப்புவதற்கான களன்களைக் கொண்டுள்ளது. ''சித்தாந்தக் கருத்தும் ஆகமக் கருத்தும் ஒன்று சேர்ந்து அமைந்ததுதான் நமது சிற்பக் கலைகள்... எனவே சிந்தாந்த நூல், ஆகமநூல், சிற்ப நூல் மூன்றையும் ஒருங்கே கற்க வேண்டும்... (முன்னுரை: 1967) என்று எழுதியுள்ள வேங்கடசாமி அதனை நடைமுறைப்படுத்தி எழுதிய நூலாக, 'இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம்' நூலைக் (1967) கருத முடியும். இந்நூல் நடராசர் சிற்பம் குறித்த பல அரிய தகவல்களை உள்ளடக்கியுள்ளது. பல்வேறு தருணங்களில் எழுதிய கட்டுரைகளின் தொகுப்பாக 'நுண்கலைகள்' (1967) என்ற நூல் வெளி வந்துள்ளது. இலக்கியங்களில் காணப்படும் தரவுகளைக் கொண்டு, இந்நூலில் உள்ள கட்டுரைகள் நுண்கலைகள் பற்றி எழுதப்பட்டுள்ளன. வேங்கடசாமி அவர்கள் எழுதிய கலைகள் பற்றிய செய்திகளைத் தனியாக முறைப்படுத்தித் தொகுத்து வரன்முறையான கலை வரலாற்றைக் கண்டறிய இயலும்.

இலக்கியங்கள், காவியங்கள், புராணங்கள், வாய்மொழி மரபு ஆகியவற்றில் இசையின் சிறப்பைப் புலப்படுத்தும் வகையில்

அமைந்துள்ள கதைகளை இவர் தொகுத்துள்ளார். அது 'இசைவாணர் கதைகள்' (1977) என்ற பெயரில் நூலாக வெளிவந்துள்ளது. ''மதக்காழ்ப்பும் வெறுப்பும் உள்ள நமது நாட்டில்', பல மதச்சார்பான இந்தக் கதைகள் மறைந்துக் கிடக்கக் கூடாது. இந்தப் பலமதக் கதைகளை எல்லோரும் படித்துப் போற்ற வேண்டும் என்னும் எண்ணம் தான் இந்தக் கதைகளைத் தொகுப்பதற்குத் தூண்டிற்று'' (முன்னுரை: 1975) என்று இந்நூல் பற்றிக் கூறுகிறார். வேங்கடசாமி அவர்களின் ஆய்வுப் பாதையில் கலைகளைப் பற்றியவை தனித்த கண்ணோட்டமுடையவை. கலைக்கல்லூரி மாணவனாகச் சென்று, இடையில் வேறு துறைக்குச் சென்றாலும் கலை பற்றிய ஈடுபாடு உடையவராகவே இருந்தார்.

தமிழ் ஆய்வு மரபில் சொல் ஆய்வுகளை மேற்கொள்ளாத ஆய்வாளர் இல்லை எனலாம். நீண்ட வரலாறு கொண்ட மொழியின் சொற்களில் இவ்வகையான ஆய்வுக்கான ஏதுக்கள் மிகுதியாகும். வேங்கடசாமி அவர்களும் தொடர்ச்சியாக சொல்லாய்வுப் பணியை மேற்கொண்டு வந்துள்ளார். 'செந்தமிழ்ச் செல்வியில் தொடர்ந்து இப்பணியைச் செய்து வந்தார். இவற்றைத் தொகுத்து, 'அஞ்சிறைத் தும்பி' (1958) என்ற தொகுப்பாகவும் வெளியிட்டார். இலக்கியங் களில் பயன்படுத்தப்படும் சொற்களைவிட, கல்வெட்டுக்களில் உள்ள சொற்கள் குறித்தே இவர் பெரிதும் ஆய்வு செய்தார். தொல் காப்பியம், சிலப்பதிகாரம் ஆகியவற்றின் காலங்களைக் கண்டறிய சிவராசபிள்ளை, வையாபுரிப்பிள்ளை ஆகியோர் சொல் ஆராய்ச்சியில் ஈடுபட்டனர். அதன் மூலம் கி.பி. 5 மற்றும் கி.பி. 8ஆம் நூற்றாண்டு என்று முறையே அவற்றின் காலத்தை வையாபுரிப் பிள்ளை மதிப்பீடு செய்தார். வையாபுரிப்பிள்ளை ஆய்வு செய்த சொற்களையே இவர் ஆய்வு செய்து அவற்றின் பழமையை நிறுவியுள்ளார். 'பங்காளர்', 'யவனிகா' போன்ற சொற்கள் குறித்த ஆய்வுகள் இந்தப் பின்புலத்தில் மிக முக்கியமான தரவுகளாகும். சிலப்பதிகாரப் பழமையை உறுதிப்படுத்த 'பங்காளர்' சொல்லும், தமிழ் அரங்கின் பழமையைக் காட்ட 'யவனிகா' என்ற சொல்லும் தனித்த தரவுகளாக உதவுகின்றன. கல்வெட்டுச் சொற்களை ஆய்வு செய்து பல வரலாற்றுத் தகவல்களை இவர் கண்டு பிடித்துள்ளார். 'தமிழ்' என்ற சொல்லுக்கு 'அகம்' என்ற பொருள் இருப்பதை, தொடர்ச்சியான ஆய்வாக இவர் மேற்கொண்டிருந்தார். புதிது புதிதாகக் கிடைக்கும் தரவுகளைத் தொகுத்து 'இறையனார் அகப்பொருள் ஆராய்ச்சி (1944) என்று தொடங்கிய சிறு நூல், பின்னர் மேலும் மேலும் தரவுகள் கூடிய கட்டுரைகளாக

எழுதப்பட்டன. ஒரு பொருள் குறித்துத் தொடர்ச்சியாகக் கவனம் செலுத்தும் பண்பை நாம் அறியலாம். இவரது பல்வேறு தன்மையுடைய கட்டுரைகளின் தொகுப்பு 'சமயங்கள் வளர்த்த தமிழ்' (1966) என்ற பெயரில் வெளியிடப்பட்டது.

வேங்கடசாமி அவர்கள் பாலி, மலையாளம், கன்னடம், சமசுகிருதம், ஆங்கிலம் ஆகிய மொழிகளில் பயிற்சியுடையவராக இருந்தார். மலையாளத்திலிருந்து சில மொழி பெயர்ப்புகளைச் செய்துள்ளார். மகேந்திரவர்மன் இயற்றிய 'மத்த விலாசம்' (1950) என்ற நாடக நூலை ஆங்கிலம் வழியாக இவர் தமிழாக்கியுள்ளார். இந்நூல் அ. சக்ரவர்த்தி நயினார் அவர்களால் சிறு நூலாக வெளி யிடப்பட்டுள்ளது. இவ்வகையில் மொழிபெயர்ப்புப் பணியிலும் இவர் ஈடுபட்டுள்ளார்.

'மயிலை நேமிநாதர் பதிகம்' (1955) என்ற நூலை ஓலைச் சுவடியிலிருந்து பதிப்பித்துள்ளார். கல்வெட்டுக்களிலிருந்து பதிப்பித்த நூல் 'சாசனச் செய்யுள் மஞ்சரி' (1959) ஆகும். இவ்வகையில் மரபு சார்ந்த பதிப்புப் பணியிலும் இவர் ஈடுபட்டதை அறிய முடிகிறது. 'மனோன்மணீயம்' நாடக நூல், 1922இல் ச. வையாபுரிப்பிள்ளையால் பதிப்பிக்கப்பட்டது. தொடர்ந்து அந்நூல் மாணவர்களின் பாடநூலாக இருந்து வருகிறது. தமிழ்ப் பாடத் திட்டத்தில், தொடர்ச்சியாக நாடக நூலாக அதுவே பயிற்றுவிக்கப்பட்டு வருகிறது. இந்நூலுக்குக் குறிப்புரை எழுதும் பணியை (1961) வேங்கடசாமி மேற் கொண்டுள்ளார். பதிப்பகத்தார் குறிப்புரை எழுதக் கேட்டிருந்தாலும், குறிப்புரையோடு பதிப்புப் பணியையும் இவர் மேற் கொண்டிருப்பதைக் காண முடிகிறது. இந்நூலுக்கு வேங்கடசாமி அவர்கள் எழுதியுள்ள முன்னுரையில் 'பொது மக்களுக்காக நாடக நூல்கள் எழுதப்படுவதில்லை. நாடகக் கலைஞர்களுக்காகத்தான் எழுதப்படுகின்றன.' இதனால்தான் தமிழில் நாடகப் பிரதிகள் இல்லை. கலைஞர்கள் வாய்மொழி மரபாகவே நாடகப் பிரதிகளைப் போற்றி வந்தனர் என்று கூறுகிறார். இச்செய்திகள் ஆழமான பொருளுடையவை. தெருக்கூத்து குறித்த புரிதலற்ற பார்வையையும் இம்முன்னுரையில் வெளிப்படுத்தியுள்ளார். இவ்வகையில் மொழிபெயர்ப்பு, பதிப்பு, குறிப்புரை எழுதுதல் ஆகிய பணிகளிலும் வேங்கடசாமி ஈடுபட்டதை அறிய முடிகிறது.

''நான் கதைகளையும் நவீனங்களையும் எழுதுகிறவன் அல்லன். வரலாற்று ஆராய்ச்சி நூல்களையும் தமிழ் இலக்கிய ஆராய்ச்சி நூல்களையும் எழுதுகிறவன் நான். ஆராய்ச்சி நூல்களைப்

பெரும்பான்மையோர் படிப்பதில்லை. மிகச் சிறுபான்மையோரே படிக்கின்றனர். இதை நான் நன்றாக அறிவேன். மிகச் சுருங்கிய தொகையினர்தான் படிக்கிறார்கள் என்பதை நன்றாகத் தெரிந்தே ஆராய்ச்சி நூல்களை எழுதுகிறேன்.'' (முன்னுரை: 1977) இவ்வரிகள் வேங்கடசாமி அவர்களின் ஈடுபாட்டைத் தெளிவுபடுத்தும். எண்பது ஆண்டுகள் வாழ்ந்து மறைந்த இப்பெரியவரின் ஆய்வுச் சுவடுகளைக் கூர்ந்து நாம் கவனித்தால், அவரது ஆய்வுப் பாதையைப் பின் கண்ட வகையில் தொகுத்துக் கொள்ளலாம்.

- *சுயமரியாதை இயக்க இதழ்களில் செய்திக் கட்டுரைகளை எழுதுவதைத் தமது தொடக்க எழுத்துப் பயிற்சியாக இவர் கொண்டிருந்தார். அது இவருடைய கண்ணோட்ட வளர்ச்சியில் குறிப்பிடத்தக்க செல்வாக்கைச் செலுத்தியுள்ளது.*

- *கிறித்தவ சபைகளின் வருகையால் தமிழில் உருவான நவீன வளர்ச்சிகளைப் பதிவு செய்யும் வகையில் தமது முதல் நூலை இவர் உருவாக்கினார். தமிழ் உரைநடை, தமிழ் அச்சுநூல் போன்ற துறைகள் தொடர்பான ஆவணம் அதுவாகும்.*

- *பௌத்தம் தமிழுக்குச் செய்த பங்களிப்பை மதிப்பீடு செய்யும் நிலையில் இவரது அடுத்தக் கட்ட ஆய்வு வளர்ந்தது. பௌத்தக் கதைகள் மொழியாக்கம் மற்றும் தொகுப்பு, புத்தஜாதகக் கதைத் தொகுப்பு, கௌதம புத்தர் வாழ்க்கை வரலாறு என்ற பல நிலைகளில் பௌத்தம் தொடர்பான ஆய்வுப் பங்களிப்பை வேங்கடசாமி செய்துள்ளார்.*

- *சமண சமயம் மீது ஈடுபாடு உடையவராக வேங்கடசாமி இருந்தார். மணிமேகலை, சீவகசிந்தாமணி, ஆகியவற்றை ஆய்வதின் மூலம் தமிழ்ச்சூழலில் சமண வரலாற்றை ஆய்வு*

செய்துள்ளார். சமண சமய அடிப்படைகளை விரிவாகப் பதிவு செய்துள்ளார். சமணச் சிற்பங்கள், குறித்த இவரது ஆய்வு தனித்தன்மையது.

- பல்வேறு சாசனங்கள் புதிதாகக் கண்டுபிடிக்கப் பட்டன. ஓலைச்சுவடிகளிலிருந்து இலக்கியங்கள், இலக்கணங்கள் அச்சு வாகனம் ஏறின. இந்தப் பின்புலத்தில் கி.மு. 5 முதல் கி.மு. 9ஆம் நூற்றாண்டு முடிய உள்ள தமிழ்ச் சமூகத்தின் ஆட்சி வரலாற்றை இவர் ஆய்வு செய்தார். பல்லவ மன்னர்கள் மூவர் குறித்த தனித்தனி நூல்களைப் படைத்தார். இதில் தமிழகச் சிற்பம் மற்றும் கோயில் கட்டடக்கலை வரலாற்றையும் ஆய்வு செய்தார்.

- அண்ணாமலைப் பல்கலைக்கழக அறக்கட்டளைச் சொற்பொழிவை அடிப்படையாகக் கொண்டு, தமிழ் நூல்களின் கால ஆய்விலும் இவர் அக்கறை செலுத்தினார். தொல்காப்பியம், சிலப்பதிகாரம் குறித்த கால ஆய்வில் ச. வையாபுரிப்பிள்ளை போன்றோர் கருத்தை மறுத்து ஆய்வு நிகழ்த்தி யுள்ளார். இச் சொற்பொழிவின் இன்னொரு பகுதியாக சங்க காலச் சமூகம் தொடர்பான ஆய்வுகளிலும் கவனம் செலுத்தினார்.

- சென்னைப் பல்கலைக்கழக அறக்கட்டளைச் சொற் பொழிவில் சேரன் செங்குட்டுவனை ஆய்வுப் பொருளாக்கினார். இதன் தொடர்ச்சியாக கி.பி. 3ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட தமிழகத்தின் வரலாற்றைப் பல நூல்களாக எழுதியுள்ளார். சேர சோழ பாண்டியர், பல குறுநில மன்னர்கள் குறித்த விரிவான ஆய்வை வேங்கடசாமி நிகழ்த்தியுள்ளார்.

இதன் தொடர்ச்சியாகக் களப்பிரர் தொடர்பான ஆய்வையும் செய்துள்ளார். இவ்வாய்வுகளின் ஒரு பகுதியாக அன்றைய தொல்லெழுத்துகள் குறித்த கள ஆய்வு சார்ந்து, ஆய்வுகளை மேற் கொண்டுள்ளார்.

■ ஒவ்வொரு தேசிய இனத்திற்கும் அதன் பாரம்பரியச் செழுமை குறித்து அறியும் தரவுகள் தேவைப் படுகின்றன. இவற்றை ஆவணப்படுத்துவது மிகவும் அவசியமாகும். மறைந்து போனவற்றைத் தேடும் முயற்சி அதில் முக்கியமானதாகும். இப் பணியையும் வேங்கடசாமி மேற்கொண்டிருந்தார். அரிய தரவுகளை இவர் நமக்கு ஆவணப்படுத்தித் தந்துள்ளார்.

■ தமிழர்களின் கலை வரலாற்றை எழுதுவதில் வேங்கடசாமி அக்கறை செலுத்தினார். பல அரிய தகவல்களை இலக்கியம் மற்றும் சாசனங்கள் வழி தொகுத்துள்ளார். அவற்றைக் குறித்து சார்பு நிலையில் நின்று ஆய்வு செய்துள்ளார். ஆய் வாளருக்குரிய நேர்மை, விவேகம், கோபம் ஆகியவற்றை இவ்வாய்வுகளில் காணலாம்.

■ பதிப்பு, மொழிபெயர்ப்பு ஆகிய பணிகளிலும் வேங்கடசாமி ஈடுபட்டதை அறிய முடிகிறது.

■ இவரது ஆய்வுப்பாதையின் சுவடுகளைக் காணும் போது, தமிழியல் தொடர்பான ஆவணப் படுத்தம், தமிழருக்கான வரலாற்று வரைவு, தமிழ்த் தேசிய இனத்தின் கலை வரலாறு மற்றும் அவைகள் குறித்த இவரது கருத்துநிலை ஆகிய செயல் பாடுகளை நாம் காணலாம்.

---

# 2

# ஆவணப் பணி

அச்சு ஊடகம், ஓலைச் சுவடி, கல்வெட்டுச் சாசனங்கள், சிற்பங்கள், ஓவியங்கள் ஆகிய துறைகளில் வேங்கடசாமி அவர்கள் நிகழ்த்திய ஆவணப்பணி பற்றிப் பேசப்பட்டுள்ளது.

தேசிய இனங்களின் வரலாறு மற்றும் அதன் பண்பாட்டுத் தன்மைகள், தேவைகட்கு ஏற்பக் காலந்தோறும் எழுதப்படுகின்றன. இவ்விதம் எழுதுவதற்கு அடிப்படையான ஆவணங்கள் தேவைப் படுகின்றன. இதனால்,புதிது புதிதாக ஆவணங்கள் அறியப் படுகின்றன. 19, 20 ஆம் நூற்றாண்டுகளில் இவ்வகையான தேவை படிப்படியாக வளரத் தொடங்கியது. சமூகத்தில் உருவாகும் புதிய மாற்றங்களும் இவ்வகைத் தேவையை வலியுறுத்துகின்றன. தமிழ்த் தேசிய இனம் தொடர்பான புதிய கருத்தாடல்கள் 19 ஆம் நூற்றாண்டின் இறுதி, 20 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் உருவாயின. ஐரோப்பிய நாடுகளிலிருந்து ஆசிய நாடுகளுக்கு வருகை புரிந்த ஏசு சபைப் பாதிரியார்கள் மற்றும் அரசு நிர்வாக அதிகாரிகள், பழம் ஆவணங்கள் மீது கவனம் செலுத்தினர். குடியேறியுள்ள சூழலை அறிதல், சமயத் தேவைகளுக்காக மக்களை அறிதல், நிர்வாகத் தேவைகளுக்காக வரலாற்றை அறிதல் மற்றும் புரிந்து கொள்ளல் என்ற கண்ணோட்டங்களில், ஆவணங்கள் குறித்த தேவை ஐரோப்பியருக்கு ஏற்பட்டது. இதனைக் கல்விப் புலமாகப் பின்னர் வளர்த்தெடுத்தனர்.

ஐரோப்பிய அறிஞர்கள், இந்தியாவில் இருக்கும் பழம் சின்னங்கள் (Antiquities) தொடர்பாக அக்கறை செலுத்தினர். இராபர்ட் சீவல் போன்றவர்கள், இந்தியாவின் பழம் சின்னங்களைத் தொகுத்து வெளியிடத் தொடங்கினர். இத்தொகுப்புகள், இந்திய வரலாறு தொடர்பான ஆவணங்களாக மதிக்கப்பட்டன. இந்தியத் தொல்லியல் துறை உருவாக்கப்பட்டது. இதன் மூலம் தொடர்ந்து அறிக்கைகள் வெளிவரத் தொடங்கின. அலெக்சாண்டர்

கன்னிங்ஹாம், ஜான் மார்ஷல், மார்டிமர் வீலர் ஆகியவர்களின் சிறப்பான செயல்பாடுகளால், இந்தியாவில் பல்வேறு அகழ் வாய்வுகள் நிகழ்த்தப்பட்டன. பல இடங்களில் காணப்பட்ட கல்வெட்டுகள் தொகுக்கப்பட்டுத் தொகுதிகளாக வெளிவரத் தொடங்கின. தனிப்பட்ட நிறுவனங்களும் இவ்வகைப் பணிகளில் அக்கறை காட்டத் தொடங்கின. தொல்லெழுத்துகள் கண்டறியப் பட்டன. இவை தொடர்பான ஆய்வுகளும் முன்னெடுக்கப்பட்டன.

தென்னிந்தியப் பகுதிகளில் மிகுதியான பழம் சின்னங்கள் அறியப்பட்டன. இவை குறித்த ஆய்வு கீழ்த்திசையியல் ஆய்வாகவும் உருப்பெறத் தொடங்கியது. பூனா, சென்னை, திருச்சூர், கல்கத்தா முதலிய இடங்களில் கீழ்த்திசை ஆய்வு நிறுவனங்கள் உருப்பெற்றன. தமிழ், சமஸ்கிருதம், மராத்தி, மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகிய மொழிகள் சார்ந்த ஆவணங்கள் தொகுக்கப்பட்டன. தமிழ்மொழி சார்ந்த ஆவணங்கள் மிகுதியாகத் தொகுக்கப்பட்டதை அறிய முடிகிறது. தொகுக்கப்பட்ட கல்வெட்டுகளில் எழுபது சதவீதம் தமிழ் தொடர்பான கல்வெட்டுகள் ஆகும். தென்னிந்திய மொழிகளில், தமிழ் மொழியில் அதிகமான ஆவணங்கள் கிடைத்த பின்புலத்தில், தமிழியல் ஆய்வின் முக்கியத்துவம் உணரப்பட்டது. ஆங்கில மொழி வழி இவ்வகை ஆய்வுகள் நிகழ்த்தப்பட்டன.''மெட்ராஸ் இராஜதானியின் பூகோளவியல் சார் கல்வெட்டுகளின் பட்டியல்'' (Topographical list of Madras Presidency - 1916) என்ற தொகுதிகளும். இராபர்ட் சீவல் அவர்களின், ''தென்னிந்திய வரலாற்றுக் கல்வெட்டுகள்''(1932) என்ற நூலும் குறிப்பிடத்தக்க ஆவணங்களாகும். இத்தொகுப்புகள் வழி பல்வேறு புதிய தரவுகள் கிடைத்தன. இராபர்ட் சீவல் தென்னிந்திய ஆட்சியாளர்களின் 'குடிவழிமரபுப்பட்டியலை', மேற்குறித்த ஆவணங்களின் அடிப் படையில் உருவாக்கினார். இந்தப் பின்புலத்தில் வேங்கடசாமி அவர்களின் ஆவணத் தொகுப்புப் பணியைக் காண இயலும்.

அடிப்படையான தரவுகள் இன்றி ஆய்வாளனால் செயல்பட இயலாது. தமிழியல் தொடர்பான ஆய்வில், முனைப்போடு செயல்படத் தொடங்கிய வேங்கடசாமி அவர்கள், ஆய்வுக்குத் தேவையான அடிப்படை ஆவணத்தொகுப்பில் கவனம் செலுத்தத் தொடங்கினார். அவ்விதம் அவர் தொகுத்த ஆவணங்களின் சிறப்பு மற்றும் அவை வரலாறு எழுதுவதற்கு எவ்வகையில் அடிப்படையாக அமைகின்றன என்பது குறித்து அறிவது அவசியமாகும். வேங்கடசாமி அவர்கள் தொடக்கத்தில், பத்திரிகைகளில் கட்டுரை எழுதுபவராகவே வெளிப்பட்டார். அவை சீர்திருத்தக் கருத்துகளை

அடிப்படையாகக் கொண்ட கட்டுரைகள் ஆகும். இவ்வகைக் கட்டுரைகளின், ஊடாகத் தர்க்க போக்கில் அணுகும் முறையைக் கொண்டிருந்தார். இவ்வகை அணுகுமுறைக்கு மிகுதியான தரவுகள் தேவைப்பட்டன. இவ்வகையில் ஆவணத் தொகுப்புகளில் அக்கறை செலுத்தத் தொடங்கினார். தொடக்க காலத்தில் 'லக்ஷ்மி' பத்திரிகையில் வெளியிட்ட 'வெண்பா நூல்களின் பட்டியல்', 'காலக்குறிப்பு' ஆகியவை இவ்வகையில் குறிப்பிடத்தக்கவை. தமிழ் அச்சு ஊடகம் தொடர்பாகவே தமது முதல் நூலை வேங்கடசாமி வெளியிட்டார். 'கிறித்துவமும் தமிழும்' என்ற அந்நூல் தமிழில் அச்சு உருவான பின்பு, தமிழ் நூல் வெளியிடும் போக்குகளில் ஏற்பட்ட மாற்றங்களைப் பதிவு செய்யும் வகையில் அமைந்திருக்கிறது. 1835-1935 இடைப்பட்ட காலத்தின் தமிழ் அச்சு ஊடகச் செயல்பாடுகளை ஆவணப்படுத்தக் கால்கோளிட்ட முதல் நூல் இது. இக்காலங்களில் கிறித்துவப் பாதிரியார்களே இப்பணியில் பெரிதும் ஈடுபட்டனர். எனவே அதனை முதன்மைப்படுத்தி, இந்த ஆவணத்தை உருவாக்கினார்.

''தமிழ்மொழிக்கு ஏற்பட்ட மாறுதல் அல்லது வளர்ச்சி அனைத்தும் பாதிரிமார்களால் உண்டானவையே. இல்லறத்தாராகிய ஐரோப்பிய உத்தியோகத்தர்களால் தமிழுக்கு அதிகமாக யாதொன்றும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. நமது நாட்டில், 19 ஆம் நூற்றாண்டில் இருந்த ஆங்கிலேய அலுவலாளர், தங்கள் அலுவல் முறைக்கு உதவியாக இருப்பதற்காகவும் நமது நாட்டுக்கலையின் போக்கை அறிவதற்காகவும் 'சென்னைக் கல்விச் சங்கம்' என்னும் ஒரு சங்கம் ஏற்படுத்திக்கொண்டு, அதன் மூலமாகத் தமிழைக் கற்று வந்தார்கள். இச்சங்கத்தினால், தமிழ் மொழிக்குச் சிறப்பாக யாதொரு வளர்ச்சியும் உண்டானதாகச் சொல்ல முடியாது. கிறித்துவர்களால் தமிழுக்கு ஏற்பட்ட அபிவிருத்தி எல்லாம் பாதிரிமாரைச் சேர்ந்ததே. பாதிரிமாரும் தமிழுக்காகச் செய்யவேண்டும் என்னும் கருத்துடன் செய்யவில்லை; தங்கள் மதத்தைப் பரப்புவதற்காகச் செய்த முயற்சியின் பலனே தமிழுக்குச் சில நன்மைகளை அளித்தது; எவ்வாறாயினும், அந்த நன்மைகள் ஐரோப்பியப் பாதிரிமார்களால் உண்டானவையே''(1932:13-14)

'கிறித்தவமும் தமிழும்' என்ற மேற்குறிப்பிட்ட நூலில் கிறித்தவப் பாதிரிமார்கள் 14 பேர் குறித்த விரிவான தகவல் தொகுப்பு உள்ளது. இத்துறை தொடர்பாகப் பின்னர் பலரும் நூல் உருவாக்கினர். அருட்டிரு. இராஜமாணிக்கம், பேரா.கா.மீனாட்சிசுந்தரம் போன்றவர்களின் ஆய்வுக்கு முன்னோடித் தரவாக வேங்கடசாமி அவர்களின்

நூல் அமைந்துள்ளது. தமிழ் அச்சு ஊடகத்தின் ஆவணமாக அமைந்த இந்நூலின் தொடர்ச்சியாகப் ''பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம்''(1962) என்னும் அவரது நூல் அமைந்துள்ளது. இருபது நூற்றாண்டுகள் வரலாற்றுத் தொடர்ச்சியுடைய தமிழியலுக்கு, ஒவ்வொரு நூற்றாண்டுத் தொடர்பான விரிவான ஆவணம் இதுவரை மேற்கொள்ளப் படவில்லை எனலாம். இவ்வகையில் பின்கண்ட நூல்கள் குறிப்பிடத்தக்கவை. சத்தியநாத அய்யர் எழுதியுள்ள 'பதினேழாம் நூற்றாண்டுத் தமிழகம்'; ச.சோமசுந்தர தேசிகர் அவர்களின் பதினாறாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம்', 'பதினேழாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம்' மற்றும் டி.வி. சதாசிவப் பண்டாரத்தாரின் 3 - 4 நூற்றாண்டு, 13 - 14 நூற்றாண்டுத் 'தமிழ் இலக்கிய வரலாறு' என்ற இரு நூல்களும் முக்கியமானவை. 9 ஆம் நூற்றாண்டுத் தொடங்கி 16 ஆம் நூற்றாண்டு முடிய தமிழ் இலக்கிய, இலக்கண நூல்கள் மற்றும் சைவ, வைணவம் தொடர்பானவற்றைப் பேரா.மு. அருணாசலம் 12 தொகுதிகளாக உருவாக்கியுள்ளார். இந்நூல்களில் அன்றைய தமிழ்ச் சமூகம் மற்றும் தமிழ் இலக்கண-இலக்கியம் குறித்த செய்திகளைப் பெற முடியும். முழுமையான ஆவணமாகக் கருத இயலாது. வேங்கடசாமி அவர்களின் 'பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம்' என்னும் நூல் முழுமையான ஆவணமாக உள்ளது. ஒவ்வொரு நூற்றாண்டையும் எவ்வகையில் ஆவணப்படுத்துவது என்பதற்கான முன்னோடியாக இந்நூலைக் கருதலாம்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தனித் தன்மைகளை உள்வாங்கி, அவை தொடர்பான தரவுகளை ஆவணப்படுத்தும் பணியை இந்நூலில் வேங்கடசாமி செய்துள்ளார். இந்நூலின் இறுதியில், இந்நூல் தொகுப்பிற்கான அடிப்படைக் குறிப்புகள் ஒன்றும் கொடுக்கப் படவில்லை. ஏனெனில் இந்நூல், முதன் முதலாகப் பல்வேறு தரவுகளைத் தொகுத்து ஆவணப்படுத்தியுள்ளது. தமிழியல் தொடர்பான ஆவணப்படுத்தம் என்பதற்கான எடுத்துக்காட்டு நூலாக இதனைக் கருதலாம். இந்நூல் தமிழியல் ஆவணமாக அமைந்திருப்பதைப் பின் கண்ட விளக்கங்கள் மூலம் அறிய முடியும்.

ஆவணம் என்பது, குறிப்பிட்ட துறை தொடர்பான பொதுவான பின்புலங்களை வழங்குவதாக அமைதல் வேண்டும். பின்னர், குறிப்பிட்ட துறையின் சிறப்பியல்புகளை முதன்மைப்படுத்தித் தர வேண்டும். ஆவணம் முற்றுப் பெறுவதில்லை; தொடர்ந்து அத்துறை தொடர்பான புதிய செய்திகள் கிடைக்கும்போது, அதனையும் பதிவு செய்ய வேண்டும். இக்கண்ணோட்டத்தில், பத்தொன்பதாம்

நூற்றாண்டை, வேங்கடசாமி அவர்கள் ஆவணப்படுத்தியுள்ளார். பொது இயல்; சிறப்பியல்; ஒழிபியல் என்னும் நூலின் உள்ளுறைப் பகுதி, மேற்கூறிய செய்தியை உறுதிப்படுத்துகின்றது. தமிழ் இலக்கண மரபில்,மொழியின் பொது, சிறப்பு, ஒழிபுத் தன்மைகளைக் கொண்டு இலக்கணம் எழுதும் முறை உண்டு. இம்முறையைக் குறிப்பிட்ட நூற்றாண்டுத் தொடர்பான ஆவணப்படுத்தலில் வேங்கடசாமி உள்வாங்கியுள்ளார்.

ஆங்கிலேயர் கல்வியை எவ்வாறு அறிமுகப்படுத்தினார்கள் என்பதைப் பதிவு செய்துள்ளார். 'சென்னைக் கல்விச் சங்கம்' என்ற அமைப்பு உருவாக்கப்பட்டபோது, தமிழ்க்கல்வி தொடர்பான அச்சங்கத்தின் செயல்பாடுகளை, விரிவாக இந்நூலில் பதிவு செய்துள்ளார். எல்லீஸ், மெக்கென்சி ஆகியவர்களால் இச்சங்கம் உருவாக்கப்பட்டாலும், சிதம்பர பண்டாரம், தாண்டவராய முதலியார், முத்துசாமிப் பிள்ளை, புதுவை நயனப்ப முதலியார், கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர், மதுரை கந்தசாமிப் புலவர் ஆகிய தமிழாசிரியர்களால், தமிழ் மொழி மாணவர்களுக்குப் போதிக்கப் பட்டது. ஐரோப்பியர்கள், தமிழை முறையாகக் கற்றுக்கொள்ள இச்சங்கம் உதவியதை, வேங்கடசாமி ஆவணமாக்கியுள்ளார். இதன்மூலம், ஐரோப்பிய பாதிரியார்கள் மற்றும் அலுவலர்கள் தமிழ் பயின்றமையை நாம் அறிய முடிகிறது. இதன் விளைவாகத் தமிழில் உருவான பாட நூல்கள், அதனைப் பாதுகாத்த நூலகம் ஆகியவற்றைப் பற்றிய குறிப்புகளையும் வேங்கடசாமி ஆவணப்படுத்தியுள்ளார்.

1812 இல் உருவாக்கப்பட்ட சென்னைக் கல்விச் சங்கத்தின் மூலம், "Rudiments of Tamil Grammar" என்ற நூலை இராபர்ட் அண்டர்சன் என்பவர் எழுத வேண்டிய தேவை உருவானது. வட்டார மொழிகளை ஐரோப்பியர் கற்கும் இடமாக இச்சங்கம் உருவானது. இதுவே பின்னர் வட்டார மொழிகளுக்கான தேர்வை நடத்தும் ஆணையமாகவும் வடிவம் பெற்றது. இச்சங்கத்தில் மொழி கற்பிக்கப்படுவதற்காக உருவாக்கப்பட்ட நூல்கள் குறித்து, இந்நூல் விரிவாகப் பேசுகிறது. 'பஞ்ச தந்திரக் கதை' (1826), 'கதாமஞ்சரி'(1826), 'மிருதி சந்திரிகை (1826), தமிழ் அரிச்சுவடி (1827) ஆகிய நூல்கள் மேற்குறித்த வகையில் உருவானவை ஆகும். இப்பதிவின் மூலம், புதிதாக மொழி கற்போர் 'கதைவழி' மொழி கற்க முனைந்ததை அறிய முடிகிறது.

தமிழ் எண், தமிழ் எழுத்து வரி வடிவம், அச்சுக்கூடச் செயல்பாடுகள், தமிழ் பதிப்பு வரலாறு, தமிழ் உரைநடை உருவாக்க வரலாறு, இதழியல் வரலாறு, இலக்கண நூல் உருவாக்கம், அராபி

மொழி தமிழ்ச்சூழலில் செயல்பட்ட முறைமை, தமிழ்ப்புலவர்கள் மற்றும் தமிழாசிரியர்களின் மரபுவழி ஆகிய அனைத்தையும் இந்நூல் ஆவணப் படுத்தியுள்ளது.

வேங்கடசாமி அவர்கள் ஓலைச்சுவடியிலிருந்து பதிப்பிப்பதில் அதிக நாட்டம் செலுத்தவில்லை. சித்த மருத்துவம் தொடர்பான சுவடிகள் அவரது இல்லத்தில் இருந்தும் கூட அவற்றைப் பதிப்பிப்பதில் ஈடுபாடு கொள்ளவில்லை. இவர் ஒரே ஒரு நூலைப் பதிப்பித்துள்ளார். ஆரணியைச் சேர்ந்த, நல்லறிவு மன்றத்தினர் கேட்டுக் கொண்டதற்கிணங்க, 'மயிலை நேமிநாதர் பதிகம்' (1955) என்ற நூலைப் பதிப்பித்துள்ளார். மயிலாப்பூரில் நேமிநாதர் கோயில் ஒன்று இருந்ததை இந்நூல் பதிப்பு முன்னுரையில் வெளிப்படுத்தி யுள்ளார்.

தமிழில் அவ்வப்போது எழுதப்பட்ட நூல்கள் தொடர்ச்சியாக அடுத்த தலைமுறைக்கு எடுத்துச் செல்ல இயலாத நிலை ஏற்பட்டதைக் காணமுடிகிறது. ஓலைச் சுவடிகளைப் படியெடுத்தல், பரவலாக அறிமுகப்படுத்தல், சமயச்சார்பு கடந்து நூல்களைப் படித்தல் ஆகிய நடைமுறைச் செயல்பாடுகள் காரணமாகப் பல நூல்கள் மறைந்து போயின. இவ்வகையில் மறைந்த சுவடிகளிலிருந்து அந்தந்தக் காலங்களில் செய்யுட்கள் மேற்கோள்களாகப் பயன்படுத்தப்பட்டன. உரையாசிரியர்களின் உரைகளில் இவ்வகை மேற்கோள்கள் மிகுதியாக இடம் பெற்றன. யாப்பருங்கல விருத்தியுரை, புறத்திரட்டு ஆகிய நூல்களில் மேற்கோளாக எடுத்தாளப் பட்ட பல நூல்கள் இன்று மறைந்துவிட்டன. இவ்வகையில் மறைந்து போன நூல்களைத் தொகுத்து ஆவணப்படுத்தும் பணியை வேங்கடசாமி அவர்கள் மேற்கொண்டார்கள். 'மறைவுற்ற தமிழ் நூல்கள்' என்னும் தலைப்பில் 'செந்தமிழ்ச் செல்வி' இதழில் தொடர்ந்து எழுதிவந்தார். பூச்சி அரிப்பு, அயல்நாட்டார் படையெடுப்பு, சடங்கு நிமித்தம் நீர்நிலைகளில் ஏடுகளைப் போடுதல், தீயில் எரிந்தவை, சமயப் பகையால் அழிக்கப்பட்டவை எனப் பலவகை நிலைகளில் அழிந்து போன ஏட்டுச்சுவடிகளில் மறைந்து போன தமிழ் நூல்கள் எண்ணற்றவை. இவ்வகையில் மறைந்து போனவற்றிலிருந்து,தொகுத்து வேங்கடசாமி மேற்குறிப்பிட்ட தொடரை எழுதிவந்தார். பின்னர் ''மறைந்து போன தமிழ் நூல்கள்'' (1959) என்னும் பெயரில் நூலாக வெளியிட்டார். மேற்குறிப்பிட்ட தொடர் 1952 - 1959 காலங்களில் 'செந்தமிழ்ச் செல்வி'யில் வெளிவந்தது. 'மறைந்துபோன தமிழ் நூல்கள்' முன்னுரையில் வேங்கடசாமி வெளிப்படுத்தும் மனநிலை இங்குக் குறிப்பிடத்தக்கது.

''வாழ்க்கையில் பல நிகழ்ச்சிகள் நேரிடுகின்றன. அந் நிகழ்ச்சிகளின் பயனாகச் சில சமயங்களில் எதிர்பாராத செயல்கள் விளைகின்றன. எனது வாழ்க்கையில் ஏற்பட்ட ஒரு நிகழ்ச்சியின் விளைவுதான் இந்த 'மறைந்துபோன தமிழ் நூல்கள்' என்னும் புத்தகம். அந்நிகழ்ச்சி இது: எனக்கு மக்கட்பேறு கிடையாது. ஆனால், எனது நெருங்கிய உறவினரின் குழந்தைகள் இருவர் என் வீட்டில் வளர்ந்தனர். அன்பழகன் என்னும் பெயருள்ள மூன்று வயதுச் சிறுவனும், தங்கமணி என்னும் பெயருள்ள ஒன்றரை வயதுச் சிறுமியும் அக்குழந்தைகளாவர். அக்குழந்தைகள், வீட்டுக்கு இரண்டு விளக்குகளாகத் திகழ்ந்தனர். குடும்பச் செல்வங்களாக விளங்கினார்கள். காட்சிக்கினிய கண்மணிகளாக வளர்ந்தார்கள். ஆனால், அந்தோ! எதிர்பாராதவிதமாக அக்குழந்தைகள் மறைந்தன! மக்கட் செல்வங்கள் மறைந்தன; ஒளி விளக்குகள் அணைந்தன; சின்னஞ்சிறு அரும்புகள், மலர்ந்து மணம் கமழ்வதற்கு முன்னே பறிக்கப்பட்டன. அது காரணமாக எனது மனத்தில் துன்பம் சூழ்ந்தது; மனவேதனை பெருகியது. நிலையாமையைப்பற்றி நாலடியாரில் படித்த ஆணித்தரமான செய்யுள்கள் கூட என் மனத்துன்பத்தை அகற்றத் துணை புரியவில்லை. காலம் என்னும் நூலினால் நெய்யப்பட்ட மறதி என்னும் திரை மூடினால்தான் மனத்துன்பம் மறையும். ஆனால், அந்தத்திரை விரைவில் மூடி மறைப்பதாக இல்லை. அது வரையில் என்ன செய்வது? துன்பத்தை அகற்ற முயன்றேன்; முடியவில்லை. ஏதேனும் நூலைப் படித்துக் கொண்டேயிருந்தால் அது மனத் துயரத்தைத் தீர்க்கும் மருந்தாக இருக்கும் என்று கருதி, எதிரிலிருந்து புத்தகத்தைக் கையில் எடுத்தேன்.அது 'யாப்பருங்கல விருத்தி' என்னும் நூல். அதனைப் படிக்கத் தொடங்கினேன். அந்நூலின் பழைய உரையாசிரியர், தமது உரையில் பல நூல்களிலிருந்து சில செய்யுள்களை உதாரணம் காட்டியிருந்தார். மேற்கோள் காட்டப்பட்ட நூல்களில் சில இறந்து, மறைந்துபோன நூல்களாக இருந்தன. என் குடும்பத்தில் இரண்டு அருமைக் குழந்தைகள் மறைந்து விட்டதைப் போல, தமிழிலக்கியக் குடும்பத்திலும் சில குழந்தைகள் மறைந்துபோனதை அப்போது கண்டேன். என் மனத்தில் அப்போது புதியதோர் எண்ணம் தோன்றிற்று. தமிழன்னை எத்தனைக் குழந்தைகளை, தமிழ்நூல்களை இழந்துவிட்டாள் என்பதைக் கணக்கெடுக்க வேண்டும் என்னும் எண்ணந்தான் அது'' (1967: முன்னுரை)

'மறைந்து போன தமிழ் நூல்கள்' என்னும் நூல் வேங்கடசாமி அவர்களின் அரிய ஆவணப் பணிகளில் ஒன்றாகும். பின்னர் தமிழ்

மறுமலர்ச்சி பற்றிய விவாதங்கள் முன்னெடுக்கப்பட்டபோது, இந்த ஆவண நூல் பெரிதும் உத்வேகம் அளிப்பதாக அமைந்தது. இந்நூலில் கீழ்க்காணும் தகவல்கள் ஆவணப்படுத்தப்பட்டுள்ளன. அகப்பொருள், புறப்பொருள், காவியம், பிரபந்த நூல்கள், இசைத்தமிழ், நாடகத்தமிழ், இலக்கணம் ஆகிய துறைகள் சார்ந்த 333 நூல்கள் தொடர்பான குறிப்புகளை இந்நூலில் வேங்கடசாமி ஆவணப்படுத்தியுள்ளார். விரிந்த, பரந்த தமிழ் இலக்கிய இலக்கணப் பரப்பில், பரந்து கிடந்த செய்திகளைத் தொகுத்து, மறைந்துபோன நூல்களின் அடையாளங்களை நம்முன் நிறுத்துகிறார்.

இசைத்தமிழ்ச் செய்யுட்துறைக்கோவை, இசை நுணுக்கம், இந்திரகாளியம், குலோத்துங்கன் இசை நூல், சிற்றிசை, பேரிசை, பஞ்ச பாரதீயம், பஞ்ச மரபு, பதினாறு படலம்,பெருநாரை, பெருங்குருகு, வாய்ப்பியம் ஆகிய இசைத்தமிழ் நூல்கள் மறைந்தவை ஆகும். அகத்தியம், இராஜ இராஜேசுவர நாடகம், காரைக் குறவஞ்சி, குணநூல், குருஷேத்திர நாடகம், கூத்த நூல், சந்தம், சயந்தம், செயன்முறை, சோமகேசரிநாடகம், ஞானலங்கார நாடகம், திருநாடகம், நூல், பரதம், பரதசேனாபதீயம், பரிமளகா நாடகம், மதிவாணர் நாடகத் தமிழ் நூல், முறுவல், பூம்பூலியூர் நாடகம், கடகண்டு, வஞ்சிப்பாட்டு, மோதிரப்பாட்டு, விளக்கத்தார் கூத்து ஆகிய நாடக நூல்களும் மறைந்து போயின. இவற்றுள் பஞ்சமரபு, கூத்த நூல், பரதசேனாபதீயம் ஆகியவை கண்டுபிடிக்கப்பட்டு, பதிப்பிக்கப்பட்டுள்ளன.

மறைந்து போனவை தொடர்பான ஒரு மீள் பார்வையைக் கொண்டு வந்திருக்கிறார் வேங்கடசாமி. இந்நூல்கள் தொடர்பான, இவரது ஆவணத்தின் மூலம், தமிழர் கலை வரலாறு எழுத இயலாமையின் காரணத்தைக் காண முடியும். மீண்டும் மீண்டும் இந்நூல்களை நோக்கிய தேடலை, இவ்வகையான ஆவணம் வழி வேங்கடசாமி அவர்கள் உருவாக்கியுள்ளார்.

தொல்லெழுத்துக்களைக் கண்டறிவதன் மூலம், ஒரு குறிப்பிட்ட மொழி பேசுவோரின் பழமை மற்றும் பண்பாட்டுக் கூறுகள் இன்ன பிறவற்றை அறியமுடியும். அச்சு ஊடகத்தின் வழித் தமிழ்ச்சமூகத்தில் உருவானவற்றை ஆவணப்படுத்திய வேங்கடசாமி அவர்கள், ஓலைகளில் இருந்து மறைந்து போனவை தொடர்பாகத் தகவல்களையும் ஆவணப்படுத்தினார். இதைப் போலவே பண்டைய தமிழ் எழுத்து வடிவங்கள் தொடர்பான தேடலை மேற்கொண்டு, அவற்றை ஆவணப்படுத்தும் முயற்சியை மேற்கொண்டுள்ளார்.

இப்பணியைக் களஆய்வு வழி வேங்கடசாமி அவர்கள் மேற்கொண்டார். அவரது கள ஆய்வு தொடர்பான குறிப்புகள் சுவையானவை.

பிலவ ஆண்டு வைகாசித் திங்கள் 13 ஆம் நாள், வெள்ளிக்கிழமை (26.05.1961) பகல் இரண்டு மணிக்கு, நாங்கள் கொங்குநாட்டு அரசலூரையடைந்தோம். நாங்கள் என்றால், இக்கட்டுரையாளரும், சீவபந்து ஸ்ரீபால், வித்துவான் செ.இராசு, வித்துவான் பச்சையப்பன், வித்துவான் சென்னியப்பன் அவர்களும் ஆகும். அரசலூர் ஈரோடிலிருந்து பழைய கோட்டை வழியாக 12ஆவது கல்லில் இருக்கிறது. வெயில் எரிக்கும் பகல் வேளையில் அவ்வூர் மலையடிவாரத்தை ஒட்டிய காட்டுவழியாக ஒருமைல்தூரம் நடந்தோம். பாதை இல்லாத காட்டுவழியாகையால், முட்செடி கொடிகளால் இடர்ப்பாடுகள் விளைந்தன. எப்படியோ தட்டுத்தடுமாறி மலையின் மற்றொரு புறத்திலிருக்கிற ஆண்டிப்பாறை என்னும் இடத்துக்கு வந்தோம். ஆண்டிப்பாறை என்னும் இடம், மலையின் மேல் உள்ள ஒரு பாழி; அதாவது பொடவு என்று கூறப்படுகிற இயற்கையாக அமைந்த குகை. இந்தக் குகையிலே மேடு பள்ளமாக இருக்கிற பாறையிலே ஐந்து கற்படுக்கைகளும், மூன்று பிராஃமி எழுத்துச் சாசனங்களும் இருப்பதைக் கண்டோம் (செந்தமிழ்ச் செல்வி:35:1961)

இவ்வகையில், வேங்கடசாமி மேற்கொண்ட ஆய்வுகளே அவரது மறைவிற்குப்பிறகு சங்ககாலத்துப் பிராமிக் 'கல்வெட்டெழுத்துக்கள்' (1981) என்ற நூலாக வெளிவந்தது. இந்நூலில் தாம் கள ஆய்வு வழி கண்டவை, முன்னரே தொல்பொருள் ஆய்வுத்துறையினரால் படியெடுக்கப்பட்டவை, ஐராவதம் மகாதேவன், டி.வி.மகாலிங்கம் ஆகியோர் கண்டு பிடித்தவை ஆகியவை தொடர்பான ஆய்வு மற்றும் வாசிப்பைச் செய்துள்ளார். பதினெட்டு ஊர்களில் காணப்படும் பிராமி எழுத்துகள், இந்நூலில், ஆவணப்படுத்தப்பட்டுள்ளன. இந்த ஆவணம் தொடர்பாக வேங்கடசாமி குறிப்பிடும் செய்திகள், அவரது ஆவணப் படுத்தலின் நோக்கத்தைக் காட்டுகிறது.

"தமிழ்மொழி மிகப் பழமையானது. மிகப் பழங்காலத்திலேயே தமிழர் தமிழை வளர்த்தனர். அவர்கள் தமிழ் நூல்களைச் சுவடிகளில் எழுதினார்கள். நூல்களை எழுதுவதற்கு எழுத்து வேண்டும். எழுத்துக்களையும் அமைத்து நூல் எழுதினார்கள். ஏறத்தாழ மூவாயிரம் ஆண்டுகளாகத் தமிழில் நூல்கள் எழுதப்படுகின்றன. தமிழ்

எழுத்துக்கள் காலத்துக்குக் காலம் மாறி மாறி வந்துள்ளன. எழுத்துக்களின் வரிவடிவம் மாறிக் கொண்டு இருந்த படியால், பண்டைக் காலத்தில் எழுதப்பட்ட தமிழ் எழுத்தின் வரிவடிவம் இன்னதென்று இப்போது தெரியவில்லை. பண்டைக் காலத்துத் தமிழ் எழுத்து மறைந்து போயிற்று'' (1981: முன்னுரை)

தமிழ் எழுத்துகள் சார்ந்த, இவ்வகை ஆவணத்தின் மூலம், தமிழ் தொல்லெழுத்தியல் ஆய்வு மற்றும் தொல்பழங்காலத்தின் தமிழ்ச் சமூகத்தின் செயல்பாடுகள் ஆகியவற்றை அறியும் வாய்ப்பை உருவாக்கியுள்ளார். அரசலூர் பிராமி எழுத்துக்களை தம் நண்பர்களோடு சென்று கண்டறிந்து ஆவணப்படுத்தியதோடு, பிராமி வாசிப்பது தொடர்பான ஆய்வை முன்னெடுக்கும் நோக்கத்தில், பிராமி எழுத்துக்கள் குறித்த இவர் செய்த ஆவணம் குறிப்பிடத் தக்கது.

தொல்லெழுத்து ஆய்வின் மூலமாகப் பிராமி குறித்த ஆய்வை மேற்கொண்டதைப் போல், கல்வெட்டுகள், செப்பேடுகள், காசுகள் தொடர்பான ஆவணம் மற்றும் ஆய்வில் வேங்கடசாமி ஈடுபாடு காட்டியுள்ளார். இவரால் ஆவணப்படுத்தப்பட்ட கல்வெட்டுகளி லிருந்து பெறப்பட்ட செய்யுள்கள், இத்துறையில் குறிப்பிடத்தக்கப் பணியாகும். 'சாசனச் செய்யுள் மஞ்சரி' (1959) என்ற நூலில் கல்வெட்டுகளில் காணப்பட்ட செய்யுட்களை, வேங்கடசாமி தொகுத்தது ஆகும். செங்கற்பட்டு, வட, தென் ஆற்காடு, திருச்சிராப்பள்ளி, புதுக்கோட்டை, இராமநாதபுரம், திருநெல்வேலி, கன்னியாகுமரி, திருவாங்கூர், சித்தூர், ஆந்திர நாடு, மைசூர் நாடு, இலங்கை ஆகிய பகுதிகளில் உள்ள கல்வெட்டுகளிலிருந்து 146 செய்யுட்களைத் தொகுத்து மேற்குறித்த நூலில் ஆவணப் படுத்தியுள்ளார்.

''பழைய சாசன வெளியீடுகளைப் படித்துக் கொண்டிருந்த போது, அவற்றின் இடையிடையே சில சாசனங்கள் செய்யுளாக அமைந்திருப்பதைக் கண்டேன். கண்டபோது, அச்செய்யுட்களைத் தொகுத்து வைப்பது நலம் என்று தோன்றியது. வெவ்வேறு காலத்திலே வெவ்வேறு இடங்களில் இருந்த புலவர்கள் அவ்வப்போது பாடிய தனிச் செய்யுட்களைப் பிற்காலத்தவர் தொகுத்துத் 'தனிப் பாடற்றிரட்டு' என்னும் பெயருடன் வெளி யிட்டிருப்பதைப் படித்து நாம் பல செய்திகளைத் தெரிந்து கொள்கிறோம். அது போலவே, வெவ்வேறு ஊர்களிலே வெவ்வேறு காலத்தில் சாசனங்களிலே எழுதப்பட்ட செய்யுட்களைத் தொகுத்து வெளியிட்டால், அது தமிழ் இலக்கிய வரலாற்றினை ஆராய்வதற்கும்,

அக்காலத்து அரசியல் சமூக இயல் வரலாறுகளைத் தெரிந்து கொள்வதற்கும் பெரிதும் துணையாக இருக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. ஆகவே, சாசனங்களில் காணப்படுகிற செய்யுள்களைத் தொகுத்துச் 'சாசனச் செய்யுள் மஞ்சரி' என்று பெயரிட்டு அழைத்தேன்'' (1959: முன்னுரை)

தென் இந்தியச் சாசனங்கள், இந்தியச் சாசனங்கள், புதுக்கோட்டைச் சாசனங்கள், திருவாங்கூர்ச் சாசனங்கள், கர்நாடகச் சாசனங்கள் ஆகியவற்றில் உள்ள செய்யுட்களை வேங்கடசாமி தொகுத்து வெளியிட்டுள்ளார். இதுவரை வெளிவராத சாசனம் ஒன்றை டி.வி. சதாசிவப்பண்டாரத்தார், இவருக்குக் கொடுக்க, அதிலிருந்த செய்யுள் ஒன்றையும் பதிப்பித்துள்ளார். இச்செய்யுட்கள் வழி அறியப்படும் பல்வேறு வரலாற்றுத் தரவுகள் ஆய்வாளர்களுக்கு அரிதாக உள்ளன. இவ்வகை ஆவணத்தின் மூலம், பல்வேறு சூழல், இடம், பொருள் சார்ந்த கூறுகளை ஒருங்கே பெறும் வாய்ப்பை உருவாக்கியுள்ளார். இவ்வகையில் இந்த ஆவணப்பணி விதந்து கூற வேண்டிய ஒன்றாகும்.

வேங்கடசாமி அவர்கள், தமது ஆய்வுக்குப் பயன்படுத்தும் பல்வேறு ஆவணங்களையும் அந்தந்த நூல்களில் கொடுப்பதை மரபாகக் கொண்டிருக்கிறார். இதன் மூலம் சில செப்பேடுகளை இனம் கண்டு ஆவணப்படுத்தியுள்ளார். தமது 'பௌத்தமும் தமிழும்' (1940) நூலில் ஆனை மங்கலச் செப்பேட்டுச் சாசனத்தை ஆவணப்படுத்தி யுள்ளார். 'லெய்டன் செப்பேடுகள்' என்று அழைக்கப்படும், ஆனைமங்கலச் செப்பேட்டுச் சாசனத்தில் உள்ள வடமொழிப் பகுதிகளைத் தமிழில் மொழிபெயர்த்துத் தந்துள்ளார். 'எபிகிராபிகா இண்டிகா', தொகுதி XXII,பக்கம் 213-266இல் காணப்படும் இந்த ஆவணத்தை, மொழிபெயர்த்துத் தந்திருப்பதின் மூலம் மேலும் பலரும் ஆய்வுக்குப் பயன்படுத்த முடியும். நரசிம்மவர்மன் பற்றிய ஆய்வுக்குப் பயன்படுத்தும் கொடும்பாளூர்ச் சாசனத்தையும் வடமொழியிலிருந்து தமிழ்ப்படுத்தி மேற்குறித்த நூலில் (நரசிம்மவர்மன் 1957) இணைத்துள்ளார். களப்பிரர் பற்றிய ஆய்வுக்கு (களப்பிரர் ஆட்சியில் தமிழகம், 1975) முழுமையாக வேள்விக்குடிச் சாசனத்தைப் பயன்படுத்தியுள்ளார். இவ்வகையில் செப்பேடுகளை ஆவணங்களாகப் பயன்படுத்தியமை அறிய முடிகிறது.

தொல்பழம் சின்னங்கள், சமூக வரலாற்று ஆய்வுகளுக்கு அரிய ஆவணங்களாகும். வேங்கடசாமி அவர்கள் இவ்வகையில்

கோயில்கள், குடவரைக் கோயில்கள், சிற்பங்கள், கட்டடங்கள், ஓவியங்கள் ஆகியவற்றை அரிய ஆவணங்களாகக் கருதிச் செயல் பட்டுள்ளார். 'மகேந்திர வர்மன்' (1955) 'வாதாபிகொண்ட நரசிம்மவர்மன்' (1957) ஆகிய ஆய்வு நூல்களை எழுதும்போது, இவர்களால் உருவாக்கப்பட்ட கோயில்கள் மற்றும் குகைக் கோயில்கள், சிற்பங்கள், ஓவியங்கள் ஆகியவற்றையும் அந்தந்த நூல்களில் ஆவணப்படுத்தியுள்ளார்.

மண்டளியும் கற்றளியும் தமிழர்களின் தொடக்க கால கோயில் வடிவங்களாக இருந்தன. கற்களைப் பயன்படுத்தாமல் செங்கல், சுண்ணாம்பு, மரம் ஆகியவற்றைப் பயன்படுத்தியே கோயில்கள் தொடக்கத்தில் அமைக்கப்பட்டன. மகேந்திர வர்மன் காலத்தில் கூடக் கற்களால் ஆன கோயில்கள் உருவாக்கப்படவில்லை. ஆனால் இம்மன்னன் காலத்தில்தான் குகைக் கோயில்கள் அமைக்கப்பட்டன. திருச்சிராப்பள்ளி, பல்லாவரம், வல்லம், மண்டகப்பட்டு, தளவானூர், மகேந்திரவாடி, மாமண்டூர், மேலைச்சேரி, சித்தன்னவாசல், சீயமங்கலம், குரங்கணில் முட்டம், சிங்கவரம், திருக்கழுக்குன்றம், மாமல்லபுரம், திருக்கோகர்ணம் ஆகிய இடங்களில் மகேந்திரவர்மன் காலத்தில் குகைக் கோயில்கள் உருவாக்கப்பட்டன. மண்டகப்பட்டு கல்வெட்டு மூலம் மகேந்திரவர்மன் முதல் முதல் குகைக் கோயில்களை உருவாக்கியதை அறிய முடிகிறது. இக்கோயில்கள் பற்றிய விரிவான ஆவணத்தை வேங்கடசாமி அவர்கள் செய்துள்ளார்கள்.

நரசிம்மவர்மன் உருவாக்கியுள்ள குகைக்கோயில்கள், பாறைக் கோயில்கள் குறித்தும் ஆவணப்படுத்தியுள்ளார். குகைக் கோயில்கள் குறித்து விரிவான ஆவணத்தைத் தமிழில் செய்தவர் வேங்கடசாமி அவர்களே ஆவர். இந்த ஆவணப் பணியின் மூலம் தமிழர் கட்டடக்கலை வரலாறு பற்றி அறிய ஏதுவாக உள்ளது.

சிற்பங்கள், நமது வரலாற்று ஆய்வுக்கு அடிப்படையாக அமையும் ஆவணங்களில் ஒன்றாக வேங்கடசாமி கருதினார். வாய்ப்பு ஏற்படும் போதெல்லாம், சிற்பங்களைப் பாதுகாப்பது குறித்துப் பேசியும் எழுதியும் உள்ளார். நமது சிற்பங்கள் ஆவணப்படுத்தப்படாமல் அழிந்து போவதை அவர் வெளிப் படுத்தும் முறை பின்வருமாறு:

''நமது நாட்டுச் சிற்பக்கலை உருவங்களில் பல அழிந்துவிட்டன. பல சிற்பக் கலைச் செல்வங்கள் மண்ணுள் மறைந்து கிடக்கின்றன. பல சிற்பச் செல்வங்கள், பழைய கோயில்களைப் புதுப்பிக்கிற

பெருஞ்செல்வர்களால் அந்தோ! அந்தோ!! கொலை செய்யப்பட்டன. கொலை செய்யப்படுகின்றன. (இவ்வாறு கலைச் செல்வங்கள் கொலை செய்யப்படுவதைப் பற்றி எழுதினால் அது ஒரு பெரிய நூல் ஆகும்) மற்றும் பல சிற்பக் கலைச் செல்வங்கள் ஐரோப்பியரால் கொள்ளை கொண்டு போகப்பட்டன. சென்ற இருநூறு ஆண்டுகளாக இருந்த ஆங்கிலேய ஆட்சிக் காலத்திலேயே இந்தியச் சிற்ப உருவங்களை அயல் நாடுகளுக்கு விற்கக் கூடாது என்னும் சட்டம் இல்லாத படியினாலே நம் சிற்பக்கலைப் பொருட்கள் அமெரிக்கா, பிரான்சு, இங்கிலாந்து முதலான மேல் நாடுகளுக்குக் கள்ளத்தனமாகக் கொண்டு போகப்பட்டன. நம் கோயில்களிலிருந்த (கல்லிலும் உலோகத்திலும் செய்யப்பட்டன) சிற்பக் கலைப்பொருட்களைக் கள்ளத்தனமாக வாங்கிய ஐரோப்பியர்களுக்கும் அமெரிக்கர் களுக்கும் அப்பொருள்களைக் கள்ளத்தனமாக விற்றவர் யார்? நம் நாட்டுக் கோயிற்'பெருச்சாளிகள்'தான். எலிகளுக்கும் பெருச்சாளி களுக்கும் கலைப் பெருமை தெரியுமா? சிறுகாசுக்குப் பெருஞ் செல்வமான சிற்பக்கலைகளைக் கொடுத்து விட்டார்கள்! களவாடிய பொருள்களைக் கள்ளர்கள் சிறுதொகைக்கு விற்பது போல'' (செந்தமிழ்ச்செல்வி:28:1953).

மாமல்லபுர சிற்பம், நடராசர் சிற்பம் போன்ற பல சிற்பங்களை ஆய்வு செய்துள்ள வேங்கடசாமி அவர்கள், நரசிம்மவர்மன் பற்றிய நூலில் (1957), அவனது காலத்தில் காணப்பட்ட 57 சிற்பங்கள் குறித்த பல்வேறு விவரங்களை ஆவணப்படுத்தியுள்ளார். கங்காதரமூர்த்தி சிற்பம், சீயமங்கலம் குகைக்கோயில் பாறையில் உள்ள வாள்வீரன் சிற்பம், பல்வேறு மன்னர்களின் உருவங்கள், அடியார் - முனிவர் உருவங்கள், சூரியன் - சந்திரன் மற்றும் பல கடவுளர் உருவங்கள் ஆகியனவற்றை வேங்கடசாமி அவர்கள் ஆவணப்படுத்தியுள்ளார். இவை பற்றித் தமிழில் முதன்முதல் ஆவணப்படுத்தியவர் இவரே. தமிழ்ச்சிற்ப உருவாக்க வரலாற்றுக்கு இவரது ஆவணப் பணி பெரிதும் உதவும்.

ஓவியங்கள் குறித்த உணர்ச்சிபூர்வமான ஈடுபாடு கொண்டிருந்த வேங்கடசாமி அவர்கள், பல்லவர் காலத்து ஓவியங்கள், பிற்காலச் சோழர் கால ஓவியங்கள், பிற்கால ஓவியங்கள் எனப் பல்வேறு ஓவியங்கள் குறித்துப் பதிவு செய்துள்ளார். இப்பதிவுகள் அரிய ஆவணங்களாகும். கைலாசநாதர் கோயில் ஓவியம், சித்தன்னவாசல் ஓவியம், தஞ்சை கோயில் ஓவியம், மதுரை நாயக்கர் கால ஓவியம் ஆகியவை குறித்த தமது அக்கறையை வேங்கடசாமி அவர்கள் பதிவு செய்துள்ளார்.

மகேந்திரவர்மன் (1955) பற்றிய ஆய்வு நூலை வேங்கடசாமி எழுதிய போது, அம்மன்னன் சமசுகிருதத்தில் எழுதிய நாடகமாகிய 'மத்தவிலாச பிரகசனத்' தைத் தமிழில் மொழியாக்கம் செய்து ஆவணப்படுத்தியுள்ளார். இந்நிகழ்வு பற்றிய அவரது பதிவு குறிப்பிடத்தக்கது.

''கலைச்செல்வனாகிய மகேந்திரவர்மன் நாடகக் கலையிலும் வல்லவனாக இருந்தான். 'மத்தவிலாசப் பிரகசனம்' என்னும் நாடக நூலை இவன் இயற்றியிருப்பதிலிருந்து இதனையறியலாம். பிரகசனம் என்பது நகைச்சுவை நாடகம் என்று பொருள்படும். எனவே மத்தவிலாசப் பிரகசனம் என்பது பைத்தியக்காரனின் நகைச்சுவை நாடகம் என்று பொருள்படுகிறது. உண்மையிலே ஒரு பைத்தியக்காரன் இந்த நாடகத்தில் இடம் பெறுகிறான். இந்த நாடகம் வடமொழியும் பிராகிருத மொழியும் கலந்து இயற்றப்பட்டது. மகேந்திரவர்மன் இந்த நாடகத்தை எழுதியபடியினாலே இவனுக்கு 'மத்தவிலாசன்' என்னும் சிறப்புப் பெயர் ஏற்பட்டது போலும்'' (1953-131).

ஆய்விற்கு அடிப்படையாக அமைவது ஆவணம். ஆவணம் இல்லையேல் ஆய்வுப் பயணத்தைத் தொடருவது அரிது. இருபதாம் நூற்றாண்டின் புதிய வளர்ச்சியில் பல மாற்றங்கள் உருவாயின. அவைகுறித்த ஆய்வில் ஈடுபட்ட வேங்கடசாமி அவர்கள் ஆவணப்படுத்தலில் மிகுந்த அக்கறை கொண்டார். ஈடுபாட்டோடு ஆவணப்படுத்தலையும் செய்தார். அச்சு ஊடகம், ஓலைச் சுவடிகள் கல்வெட்டுச் சாசனங்கள், குகைக்கோயில்கள், சிற்பம், ஓவியம் ஆகிய துறைகளில் வேங்கடசாமி அவர்களின் ஆவணப் பணி விதந்து பாராட்ட வேண்டிய ஒன்றாகும். இவர்தம் ஆவணப் பணியைப் பின்வருமாறு தொகுத்துக் கொள்ள இயலும்.

- *இருபதாம் நூற்றாண்டில் பெரும் செல்வாக்குக்கு ஆளான அச்சு ஊடகம், பத்தொன்பதாம் நூற்றாண்டு முதல் தமிழில் உருப்பெற்று வளர்ந்த வரலாற்றை அறிய உதவும் வகையில் ஆவணப் படுத்தியுள்ளார்.*

- *இருபதாம் நூற்றாண்டுக்குமுன், ஓலைச்சுவடி களும் கல்வெட்டுகளும் தமிழர்களின் பல்வேறு பதிவு களுக்கு அடிப்படையாக இருந்தன. இவ்வகையில்*

இவர் உருவாக்கிய ஆவணங் களான 'மறைந்து போன தமிழ் நூல்கள், 'சாசனச் செய்யுள் மஞ்சரி' ஆகியவை தமிழியல் ஆய்வுக்குப் பெரும் கொடையாகும்.

■ தொல்லெழுத்தியல் பற்றிய ஆவணங்களைக் கல் வெட்டுகள் வழிதான் பெறமுடியும். இவ் வகையில், தமிழ்த்தொல்லெழுத்தியல் வரலாற்றை அறிய உதவும் பிராமி எழுத்துகள் தொடர்பான ஆவணத்தையும் இவர் பதிவு செய்துள்ளார்.

■ தமிழர்களின் கட்டடக்கலை வரலாறு, ஓவிய வரலாறு, சிற்ப வரலாறு ஆகியவற்றுக்கான ஆவணப்படுத்தல் சிறப்பாக தமிழில் நடைமுறைப் படுத்தபட்டிருப்பதாகக் கூறமுடியாது. வேங்கட சாமி அவர்கள், கட்டடக்கலை, ஓவியங்கள், சிற்பங்கள் தொடர்பான பல்வேறு நிலைகளில் தம்மால் இயன்ற வரை ஆவணப் படுத்தலை மேற்கொண்டுள்ளார்.

---

# 3

# வரலாறு எழுதுபணி

சங்க காலம், பல்லவர் காலம் ஆகிய காலப் பகுதிகளின் வரலாறு, மூவேந்தர்கள், கொங்கு நாட்டு மன்னர்கள், துளுநாட்டு மன்னர்கள், களப்பிரர் மற்றும் இலங்கை குறித்த வரலாறு ஆகியவைகளை எழுதியுள்ளார். மேற்குறித்தவற்றில் அரசியல் வரலாறு, பண்பாடு மற்றும் சமய வரலாறுகளை இவர் பதிவு செய்துள்ளார்.

சங்க இலக்கியங்கள் கண்டுபிடிக்கப்பட்டமை,பல்வேறு புதிய கல்வெட்டுச் சாசனங்கள் அறியப்பட்டமை, அகழ்வாய்வுகள் வழி ஆதிச்சநல்லூர், அரிக்காமேடு, பூம்புகார் ஆகியனவும் பிறவும் அறியப்பட்டமை, ஆகியவை தமிழ்ச் சமூகத்தின் புதிய வரலாற்றை எழுதும் தேவையை வலியுறுத்தின. இப்பின்புலத்தில் 19ஆம் நூற்றாண்டின் இறுதிக் காலங்கள் தொடங்கி,தமிழகத்தின் வரலாற்றை எழுதப் பலரும் முற்பட்டனர். இவ்வகை வரலாற்றுக்குக் கல்வெட்டுத் தரவுகள் பெரிதும் உதவின. வேங்கடசாமி அவர்களும் தமிழக வரலாறு எழுதுவதில் பெரும் ஈடுபாடு மிக்கவராகவே இருந்து வந்துள்ளார். அவர் எழுதிய அனைத்து வரலாறுகளையும் ஒழுங்கு படுத்தி, சங்ககால வரலாறு,பல்லவர்கால வரலாறு, பிறவரலாறுகள் என்று தொகுக்க முடியும். அவர் அரசியல் வரலாறு, பண்பாட்டு வரலாறு, கலை வரலாறு ஆகியவற்றில் அக்கறை செலுத்தினார். அவர் உருவாக்கிய அரசியல் மற்றும் பண்பாட்டு வரலாறு தொடர்பான செய்திகளை இங்கு நாம் தொகுத்துப் பார்க்க முயலலாம். 1955,1957,1958ஆம் ஆண்டுகளில் முறையே மகேந்திரவர்மன் (கி.பி.600,630), வாதாபி கொண்ட நரசிம்மவர்மன் (கி.பி.630-668), மூன்றாம் நந்திவர்மன் (கி.பி.847-872) ஆகியோர் குறித்த நூல்களை எழுதியுள்ளார். இம்மூன்று நூல்களின் முன்னுரைகளிலும் தமிழக வரலாறு எழுதுவது குறித்த தமது கண்ணோட்டத்தைப் பதிவு செய்துள்ளார். அப்பகுதி வருமாறு:

''ஒவ்வொரு நாட்டுக்கும் அந்தந்த நாட்டின் வரலாறுகள் மிகவும் முதன்மையாகும். ஆனால்,வரலாற்று நூல்களை எழுதும் வழக்கம் நமது நாட்டிலே பண்டைக் காலத்தில் இருந்ததில்லை. ஆகவே, நமது நாட்டுப் பழைய வரலாறுகள் நமக்குக் கிடைக்கவில்லை. முஸ்லீம்களும் ஐரோப்பியரும் வரலாற்று நூல் எழுதும் வழக்கமுடையராயிருந்தனர். ஐரோப்பியர் நமது நாட்டிற்கு வந்த பின்னரே,வரலாறு எழுதும் வழக்கம் நமக்கு ஏற்பட்டது. அண்மைக் காலத்திலே மேல் நாடுகளில் ஆர்க்கியாலஜி (Archaeology) எபிகிராபி (Epigraphy) சாத்திரங்களின் மூலமாக வரலாற்று ஆராய்ச்சி முறை பெரிதும் வளர்ச்சியடைந்திருக்கிறது. இந்த நூல்களின் மூலமாகப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் மறைந்து போன எகிப்தியர், பாபிலோனியர், யவனர் (கிரேக்கர்), உரோமர் முதலான பழங்கால மக்களின் வரலாறுகளும் நாகரிகங்களும் இப்போது கண்டறியப்பட்டுள்ளன. நந்தமிழ் நாட்டிலேயும் பல நூற்றாண்டு களுக்கு முன்னரே மறந்து, மறைந்துபோன சேர சோழ பாண்டியர் முதலிய அரசர்களின் வரலாறுகளும் நாகரிகங்களும் செய்திகளும் தொல்பொருள் ஆய்வுத்துறை ஆராய்ச்சியின் பயனாக இப்போது நாம் அறிந்து கொள்ள இடமேற்பட்டிருக்கிறது'' (1955:முன்னுரை).

இப்பின்புலத்தில் வேங்கடசாமி அவர்கள் வரலாற்றுத் தொகுப்புப்பணியை மேற்கொண்டுள்ளார். அவர் உருவாக்கிய அரசியல் வரலாற்றைப் பின்வரும் வகையில் நாம் தொகுத்துக் கொள்ள முடியும்.

சங்ககாலம் குறித்து அவர் மேற்கொண்ட ஆய்வில் பல நிலைகளில் செயல்பட்டுள்ளார். மூவேந்தர்கள், குறுநில மன்னர்கள், கொங்குநாடு, துளுநாடு, இலங்கை வாழ் தமிழர் வரலாறு என்று பல கூறுகளில் எழுதியுள்ளார். களப்பிரர்கள் பற்றியும் ஆய்வு செய்துள்ளார். பல்லவ மன்னர்கள் மூவர் பற்றியும் எழுதியுள்ளார். நூல் வடிவில் அமைந்துள்ள இவ்வரசியல் வரலாறுகள் புலப்படுத்தும் செய்திகள் பலவாகும்.

1962ஆம் ஆண்டு பிப்ரவரி 26,27, 28ஆம் நாட்களில், அண்ணாமலைப் பல்கலைக்கழகக் கீழ்த்திசை ஆய்வு மையம் (தமிழ்த்துறை) வேங்கடசாமி அவர்களைச் சொற்பொழிவு நிகழ்த்த அழைத்தது. இந்த மூன்று சொற்பொழிவுகளில் தொல்காப்பியம், சங்க நூல்கள், சங்ககால நகரங்கள் ஆகியவை குறித்துப் பேசினார். தொல்காப்பியத்தின் காலம் மற்றும் தொல்காப்பியத்திற்கு வடமொழிக்கும் உள்ள உறவுகள் குறித்து முதல் சொற்பொழிவு

அமைந்தது. சங்க நூல்களில் காணப்படும் தமிழர் வாழ்க்கை குறித்தும் காவிரிப்பூம்பட்டினம், மதுரை ஆகியவை குறித்தும் அடுத்த இரண்டு சொற்பொழிவுகள் அமைந்தன. இவற்றில் சங்க கால அரசியல் வரலாற்றைவிட, சங்க காலப் பண்பாட்டுக் கூறுகள் குறித்து ஆய்வு செய்தார். தமிழக அரசு, தமிழ் நாட்டு வரலாற்றுக் குழு (1975-79) என்ற ஒன்றை உருவாக்கியது. இக்குழுவின் உறுப்பினராக வேங்கடசாமி அவர்கள் செயல்பட்டார்கள். இக்குழு தமிழ்நாட்டு வரலாற்றைப் பல தொகுதிகளாக எழுதி வெளியிட்டு வந்தது. இவ்வெளியீட்டின் இரண்டாவது தொகுதி 'தமிழ்நாட்டு வரலாறு-சங்க காலம் - அரசியல்' (1983) என்பதாகும். இத்தொகுதியில் உள்ள பத்து இயல்களில் ஐந்து இயல்களை வேங்கடசாமி எழுதியுள்ளார். இதன் மூலம் சங்க கால மூவேந்தர்களின் அரசியல் வரலாற்றைப் பதிவு செய்துள்ளார். இலங்கையில் தமிழர் குறித்தும் வரலாற்றுக்கான அடிப்படைச் சான்றாகக் கல்வெட்டு அமைவது குறித்தும் இத்தொகுதியில் எழுதியுள்ளார்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகச் சொற்பொழிவிற்குப் பின்பு 1966 இல் சென்னைப் பல்கலைக்கழகத்தின் கீழ்த் திசையியல் ஆய்வு ஆண்டிதழில் (Annuals of Oriental Research Vol:XXI.Part.I) சேரன் செங்குட்டுவன் குறித்த அரசியல் வரலாற்றை விரிவாக எழுதியுள்ளார். இவ்வாய்வு சென்னைப் பல்கலைக்கழகத்தில் சொர்ணம்மாள் அறக்கட்டளைச் (1966) சொற்பொழிவில் நிகழ்த்தியது ஆகும். தமிழில் சங்ககால அரசியல் குறித்து விரிவான முதல் ஆய்வு இதுவாகக் கூறமுடியும்.

சங்ககால அரசியல் தொடர்பான மேற்குறித்த வேங்கடசாமி அவர்களின் ஆய்வுகள், சங்ககால மன்னர்கள் குறித்த விவரங்கள், சங்ககாலத் தமிழக எல்லை, சங்ககால மக்களின் பண்பாட்டு வாழ்க்கை எனப் பல தளங்களில் அமைந்திருப்பதைக் காணமுடிகிறது.

''தமிழகத்தைச் சேர சோழ பாண்டியர் ஆகிய மூவேந்தர்கள் ஆட்சி செய்திருந்தார்கள். அக்காலத்தில், சேர நாடு தமிழ் நாடாக இருந்தது. மூவேந்தருக்குக் கீழடங்கிக் குறுநில மன்னர்களாகிய சிற்றரசர்கள் பலர் இருந்தனர். அவர்களுக்கு அக்காலத்தில் வேளிர் அல்லது வேளரசர் என்பது பெயர். அக்காலத்தில் தமிழகம் சோழ நாடு, பாண்டி நாடு, சேர நாடு, துளுநாடு (கொங்கணநாடு), தொண்டை நாடு (அருவாநாடு) கொங்கு நாடு என்று ஆறு பிரிவுகளாகப் பிரிந்திருந்தது. சேர, சோழ, பாண்டிய நாடுகளை முடியுடைய பேரரசர் மூவர் அரசாண்டனர். கொங்கண நாடாகிய

துளு நாட்டை நன்னர் என்னும் பெயருடைய வேளிர் அரசாண்டனர். கொங்கு நாட்டுக்கும் தொண்டை நாட்டுக்கும் பேரரசர் (முடி மன்னர்) அக்காலத்தில் இல்லை. கொங்கு நாட்டையும் தொண்டை நாட்டையும் குறுநில மன்னர்கள் ஆட்சி செய்து கொண்டிருந்தார்கள். கடைச் சங்க காலத்தின் இறுதியில் (கி.பி. 2ஆம் நூற்றாண்டின் இறுதியில்) மாறுதல் ஏற்பட்டது'' (Annuals of Oriental Research of the University of Madras. Vol. XXI. Part I - 1966)

சேர மன்னர்களின் நாட்டின் எல்லை, பரப்பு மற்றும் மன்னர்கள் பற்றிய விவரங்களைப் பதிற்றுப்பத்து, அகநானூறு, புறநானூறு, சிலப்பதிகாரம் முதலிய நூல்களின் உதவியோடு பதிவு செய்துள்ளார். சேரநாட்டில், குட்டநாடு, குடநாடு, பூழிநாடு, குன்றநாடு, மலைநாடு, கொங்குநாடு, பொறைநாடு ஆகியவை உள்ளடங்கி இருந்ததாகக் குறிப்பிடுகிறார். சேரர்கள் தலைநகரமாக வஞ்சி மற்றும் மாந்தை இருந்ததாகக் கூறுகிறார். இன்றைய கரூர், சங்க காலத்தில் வஞ்சி என அழைக்கப்பட்டது என்ற பல வரலாற்றாசிரியர்கள் கருத்தோடு, வேங்கடசாமி அவர்களும் உடன்படுகிறார். பதிற்றுப்பத்து ஒன்றே சேரர்கள் பற்றிய ஆவணமாக இருப்பதைத் தெளிவுபடுத்துகிறார். இதில் சேர நாட்டுச் சேர அரசர் அறுவர், கொங்கு நாட்டுச் சேர அரசர் நால்வர் பற்றிப் பேசப்படுவதாகக் கூறுகிறார்.

பதிற்றுப்பத்தில் பேசப்படும் சேர அரசர்களாகப் பின் கண்டவர்களைக் கூறுகிறார். இரண்டு கால் வழியைச் சேர்ந்தவர் களாகச் சேர அரசர்கள் இருப்பதாகவும் கூறுகிறார். உதியன் கால்வழி, அந்துவன் கால்வழி என்பவை அவை. உதியன் கால்வழி மரபில், உதியன், உதியன் மகன் நெடுஞ் சேரலாதன், நெடுஞ்சேரலாதனின் தம்பி பல்யானைச் செல்கெழுகுட்டுவன், நெடுஞ்சேரலாதனின் மக்கள் களங்காய்க் கண்ணிநார்முடிச் சேரல், கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் ஆகியோரை வேங்கடசாமி குறிப்பிடுகிறார். அந்துவன் கால்வழி மரபில், அந்துவன், அந்துவன் மகன் செல்வக்கடுங்கோ, செல்வக் கடுங் கோவின் மகன் பெருஞ்சேரல் இரும்பொறை மற்றும் குட்டுவன் இரும்பொறை ஆகியோர் ஆவர்.

சேர மன்னர்கள் பலரும் கடற்போரில் ஈடுபட்டதை விரிவாகப் பதிவு செய்துள்ளார். சேரர்களுக்கு யவனர்களோடு தொடர்பு இருந்ததைக் கூறுகிறார். சேரன் செங்குட்டுவன் நிகழ்த்திய பத்துப் போர்களைப் பற்றிய விரிவான தகவல்களைப் பதிவு செய்துள்ளார். சேரமான் மாரிவெண்கோ, சேரமான் பெருஞ்சேரலாதன், சேரமான்

பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன், சேரமான் கருவூர் ஏறிய ஒள்வாள் கோப்பெருஞ்சேரல் இரும்பொறை, சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோ, சேரமான் குடகோச்சேரல் இரும்பொறை, மாந்தரன், மாந்தரம் பொறையன் கடுங்கோ, சேரமான் யானைக்கட் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை, சேரன் மாந்தரஞ்சேரல் இரும்பொறை, கோச் சேரமான் யானைக்கட் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை, வானவன், சோழிய ஏனாதி திருக்குட்டுவன் ஆகிய சேர மன்னர்கள் பற்றிய குறிப்புகளையும் வேங்கடசாமி ஆய்வு செய்து தந்துள்ளார். இவர்கள் பதிற்றுப்பத்து அல்லாத பிற இலக்கியத்தரவுகள் மூலம் அறியப்படுவோர் ஆவர். புறநானூற்றுப் பாடல்களில் மேற்குறித்த பல சேரர்கள் பேசப்படுகின்றனர்.

சேரர்கள் அரசர்களாக இருந்து கொண்டே புலவர்களாகவும் திகழ்ந்தனர். இவ்வகையில் எட்டுப் பேரைக் குறித்து வேங்கடசாமி எழுதுகிறார். பதிற்றுப்பத்து சேரர்கள் பற்றி அறிவதற்கு முதன்மைத் தரவாக இருந்தாலும், அதில் பேசப்படுவோர் வேறு இடங்களிலும் பேசப்படுவதை, பாடல்களின் கொளு மற்றும் கல்வெட்டுச் சான்றுகளுடன் வேங்கடசாமி ஆய்வு செய்துள்ளார். இவ்வகையில், சேரர்கள் குறித்த அரசியல் வரலாற்றை, இவர் எழுதியிருப்பதைக் காணமுடிகிறது.

மூவேந்தர்களில் பிற்காலங்களில் பெரிதும் அறியப் பட்டவர்களாக இருந்தவர்கள் பிற்காலச் சோழர்கள் ஆவர். பிற்காலச் சோழர்களுக்கும் முற்காலச் சோழர்களுக்கும் தொடர்ச்சி இருந்ததை அறிய முடியவில்லை.முற்காலச் சோழர்கள் பற்றிய இலக்கியக் குறிப்புகளோடு, அயல் நாட்டார் குறிப்புகள், கல்வெட்டுகள், தொல்கதைகள் மற்றும் அகழ்வாய்வுத் தரவுகள் உடன்படுவதை அறிய முடிகிறது. முற்காலச் சோழர்கள் பற்றிய விரிவான தகவல் பதிவை வேங்கடசாமி செய்துள்ளார். சங்க காலச் சோழர்களின் ஆட்சி எல்லையை வரையறை செய்வதில் சிக்கல் இருப்பதாகக் கூறுகிறார். சோழர்களின் தலை நகரமாக உறையூர் இருந்ததாகக் கூறுகிறார். சோழர்கள் காலத்தில், காவிரிப்பூம்பட்டினம், குடந்தை, ஆர்க்காடு, பிடவூர், நெய்தலங்கானல், குராப்பள்ளி, கழார், பொத்தி, சாய்க்காடு, வல்லம், வெண்ணி ஆகிய ஊர்கள் பெரிய நகரங்களாக இருந்தமைக்கான சான்றுகளை வேங்கடசாமி தெளிவுபடுத்துகிறார். மூவேந்தர்களில் சோழர்கள் பற்றிய விரிவான குறிப்புகள், வடமொழி மற்றும் அயல்நாட்டார் குறிப்புகளில் காணக்கிடப்பதைத் தெளிவு படுத்துகிறார். புத்த ஜாதகக் கதையில் பேசப்படும் சிபிச் சக்கரவர்த்தி, சோழர்களின் புராணிய மன்னனாகவும் கூறப்படுவதைக் காட்டுகிறார்.

கரிகாலனுக்கு முற்பட்ட சோழ மன்னர்களாக 'கிள்ளி' மரபினைக் கூறுகிறார். பெருநற்கிள்ளி 1; பெருநற்கிள்ளி -2, பெருநற்கிள்ளி-3, கோப்பெருஞ்சோழன், இளஞ்சேட் சென்னி-1, இளஞ்சேட் சென்னி-2, இளஞ்சேட் சென்னி-3, கரிகால் பெருவளத்தான், நலங்கிள்ளி, மாவளத்தான், நெடுங்கிள்ளி,கிள்ளிவளவன்-1, கிள்ளி வளவன்-2, இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, சோழன் செங்கணான் போன்ற முற்காலச் சோழர்கள் குறித்த விரிவான தரவுகளைத் தொகுத்து ஆய்வு செய்துள்ளார். நெடுமுடிக்கிள்ளி, இசைவெங்கிள்ளி, பொலம்பூண் கிள்ளி, கடுமான் கிள்ளி, மணக்கிள்ளி போன்ற சோழர்கள் குறித்த தரவுகள் மிகமிகக் குறைந்த அளவில் கிடைப்பதைப் பதிவு செய்திருக்கிறார். ஆர்க்காட்டுச்சோழர், ஆதன், அழிசி, சேந்தன், சோழர் மருகன் நல்லடி போன்றவர்களும் சோழ அரசர்களாக இருந்திருக்கவேண்டுமென்று பேசுகிறார். சோழ மன்னர்களின் படைத்தலைவர்கள் குறித்தும் விவாதித்துள்ளார். சங்க இலக்கியங்கள் வழி சோழ வேந்தர்கள் குறித்தும் அறிய முடிகிறது என்பதைக் குறிப்பிடும் வேங்கடசாமி அதில் உள்ள சிக்கல்கள் குறித்தும் தெளிவுபடுத்துகிறார்.

"சங்க காலச் சோழ வேந்தரின் வரலாற்றை வரைவதற்குச் சங்க இலக்கியப் பாடல்களே பேருதவியாக உள்ளன. ஆனால், அவற்றில் ஒரு குறையுண்டு. அரசர்களின் ஆட்சிக் காலத்தைப் பற்றியோ, எந்த ஆண்டில் யார் ஆட்சிக்கு வந்தனர் என்பதைப் பற்றியோ, அவை யாதும் கூறுவது இல்லை. கால வரன்முறை, வரலாற்றின் கண்ணாகப் போற்றப்படுகின்றது. காலத்தை வரையறுக்க நமக்கு அகச்சான்றுகள் கிடைக்கவில்லை. எனினும், அப்பாடல்களில் காணப்படும் சிற்சில குறிப்புகளையும் அம்மன்னர்களைப் பாடிய புலவர்களைச் சில தலை முறையினராக வகைப்படுத்துவதற்குரிய செய்திகளையும் புறச் சான்றுகள் சிலவற்றையும் கொண்டு, சங்ககாலச் சோழ வேந்தர்களை ஒருவகையாகக் காலத்தால் முற்பட்டவர், பிற்பட்டவர் யாவர் என்பதைத் துணிந்து, அம்முறையில் அவர்களுடைய வரலாற்றை வரைந்துள்ளோம்" (1983:338).

மேற்கண்ட குறிப்பின் மூலம், வரலாறு எழுதும் பணியில், வேங்கடசாமி அவர்கள் மேற்கொள்ளும் சிரத்தையை அறிய முடிகிறது.

மேலும், சேரர், சோழர் வரலாற்றைப் பதிவு செய்ததைப் போல் பாண்டியர் வரலாற்றையும் பதிவு செய்துள்ளார். சேர, சோழர்கள் பற்றிக் கூறும்போது மலைகள் பற்றிய குறிப்புகளைக் கூறாத

வேங்கடசாமி அவர்கள், பாண்டிய நாடு பற்றிக் கூறும்போது பல்வேறு மலைகளைப் பற்றிக் கூறுகிறார்.அதைப் போலவே துறைமுகங்கள் பற்றியும் கூறுகிறார்.அசோகன் கல்வெட்டுக்களில் பாண்டியர் பற்றிய குறிப்பு காணப்படுவதைப் பதிவு செய்துள்ளார். ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன், இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன், சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன், முடத்திருமாறன், மாலைமாறன், பழையன் மாறன், இளம் பழையன் மாறன், பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி, கானப்பேர் எயில் கடந்த உக்கிரப் பெருவழுதி, வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி, இளம் பெருவழுதி, பெரும்பெயர் வழுதி, குறுவழுதி, நல்வழுதி, பாண்டியன் மாறன் வழுதி, கடலன் வழுதி, மருங்கை வழுதி, கொற்கை வழுதி, ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன், பசும்பூண் பாண்டியன், பாண்டியன் அறிவுடைநம்பி, பாண்டியன் கீரஞ்சாத்தன், வடிவம்பலம் நின்ற பாண்டியன், இந்திரன் ஆரம்பூண்ட பாண்டியன், மழை பிணித்தாண்ட மன்னவன், பொற்கைப் பாண்டியன், மலயத்துவச பாண்டியன், தடாகைப்பிராட்டியார் எனப்படும் பாண்டிய அரசர்கள் குறித்த தகவல்களை, வேங்கடசாமி ஆய்வு செய்து வெளிப்படுத்தியுள்ளார்.

வாய்மொழிக் கதைகள், கல்வெட்டுகள், சங்க இலக்கியம் மற்றும் பல்வேறு இலக்கியப்பிரதிகள் ஆகியவற்றில் காணப்படும் குறிப்பு களைத் தொகுத்துப் பாண்டியர் வரலாற்றைக் கட்டமைத்துள்ளார். பாண்டியர் குறித்த விரிவான குறிப்புகளை இவரே வழங்கியுள்ளார்.

சங்ககால அரசியல் வரலாற்றின் ஒரு பகுதியாகவே 'துளுநாட்டு வரலாறு' (1966) 'கொங்குநாட்டுவரலாறு' (1974) ஆகிய நூல்களை வேங்கடசாமி எழுதியுள்ளார். சங்க காலத்தில் ஆறு பகுதிகளில் ஒரு பகுதியாக கொங்கு நாடு அமைந்திருப்பதைத் தெளிவுபடுத்துகிறார். கொங்கு நாட்டைப் பற்றி எழுதிய நூலின் முன்னுரையில் பின்கண்டவாறு குறிப்பிடுகிறார்.

''அகழ்வாராய்ச்சி (ஆர்க்கியாலஜி) கொங்கு நாட்டில் தொடங்கவில்லை என்றே கூறவேண்டும். தமிழ்நாட்டின் ஏனைய மண்டலங்களில் ஆர்க்கியாலஜி முறையாகவும் தொடர்ந்தும் முழுமையுமாகச் செயற்படாமலிருப்பது போலவே, கொங்கு மண்டலத்திலும் ஆர்க்கியாலஜி அதிகமாகச் செயற்படவில்லை. ஆகவே ஆர்க்கியாலஜி சான்றுகள் நமக்குப் போதுமான அளவு கிடைக்கவில்லை'' (1974: முன்னுரை)

வேங்கடசாமி அவர்கள் குறிப்பிட்ட அகழ்வாய்வு, கொங்கு நாட்டில் 1980இல் மேற்கொள்ளப்பட்டது. 'கொடுமணல்' என்ற இடத்தில், பேரா. ஏ. சுப்பராயலு தலைமையில் நிகழ்த்தப்பட்ட அகழ்வாய்வு, வேங்கடசாமி குறிப்பிட்ட குறையை நீக்கியுள்ளது. சங்ககாலம் தொடர்பான பல்வேறு அரிய தரவுகள் 'கொடுமணல்' அகழ்வாய்வில் கிடைத்ததை இங்குப் பதிவு செய்ய வேண்டும். இதன்மூலம் வேங்கடசாமி அவர்களின் தொலை நோக்குப் பார்வையைப் புரிந்து கொள்ள முடிகிறது. சங்ககாலக் கொங்கு நாட்டைப் பற்றிய ஆய்வில் கொங்கு நாடு பற்றிய பல்வேறு குறிப்புகளைத் தருகிறார். உம்பற்காடு, ஓகந்தூர், கருவூர், கட்டிநாடு, காமூர், குதிரைமலை, நன்றாமலை, விச்சிநாடு, வெள்ளலூர், வையாவிநாடு, திருச்செங்கோடு, படியூர், புகழியூர், புன்னாடு, எருமையூர், துவரை, பூழிநாடு, மாந்தை, தொண்டி (கொங்கு நாடு) ஆகிய இடங்களைக் குறித்த விரிவான தகவல்களைச் சங்க இலக்கியங்கள் மற்றும் சாசனங்கள் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு தந்துள்ளார்.

அதிகமான், ஓரி, கழுவுள், குமணன், விச்சியரசர், கட்டியரசர், குதிரைமலைக்கொற்றவர், நள்ளி, புன்னாட்டரசர், கோசர் ஆகிய குறுநில மன்னர்கள் கொங்குநாட்டை ஆண்டனர்; ஒரு காலத்தில் சேர அரசர்கள், கொங்குநாட்டைக் கைப்பற்றி அரசாண்டார்கள். அந்துவஞ்சேரல் இரும்பொறை, செல்வக் கடுங்கோ வாழியாதன், பெருஞ்சேரல் இரும்பொறை, குட்டுவன் இரும்பொறை, இளஞ்சேரல் இரும்பொறை, யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை, கணைக்கால் இரும்பொறை ஆகிய சேர மன்னர்கள் கொங்கு நாட்டை ஆட்சி புரிந்துள்ளார்கள்.

அஞ்சியத்தை மகள் நாகையார், அதியன் விண்ணத்தனார், அரிசில்கிழார், உம்பற்காட்டு இளங்கண்ணனார், ஔவை, கருவூர் கண்ணம் பாலனார், கருவூர் கதப்பிள்ளை சாத்தனார், கருவூர் கிழார், கருவூர்க்கோசனார், கருவூர் சேரமான்சாதன், கருவூர் நன்மார்பனார், கருவூர்ப் பவுத்திரனார், கருவூர்ப் பூதஞ்சாத்தனார், கருவூர்ப் பெருஞ் சதுக்கத்துப் பூதனாதனார், கொல்லிக் கண்ணனார், சேரமான் கணைக் காலிரும்பொறை, பாலை பாடிய பெருங்கடுங்கோ, பேய்மகள் இளவெயினி, பொன்முடியார், பெருந்தலைச் சாத்தனார்,மருதம் பாடிய இளங்கடுங்கோ ஆகிய கொங்குநாட்டுப் புலவர்கள் குறித்து வேங்கடசாமி அவர்கள் ஆய்வு செய்து பல தகவல்களைத் தொகுத்துத் தந்துள்ளார்.

பதிற்றுப்பத்து, தகடூர் யாத்திரை, ஐங்குறுநூறு ஆகிய இலக்கியங்களில் கொங்குநாடு பற்றிய தகவல்கள் இருப்பதை வேங்கடசாமி வெளிக் கொணர்ந்துள்ளார். சங்க காலத்துத் தமிழ் எழுத்து எனக் கருதப்படும் பிராமி எழுத்துகள் கொங்குநாட்டுப் பகுதியில் கிடைத்துள்ளன. அரசலூர் என்னும் கொங்குப் பகுதியில் உள்ள பிராமி எழுத்துக்களைக் கண்டறிந்தவர் வேங்கடசாமி ஆவார். இச்சாசனம் குறித்தும் மற்றும் புகழியூர் என்னும் ஊரில் உள்ள பிராமிஎழுத்துக் குறித்தும் ஆய்வு செய்துள்ளார். சேர அரசர்கள் பெயர், சமண முனிவர்கள் பெயர்கள் பிராமி எழுத்துக்களில் காணப் படுவதைத் தெளிவுபடுத்தியுள்ளார்.

கி.பி.2ஆம் நூற்றாண்டில் இருந்த துளுநாடு குறித்தும் ''துளுநாட்டு வரலாறு'' (1966) என்னும் பெயரில் வேங்கடசாமி ஆய்வு செய்துள்ளார். சங்கப் பாடல்களில் ஆங்காங்கே சிதறிக் கிடக்கும் வரலாற்றுத் துணுக்குகளையெல்லாம் திரட்டி இவ்வரலாற்றை எழுதியுள்ளார். இன்றைக்குத் தென் கன்னட மாவட்டம் என்று அழைக்கப்படும் பகுதிதான் துளுநாடு. கொங்கணம் என்று அழைக்கப்படுவதும் துளுநாடுதான். செல்லூர், பாரம், பாழி, கொடுகூர், வியலூர், நறவு, கடம்பின் பெருவாயில், வாகைப் பெருந்துறை, கடல்துருத்தி, மங்களூர் ஆகிய ஊர்கள் துளுநாட்டில் பெரிதும் அறியப்பட்ட ஊர்களாக வேங்கடசாமி குறித்துள்ளார்.

துளுநாட்டை நன்னன் பரம்பரை மன்னர்கள் ஆட்சி புரிந்ததாக அறிய முடிகிறது. முதலாம் நன்னன் (கி.பி.100-125), இரண்டாம் நன்னன் (கி.பி.125-150), நன்னன் மூன்றாமவன் (கி.பி.150-180) ஆகியவர்கள் துளுநாட்டை ஆட்சி புரிந்தவர்கள். இவர்கள் சேர மன்னர்களோடு போர் புரிந்துள்ளனர். இவ்வகையில் மிகச் சிறிய நாடாக இருந்த துளுநாடு குறித்த தகவல்களைத் திரட்டி, நூல் வடிவில் வேங்கடசாமி அவர்கள் தந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

கி.பி. -575 இடைப்பட்ட காலப்பகுதியில் இருந்த களப்பிரர்கள் குறித்து, 'களப்பிரர் ஆட்சியில் தமிழகம்' (1975) என்னும் நூலை எழுதியுள்ளார். தமிழக அரசியல் வரலாற்றில் 'இருண்ட காலம்' என்று கூறப்படும் களப்பிரர் குறித்துப் பின்வருமாறு தெளிவுபடுத்துகிறார் வேங்கடசாமி அவர்கள்.

''தமிழ்நாட்டின் வரலாறு முழுமையாகவும் தெளிவாகவும் சரியாகவும் இன்னும் எழுதப்படாமலிருப்பது தமிழரின் பெருங்குறையாகும். தமிழகத்தின் மிக நீண்ட வரலாற்றில் களப்பிரர் ஆட்சிக்காலம் முக்கியமானது. களப்பிரர் ஆட்சிக் காலம் தமிழ்நாட்டு

வரலாற்றில் 'இருண்டகாலம்' ஆக இருந்து வந்தது. ஒரு காலத்தில் களப்பிரர் தமிழகத்தை அரசாண்டார்கள் என்னும் வரலாற்றுச் செய்தியே நெடுங்காலமாக மறைந்து கிடந்தது. வேள்விக்குடிச் செப்பேடு கிடைத்து, இது வெளியிடப்பட்ட பிறகுதான், களப்பிரர் என்னும் அரசர் இருந்தனர் என்றும் அவர்கள் தமிழகத்தை அரசாண்டனர் என்றும் தெரிய வந்தது. அதற்குமுன் அப்படி ஒரு அரசர் பரம்பரை இருந்தது என்பதை அறியாமலே இருந்தோம். களப்பிரரின் 'இருண்ட காலம்', இந்நூலினால் விடியற்காலம் ஆகிறது. மேலும் புதைபொருள் சான்றுகள், பழங்காலச் சான்றுகள் கிடைக்குமானால் களப்பிரர் வரலாற்றில் பகற்காலத்தைக் காணக் கூடும்'' (1975: முன்னுரை)

களப்பிரர் யார்? என்னும் கேள்வியை எழுப்பி, அதற்கான விடையைத் தெளிவுபடுத்துகிறார். பல வரலாற்று ஆசிரியர்களும் கூறியது போன்று, களப்பிரர் திராவிடர் அல்லர் என்பதை இவர் மறுக்கிறார். மாறாக இவர்கள் வடுகக் கருநாடகர். திராவிட இனத்தைச் சேர்ந்தவர்கள் என்பதற்கான சான்றுகளைத் தருகிறார். களப்பிரர் ஆட்சிக் காலத்தில், சோழ அரசர்கள், களப்பிரருக்கு அடங்கி இருந்தனர். இக்காலத்தில் சோழ அரசர்கள், தெலுங்குப் பகுதிகளுக்குச் சென்று சிறு இராச்சியத்தை உருவாக்கிக் கொண்டனர் என்றும் கல்வெட்டுச் சான்றுகளைக் காட்டுகிறார். தற்போதைய கடப்பை, கர்நூல் பகுதிகள் அன்று சோழர் ஆட்சியில் இருந்தன.இவற்றுக்கு 'இரேணாடு ஏழாயிரம்' என்று பெயர். எனவே இவர்கள், களப்பிரர் காலத்து இரேணாட்டுச் சோழர் என்று அழைக்கப்படுவர். இம்மன்னர்கள் குறித்தும் வேங்கடசாமி ஆய்வு செய்துள்ளார்.

களப்பிரர் காலத்தில் இருக்குவேளிர் அரசர்கள், கொடும்பாளூர் பகுதியில் ஆட்சி புரிந்தனர். இவர்களும் களப்பிரர் ஆட்சியின் கீழ் இருந்ததாகக் கூறுகிறார். 'மூவர் கோயில் கல்வெட்டுச் சாசனம்' மூலம் மேற்குறித்த தகவலை உறுதிப்படுத்துகிறார். களப்பிரர் கால இருக்குவேளிர் குறித்து விரிவான ஆய்வை வேங்கடசாமி மேற்கொண்டுள்ளார். கி.பி.6ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில், பாண்டியர் களப்பிரரை வென்று ஆட்சியைக் கைப்பற்றினார்கள். இச்செய்திகளை வேள்விக்குடிச் செப்பேடு விரிவாகப் பேசுவதைக் காணமுடிகிறது.

களப்பிரர் தொடர்பான வரலாற்று ஆய்வில் பல புதிய முடிபுகளை வேங்கடசாமி முன்வைக்கிறார். பல வரலாற்று ஆசிரியர்கள் கூறியது போன்று, இக்காலத்தை இவர், 'இருண்ட

காலம்' என்று கூறாமல், பல்வேறு வளர்ச்சிகள் ஏற்பட்டகாலம் என்கிறார். தமிழ் எழுத்து வடிவம் நன்கு வளர்ச்சிபெற்று வட்டெழுத்து வடிவத்தினைப் பெற்றது களப்பிரர் காலத்தில் தான், தமிழ் யாப்பு நன்கு வளர்ச்சியுற்றது. பல்வேறு பாவகைகள் தமிழில் உருவானதும் இக்காலத்தில்தான். குறிப்பாக வெண்பா சிறப்பான வளர்ச்சி பெற்றிருந்தது. அவிநயம், காக்கை பாடினியம், நத்தத்தம், பல்காப்பியம், பல்காப்பியப் புறனடை, பல்காயம் ஆகிய இலக்கண நூல்கள் களப்பிரர் காலத்தில்தான் எழுதப்பட்டன. நரிவிருத்தம், எலிவிருத்தம், கிளிவிருத்தம் ஆகிய தத்துவ நூல்கள், பெருங்கதை முதலிய காப்பியங்களும் இக்காலத்தில்தான் வெளிவந்தன. பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் பலவும் இக்காலத்தில்தான் எழுதப்பட்டன. மூத்த திருப்பதிகம், திருவிரட்டை மணிமாலை, அற்புதத் திருவந்தாதி, கயிலைபாதி காளத்தி பாதி, திருவந்தாதி முதலான பல சைவ நூல்கள் இக்காலத்தில் எழுதப்பட்டதாகவும் வேங்கடசாமி கருதுகிறார்.

இலக்கணம், இலக்கியம், தத்துவம், சமயம் முதலிய துறைகளில் மட்டுமின்றி கலைத் துறையிலும் களப்பிரர் காலத்தில் சிறந்த வளர்ச்சிக் காணமுடிவதாக வேங்கடசாமி கூறுகிறார். சிற்பக்கலை நன்கு வளர்ச்சி பெற்றிருந்தது. காரைக்கால் அம்மையார் பாடல்களில் இசைக்கூறுகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. இதன்மூலம், இக்கால இசைவளர்ச்சியைக் காணமுடிகிறது. 'விளக்கத்தார் கூத்து' என்னும் நூலும் வெளிவந்ததாகக் கூறுகிறார். பௌத்த மதம் சமண மதம் ஆகியவை நன்கு வளர்ச்சியுற்றமை குறித்தும் களப்பிரர் காலத்தில் இலங்கையில் ஆட்சி புரிந்தவர்கள் குறித்தும் எழுதியுள்ளார்.

சாக்கிய நாயனார், சங்கமித்திரர், புத்ததத்த மகாதேரர், சுமதி, ஜோதிபாலர், புத்தமித்திரர், போதிதருமர், ஆசாரிய திக்நாதர், காஞ்சி தருமபால ஆசாரியர் ஆகிய பௌத்த அறிஞர்கள் களப்பிரர் காலத்தில் வாழ்ந்ததாக எழுதுகிறார். இவ்வகையில், மறைக்கப்பட்டிருந்த களப்பிரர் குறித்த வரலாற்றின் பல்வேறு அரிய தரவுகளை வேங்கடசாமி வெளிப்படுத்தியுள்ளார்.

சேரர், சோழர், பாண்டியர், கொங்குநாடு, துளுநாடு களப்பிரர் முதலானவற்றின் அரசியல் வரலாறு குறித்து விரிவான ஆய்வுகளை மேற்கொண்ட வேங்கடசாமி அவர்கள், மேற்குறித்த மன்னர்கள் மற்றும் நாடுகள் தொடர்பான பண்பாட்டு வரலாற்றையும் விரிவாகப் பதிவு செய்துள்ளார். தமிழர் பண்பாட்டு வரலாற்றைக் கட்டமைப்பதற்கு இவை பெரிதும் உதவுவனவாக உள்ளன. இவ்வகை

பண்பாட்டு வரலாறு தொடர்பாக வேங்கடசாமி கூறும் பல்வேறு செய்திகளையும் தொகுத்துக் காணமுடியும்.

''நாட்டின் சரித்திரம் அந்நாட்டை அரசாண்ட அரசர்களுடைய வரலாறு மட்டும் அன்று. அந்நாட்டில் வாழ்ந்த மக்களின் வாழ்க்கை வரலாறும் சேர்ந்ததே சரித்திரமாகும்'' (1974: முகவுரை).

சங்க கால மக்கள் வாழ்க்கை, குறிப்பாகப் பண்டமாற்று போக்குவரத்துச் சாதனங்கள், தமிழ் மற்றும் பிறநாட்டு வணிகர்கள், துறைமுகப்பட்டினங்கள், விளைபொருட்கள், உற்பத்திப்பொருட்கள் ஆகியன குறித்து விரிவாகப் பதிவு செய்துள்ளார்.

சங்ககால மக்கள் வாழ்க்கை, தாம் வாழ்ந்த நிலத்தோடு சார்ந்து இருந்ததைக் காட்டுகிறார். மலை, மலைகளின் அடிவாரம், நீர்வளம் உள்ள நிலப்பகுதி, கடலைச் சார்ந்த பகுதி என்ற அமைப்பில் மக்கள் வாழ்க்கை அமைந்திருந்தது. இவர்கள், தமது அன்றாடத் தேவைகளுக்கான அரிசி, பருப்பு, உப்பு,பால், தயிர், மீன், இறைச்சி ஆகியவற்றைப் பண்டமாற்று மூலம் பெற்றதைக் காட்டுகிறார். இடையர்கள், ஆயர், மகளிர், வேடர்கள், உழவர்கள், பாணர்கள், உப்புவணிகர். உமணப் பெண்கள், பரத மகளிர், மலைவாழ் மக்கள், எயினர் ஆகிய அனைத்து தரப்பு மக்களும் பண்டமாற்றுச் செய்தனர் என்பதற்கான சங்கப் பாடல் தரவுகளைத் தொகுத்துத் தந்துள்ளார். பண்டமாற்று மட்டுமின்றிக் காசுகளையும் பயன்படுத்தியது தொடர்பான குறிப்புகளைக் கூறுகிறார். செம்பு, வெள்ளி, பொன் ஆகியவற்றால் காசுகள் செய்யப்பட்டன. அவை நெல்லிக்காய் வடிவம்போல் இருக்கும். உகா மரத்தின் பழம் போல் மஞ்சள் நிறப் பொற்காசுகள் இருக்கும். காசு மாலையைப் பெண்கள் அணிந்தனர் என்பன போன்ற மக்களின் அடிப்படை வாழ்க்கை முறைமை பற்றிய தகவல்களை அறிய முடிகிறது.

சங்க காலத்தில் போக்குவரத்துக்கென எருது, கழுதை, வண்டி, படகு, பாய்மரக்கப்பல் ஆகியவற்றைப் பயன்படுத்தினர். சிந்து, பாரசீகம், அரபிநாடுகளிலிருந்து குதிரைகள் கொண்டு வரப்பட்டன. வெளிநாடுகளிலிருந்து கோவேறு கழுதைகள் கொண்டுவரப் பட்டமையையும் அறிய முடிகிறது. தமிழ் நாடு மூன்று பக்கங்களிலும் கடல் சூழ்ந்திருப்பதால், இயல்பாகவே கடல் பயணத்தைத் தமிழர்கள் மேற்கொள்ளும் சூழல் உருவானது. கரிகால் சோழனின் முன்னோர்களில் ஒருவன் கடற்காற்றின் உதவியினால் நாவாய் ஓட்டினான் என்று புறநானூற்றுப் பாடல் (66) கூறுகிறது. பாண்டிய மன்னர்கள் கடற் பயணம் மேற்கொண்டதைச் சங்கப் பாடல்கள்

கூறுகின்றன. வணிகச் சமூகம் உருப்பெற்றிருந்தது. தரைவழி வணிகம் செய்தவர்களும் உண்டு. இவர்களுக்கு வணிகச் சாத்து என்று பெயர். வணிகச் சாத்தினர் கூட்டம் கூட்டமாக வணிகம் செய்யச் சென்றனர். இவர்கள் தங்கள் பாதுகாப்பிற்காக வில்வீரர்களையும் அழைத்துச் சென்றுள்ளனர். மிளகு இவர்களது வணிகத்தில் மிக முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது.

சாவகம், காழகம், கடாரம் முதலிய இடங்களுக்குச் சென்று தமிழர்கள் கடல் வணிகம் செய்தனர். இவை இன்றைய கிழக்கிந்தியத் தீவுகள், பர்மா போன்ற பகுதிகள் ஆகும். கடற்கரையோர வணிகம் நடைபெற்றதை அறியமுடிகிறது. ஒரு துறைமுகத்தில் இருந்து, கரையோரத்தில் உள்ள இன்னொரு துறைமுகத்திற்குத் தொடர்ந்து சென்று வாணிகம் செய்துள்ளனர். கொற்கை, தொண்டி, பூம்புகார், போன்ற துறைமுகங்களுக்குச் சென்றுள்ளனர். கலிங்கப் பட்டினம் போன்ற துறைமுகங்களுக்குச் சென்றுள்ளனர். ஆழ்கடலிலும் சென்று வணிகம் செய்ததற்கான தரவுகள் கிடைக்கின்றன. வணிகத்தில் சிறப்புற்றவர்களுக்கு எட்டிப் பட்டம் அளித்துப் பாராட்டியுள்ளனர்.

அரபு வணிகர்கள் முசிறித் துறைமுகத்திற்கு வந்துள்ளனர். கிரேக்கம் மற்றும் உரோம நாட்டார் அக்காலத்தில் 'யவனர்' என்ற சிறப்புப் பெயர் பெற்றிருந்தனர். யவனர் குறித்துச் சங்க இலக்கியம் விரிவான செய்திகளைப் பேசுகிறது. இவர்கள் கரையோரமாகவே வணிகம் செய்யும் பண்பினர். கிரேக்க மொழியில் கலம் என்னும் சொல், தமிழைப் போலவே கப்பலைக் குறிக்கிறது. பொற்காசுகள், வெள்ளிக் காசுகளை யவனர் பயன்படுத்தினர். அவை தமிழ் நாட்டில் கிடைத்துள்ளன. இவ்வகையில் வணிகத்தில் சிறப்புற்றிருந்த துறைமுகப் பட்டினங்களாகப் பின் கண்டவற்றை வேங்கடசாமி அவர்கள் கூறுகிறார்.

கிழக்குக்கரையில் கொல்லந்துறை, எயிற்பட்டினம், அரிக்கா மேடு, காவிரிப் பூம்பட்டினம், தொண்டி, மருங்கை, கொற்கை ஆகியனவாகும். இலங்கையில் மணிபல்லவம், திருக்கேதீச்சரம் என்பவை துறைமுகப் பட்டினங்கள் ஆகும். தமிழகத்தின் மேற்குக் கரையில் மங்களூர், நறவு, தொண்டி, மாந்தை, முசிறி முதலிய துறைமுகங்கள் இருந்தன.

சங்க காலத்தில் வெல்லமும் சர்க்கரையும் உற்பத்தி செய்யப் பட்டன. இதற்காகக் கரும்பு மிகுதியாகப் பயிர் செய்யப் பட்டது. கரும்புச்சாறு பிழியும் எந்திரங்கள், கருப்பஞ்சாற்றிலிருந்து வெல்லம் காய்ச்சும் ஆலைகள் இருந்தது பற்றிய குறிப்புகள் உள்ளன.

தமிழகத்தில் கள் மற்றும் மதுபானம் என்பவைகள் பரவலாகப் புழக்கத்தில் இருந்தன. இவை தமிழகத்தில் உற்பத்தி செய்யப்பட்டன. கள், தேறல், தோப்பி, பிழி, நறவு, மகிழ், மட்டு முதலான பெயர்கள் மதுபானங்களுக்குரியவை. கள் மற்றும் மதுபானங்கள் குறித்த விரிவான தகவல்களைச் சங்க இலக்கியத்தில் காண முடிவதை வேங்கடசாமி விரிவாக ஆய்வு செய்துள்ளார். தமிழ்நாட்டில் பஞ்சு விளைந்தது. எனவே ஆடைநெய்தல் பழம்காலம் முதல் நடை முறையில் இருந்து வந்துள்ளது. கடற் சங்குகள் எடுக்கப்பட்டு 'வளை' செய்யப்பட்டன. முத்துகள் எடுக்கப்பட்டன. யானையின் தந்தம் பல பொருட்கள் செய்ய அடிப்படையாக அமைந்தது.

சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் பற்றிய தரவுகளைக் கூறும் சங்க இலக்கியங்கள் அவர்களது, அரசியல் வரலாற்றைக் கூறுவதோடன்றி அக்கால மக்களின் வாழ்க்கையைக் கூறும் பண்பாட்டு வரலாற்றையும் வெளிப்படுத்துகின்றன. பல்வேறு அகழ்வாய்வுகள், இலக்கியங்கள் கூறும் செய்திகளை உறுதிப் படுத்துகின்றன. அண்மைக் காலங்களில் கண்டறிந்த கல்வெட்டுச் சாசனங்களும் இலக்கியம் மற்றும் அகழ்வாய்வுத் தகவல்களை மேலும் உறுதிப்படுத்தும் தரவுகளாக அமைகின்றன. இவ்வகைப் பின்புலத்தில் பண்டைக்காலத் தமிழக அரசியல் மற்றும் பொருளாதார வரலாற்றை வேங்கடசாமி அவர்கள் எழுதியுள்ளார்கள்.

வேங்கடசாமி அவர்கள் தமிழகத்தின் வரலாறு எழுதும்போது அதன் ஒரு பகுதியாக இலங்கை வரலாற்றை எழுதுவதைக் காணமுடிகிறது. இலங்கைக்கும் தமிழகத்திற்குமான உறவு குறித்துப் பின்வரும் வகையில் தெளிவுபடுத்துகிறார்.

''பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு, இப்போது தனித் தீவாக பிரிந்திருக்கிற இலங்கை, தமிழகத்தோடு இணைந்து ஒரே நிலப்பரப்பாக இருந்தது. அந்தக் காலத்தில் கன்னியாகுமரிக்குத் தெற்கிலும் கிழக்கிலும் பாண்டிய நாட்டோடு இணைந்திருந்த நிலம், இலங்கையோடு இணைந்து ஒரே நிலப்பரப்பாக இருந்தது. பின்னர் காலந்தோறும் ஏற்பட்ட கடல் கோள்களினாலே அந்த நிலப்பகுதி சிறிது சிறிதாக அரிக்கப்பட்டுத் தனித்தீவாகப் பிரிந்து இலங்கை என்று பெயர் பெற்றிருக்கிறது. அதன் பிறகு, குமரிமுனையோடு இணைந்திருந்த நிலப்பகுதி, அவ்வப்போது நிகழ்ந்த சில கடல் கோள்களினாலே சிறிது சிறிதாகக் கடலில் மூழ்கி இப்போதுள்ள நிலையையடைந்தது. தமிழ்நாட்டின் கரையோரங்களைச் சுற்றிலும் இலங்கைத் தீவின் கரையோரங்களைச் சுற்றிலும் இப்போதுள்ள கடல்

ஆழமில்லாமல் இருக்கிறது. இந்தக் கடல் ஆழமில்லாமலிருப்பது, முன்னொரு காலத்தில் இந்தப்பகுதி நிலமாக இருந்து இலங்கையும் தமிழகமும் ஒன்றாக இணைந்திருந்தன என்பதற்குச் சான்றாக இருக்கிறது (1983 : 592).

மேற்கூறிய பின்புலத்தில், சங்ககாலத்தில் தமிழகத்தின் ஒரு பகுதியாகவே இலங்கையை இவர் கருதுகிறார். அந்த அடிப்படையில் தமிழகத்தின் பண்டைய வரலாற்றின், குறிப்பாகச் சங்க கால வரலாற்றின் ஒரு பகுதியாகவே இலங்கையைக் கருதுகிறார். அந்தப் பின்புலத்தில் இலங்கை வரலாற்றைத் தமிழக வரலாற்றோடு இவர் இணைத்துப் பேசுவதைக் காணமுடிகிறது.

அநுராதபுரம், உரோகணநாடு, சமந்தம் ஆகிய பகுதிகளையும் மணிபல்லவம், மாதிட்டை ஆகிய துறைமுகப் பட்டினங்களையும் குறித்து வேங்கடசாமி ஆய்வுசெய்துள்ளார். இலங்கையில் இருந்த பழங்குடி மக்களான இயக்கர், நாகர், வேடர் ஆகியோர் தமிழகப் பழங்குடி மக்களோடு ஒப்பு நோக்கத்தக்கவர். தமிழகத்தை அரசாண்ட அரசர்கள் பலர் இலங்கைத் தீவையும் ஆட்சிபுரிந்ததைக் கூறுகிறார். இவ்வகையில் சிங்களர் குடியேறி ஆட்சி அதிகாரத்தைக் கைப்பற்றினர். மீண்டும் ஆட்சி அதிகாரத்தை தமிழர்கள் திரும்பப் பெற்றனர்; என்றும் எழுதுகிறார். இலங்கையில், தமிழ்நாட்டில் தமிழர்கள் வழிபடும் பல்வேறு கடவுளர்களையே வழிபடுவதாகக் கூறுகிறார். கதிர்காமம் முருகன் வழிபாட்டை இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறுகிறார். சிங்களவர் வழிபடும் விஷ்ணு, தமிழர்களின் திருமால் வழிபாடுதான் என்றும் கூறுகிறார்.

களப்பிரர் காலத்தில் இலங்கையை ஆட்சிபுரிந்த மன்னர்கள் குறித்த விவரங்களைத் தொகுத்துத் தந்துள்ளார். திஸ்ஸன், அபயநாகன், ஸ்ரீநாகன், விஜயகுமரன், ஸ்ரீசங்கபோதி, மேகவிண்ணாபயன், ஜேட்டதிஸ்ஸன், மகாசேனன் ஸ்ரீமேகவண்ணன் ஜேட்ட திஸ்ஸன்-2, புத்ததாசன், உபதிஸ்ஸன், மகாநாமன், சொத்திசேனன் போன்ற பல அரசர்களை வேங்கடசாமி பட்டியல் இடுகிறார். (1975) இதைப் போலவே தமிழக இலங்கை பௌத்த தொடர்புகள் குறித்தும் விரிவாக ஆய்வு செய்துள்ளார்.

தமிழக அரசியல் பண்பாட்டு வரலாறுகளை எழுதிய வேங்கடசாமி அவர்கள், தமிழகத்தில் சமயங்களின் வரலாறு குறித்தும் விரிவாக ஆய்வு செய்துள்ளார். பௌத்தம், சமணம் தமிழகத்தில் செயல்பட்ட வரலாற்றை விரிவாக ஆய்வு செய்துள்ளார். சங்க காலத்தில் இருந்த தமிழர்களின் இயற்கை வழிபாடு,

படிப்படியாக வைதீக மரபைக் கைக்கொண்டதையும் அவை பின்னர் சைவம், வைணவம் என்று பல வடிவங்களில் வளர்ச்சியுற்றதையும் வேங்கடசாமி ஆய்வு செய்துள்ளார். பௌத்தம் பற்றி அவர் கூறுவது வருமாறு:

''ஒரு காலத்தில் பௌத்த மதம் தமிழ்நாட்டில் சிறப்புற்றிருந்தது. ஏறக்குறைய கி.மு.இரண்டாம் நூற்றாண்டு முதல் கி.பி. பத்தாம் நூற்றாண்டு வரையில் இந்த மதம் தமிழ்நாட்டில் உயர்நிலை பெற்றிருந்தது. பிற்காலத்தில் பதின்மூன்றாம் நூற்றாண்டுக்குப் பின்னர்,இந்த மதம் மறையத் தொடங்கி, இப்போது முழுவதும் தமிழ்நாட்டில் மறைந்து விட்டது. இப்போதைய தமிழர், ஒரு காலத்தில் பௌத்த மதம் தமிழகத்தில் செல்வாக்குப் பெற்றிருந்ததென்பதை முற்றும் மறந்துவிட்டனர். அஃது இவர்களுக்குப் பழங்கதையாய்க், கனவாய் மறைந்து விட்டது. இந்த ஆராய்ச்சியைத் தொடங்கி பின்னர், பாலி என்னும் மாகதி மொழியில் உள்ள பௌத்த நூல்களை நேரே படித்தறிந்தாலன்றித் தமிழ்நாட்டுப் பௌத்தமத வரலாற்றின் ஆராய்ச்சிமுற்றுப் பெறாதென்பதை உணர்ந்தோம். ஏனென்றால் பௌத்தரால் போற்றப்படுகின்ற பாலிமொழி நூல்களில் சிலவற்றை இயற்றியவர்களும், பாலி மொழியில் உள்ள நூல்களுக்குச் சிறந்த உரைகளைப் பாலிமொழியில் இயற்றியவர்களும் தமிழ்நாட்டில் வாழ்ந்திருந்த தமிழ்ப் பௌத்தர்களாவர்'' (1940:முன்னுரை)

மேற்குறிப்பிட்ட பின்புலத்தில், தமிழகத்தில் பௌத்தத்தின் பல்வேறு கூறுகளை ஆய்வுசெய்துள்ளார். தமிழ் நாட்டில் பௌத்தம் வந்த வரலாறு, வளர்ச்சி, பின்னர் மறைவு ஆகியவை குறித்து ஆய்வுசெய்துள்ளார். நமது பண்பாடு, கலை ஆகியவற்றில் பௌத்தத்தின் செல்வாக்குக் குறித்தும் விரிவாக ஆய்வு செய்துள்ளார். கி.மு.மூன்றாம் நூற்றாண்டு அளவில் பௌத்தம் தமிழகத்திற்கு வந்தது. ஏறக்குறைய அதே காலங்களில் சமணமும் வந்தது. பிராமண மதம், ஆசீவக மதம் ஆகியவையும் இக்காலங்களில் தான் தமிழ்நாட்டில் இடம் பெறத் தொடங்கின. இம் மதங்கள் வருவதற்கு முன்னர், வடநாட்டு மதங்களின் தொடர்பற்ற புராதனமாக இருந்தது, அக்காலத்திய தமிழர் மதம் என்றும் வேங்கடசாமி கூறுகிறார். இதனைப் பற்றி அவர் கூறுவது இங்குக் கருதத்தக்கது.

''வடநாட்டினின்று தென்னாடு போந்த மேற்கூறிய நான்கு மதங்களும் ஒன்றுக்கொன்று முரண்பட்ட கொள்கைகளையுடையவை. ஒன்றோடொன்று பெரும் பகை கொண்டவை. இந்த மதங்கள் செற்றங் கொண்டு, ஒன்றையொன்று அழித்தொழிக்க அற்றம் பார்த்திருந்தன.

அமைதியாக வாழத்தெரியாமல், ஒன்றையொன்று இழித்துப் பழித்துப் பேசிவந்தன. அமைதியாக இருந்த தமிழ்நாட்டில் இந்த வடநாட்டு மதங்கள் வந்து சமயப்பூசல்களைக் கிளப்பிவிட்டன. தமிழ்நாட்டுப் பெருங்குடி மக்களைத் தத்தம் மதத்தில் சேர்த்து, தத்தம் மதத்திற்குச் செல்வாக்கும் சிறப்பும் தேடிக்கொள்ள இந்த மதங்கள் முயற்சி செய்தன. பொதுமக்கள் அன்பையும் ஆதரவையும் பெறவும், அரசர்களையும் செல்வந்தர்களையும் வசப்படுத்திச் செல்வாக் கடையவும் இவை முயன்றன. தமிழர் கொண்டாடும் திருவிழாக்களையும் பண்டிகைகளையும் தக்க சமயமாகக் கொண்டு, இந்த வடநாட்டு மதங்கள் தத்தம் கொள்கைகளைத் தமிழ் மக்களுக்குப் போதித்துவந்ததாகத் தெரிகிறது. இவ்விதச் சமயப் போட்டியில் செற்றமும் கலகமும் ஏற்பட்டன. (1940:32:33)

இவ்வகையில், தமிழக வரலாற்றில் மதங்களின் இடத்தை வேங்கடசாமி அவர்கள் மதிப்பிடுகிறார். இதைப் போலவே சமண மதம் குறித்துத் தமிழர்கள் அறியாமல் இருந்தனர் என்றும் பௌத்த - சமண வேறுபாடுகள் அறியாது இருந்தனர் என்றும் குறிப்பிடுகிறார். இவ்வகையில் சமணம், தமிழுக்கு ஆற்றிய தொண்டுகள் குறித்தும் விரிவாகப் பேசியுள்ளார். தமிழ்நாட்டில் சமண சமயம் வந்த வரலாறு, வளர்ச்சி பெற்ற வரலாறு, சமணத்திற்கு எதிராகத் தமிழகத்தில் நடந்த போர், சமண சமயம் அழிக்கப்பட்ட வரலாறு என்று இவரது ஆய்வு அமைந்துள்ளது. தமிழ் இலக்கிய இலக்கணங்களை உருவாக்கியதில், சமணர்களுக்கு முதலிடம் இருப்பதையும் பதிவு செய்துள்ளார். இந்து மதம் சமணக் கொள்கைகளை உள்வாங்கியது குறித்தும் விரிவாக ஆய்வு செய்துள்ளார்.

பல்லவர்களைப் பற்றிய ஆய்வில், அவர்கள் காலத்தில் சைவம் மற்றும் வைணவம் பெற்றிருந்த செல்வாக்கை வெளிப்படுத்தி யுள்ளார். இவ்வகையில் தமிழகச் சமய வரலாற்றைப் பதிவு செய்ததில் வேங்கடசாமி அவர்களுக்குத் தனியிடம் இருப்பதை நாம் பதிவு செய்வது அவசியம். இவ்வகையில் தமிழக வரலாறு எழுது பணியில் வேங்கடசாமி அவர்களின் செயல்பாட்டைப் பின்கண்டவாறு தொகுத்துக் கொள்ளலாம்.

- *சங்க இலக்கியங்கள் விரிவாக அறியப்பட்ட சூழலில் அவ்விலக்கியங்கள் மூலம் அறியப்படும் பல்வேறு செய்திகள் வழி, தமிழகப் பண்டைய*

கால வரலாற்றை மீட்டுருவாக்கம் செய்ய வேங்கடசாமி முயன்றுள்ளார்.

- பண்டைக்கால அரசியல் வரலாறு மட்டுமின்றி, பல்வேறு பண்பாட்டு வரலாறுகளையும் வேங்கடசாமி தொகுத்துத் தந்துள்ளார். இதில் பண்டைத் தமிழரின் வணிகம் தொடர்பானது பெரிதும் குறிப்பிடத்தக்கது ஆகும்.

- களப்பிரர்கள் குறித்த வேறுபட்ட பார்வையை முன் வைத்ததில் இவருக்குத் தனித்த இடமுண்டு. களப்பிரர் குறித்த வேங்கடசாமி முடிவுகள் வரலாற்றுப் போக்கைக் காட்டுகின்றன. வரலாறு இடைப்பட்டு நின்று விடுவதில்லை என்பதை இதன் மூலம் அறிய முடிகிறது.

- பண்டைக் காலத்தில் இருந்த நாட்டுப் பிரிவுகளைத் தெளிவுபடுத்துகிறார். அவ்வகையில் கொங்கு நாடு, துளு நாடு ஆகியவை குறித்த பல புதிய தரவுகளைத் தொகுத்துத் தந்துள்ளார்.

- வாய்ப்பு நேரும் போதெல்லாம் இலங்கை குறித்து எழுதுவதை வேங்கடசாமி வழக்கமாகக் கொண்டுள்ளார். இவ்வகையில் ஈழத்துத் தமிழர்கள், தமிழ் நாட்டுத் தமிழர்கள் ஆகியவர்களிடத்தில் உள்ள தொடர்பை உறுதிப்படுத்துகிறார்.

- அரசியல் வரலாறும் பண்பாட்டு வரலாறும், புதிது புதிதாகக் கிடைக்கும் தரவுகளைக் கொண்டு புதிது புதிதாக எழுத வேண்டிய தேவை உண்டு. வேங்கடசாமி வரலாறு எழுதும் பணியில் இத்தன்மையைக் கைக் கொண்டிருப்பதைக் காண முடிகிறது.

---

4

# கலை வரலாறு

கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை மற்றும் இசைக்கலை குறித்த வேங்கடசாமி அவர்களின் கலை வரலாற்றுப் பார்வையை இப்பகுதி தொகுத் தளிக்கிறது.

ஒவ்வோர் இனமும் காலம் காலமாகப் பல்வேறு நம்பிக்கைகளைக் கொண்டு வாழ்ந்து வருகின்றது. இந்த நம்பிக்கைகளை வெளிப் படுத்தும் வகையில் பல்வேறு சடங்குகளை நிகழ்த்த வேண்டி யுள்ளது. இவ்வகைச் சடங்குகளை நிகழ்த்து முறைமையின் ஊடாக, ஒவ்வோர் இனக்குழுவும் தனக்கான வெளிப்பாட்டு முறைமைகளை உருவாக்கிக் கொள்கின்றது. இவ்வகை வெளிப்பாட்டு முறைமைகளே கலைவடிவங் களாக நாளடைவில் உருப்பெறுகின்றன. இவை ஆடல், பாடல் என்று நிகழ்த்து நிலையிலும் மற்றும் தாம் உருவாக்கிக் கொள்ளும் அழகியல் சார்ந்து நுண்கலைகளாகவும் வடிவம் கொள்கின்றன. தமிழர்களுக்கும் இவ்வகையான கலைவடிவங்களை நாம் இனம் கண்டு பேசமுடியும். வேங்கடசாமி அவர்கள், தமிழ்நாட்டின் கலைகள் தொடர்பான பல் வேறு செய்திகளையும் தொகுத்து ஆவணப்படுத்தியுள்ளார். இதன் மூலம். தமிழகத்தின் கலைவரலாறு குறித்து விரிவாகப் பேசியுள்ளார்.

''நமது முன்னோர் தலைமுறை தலைமுறையாக வளர்த்த கலை களைப் போற்ற வேண்டுவது அவர் வழிவந்த நமது கடமையாகும். கலைகளை அழித்துக்கொண்டும் அழியவிட்டுக் கொண்டும் இருப்பது, சமுதாயத்தின் வீழ்ச்சியை அல்லது அதன் பிற்போக்கைக் காட்டும் அறிகுறியாகும். ஏனென்றால். பழைய கலைகளுக்கும் சமுதாயத் திற்கும் தொடர்பு உண்டு. விரும்பினாலும் விரும்பா விட்டாலும் கலைகளும் அதனையொட்டிய பண்பாடுகளும் சமுதாயத்தில் பரம்பரையாகத் தொடர்ந்து வந்து கொண்டேயிருக்கின்றன. ஆகவே, நமக்கு உரிமைப் பொருளாகிய நமது அழகுக் கலைகளைப் போற்றிப் பாதுகாக்க வேண்டுவது நாம் ஒவ்வொருவருடைய கடமை ஆகும்.'' (1956:168)

இளமையில் சென்னைக் கலைக்கல்லூரியில், கலை பயிலும் மாணவனாகச் சேர்ந்து, பின்னர் குடும்பச் சூழல் காரணமாக அதனைத் தொடர இயலாது, பிற துறைகளுக்குச் சென்றவர் வேங்கடசாமி அவர்கள். ஆனால், வாழ்க்கை முழுவதும் கலை குறித்த ஆய்வுகளில் மிகுந்த ஈடுபாட்டோடு அவர் செயல்பட்டதைக் காணமுடிகிறது. 'தமிழர் வளர்த்த அழகுக்கலைகள்' (1956)என்ற நூலை, அவர் கலைச் செல்வம் வரிசை-1 என்று வெளியிட்டுள்ளார்.அந்நூல் உள் அட்டையில் காணப்படும் குறிப்பு அவரது கலை ஆய்வு குறித்த நோக்கத்தைப் புரிந்து கொள்ள உதவுகிறது. கலைச் செல்வ வரிசையில் இனி வெளிவரும் நூல்கள் என்று அவரால் சுட்டப்படுவன, கலைச் செல்வம்-2 'ஆனைக்கோயில்': கலைச்செல்வம்-3 'தென்இந்தியச் சிற்பங்கள்': கலைச்செல்வம்-4 'காவியப் புலவன் கற்பனையும் ஓவியப் புலவன் கைவன்மையும்': கலைச்செல்வம்-5 'தேவபாணி' என்பனவாகும். ஆனால் இப்பெயரில் நூல்கள் வெளி வரவில்லை. கலைச்செல்வம்-4 இல் குறிப்பிடும் பெயரில் கட்டுரை ஒன்று மட்டும் எழுதியுள்ளார். 'ஆனைக்கோயில்' என்ற கட்டுரை கையெழுத்துப் பிரதியாகக் கிடைத்துள்ளது. 1956லேயே இவ்வகை அறிவிப்பைச் செய்தவர், ஏன், தொடர்ந்து அப்பெயர்களில் நூல்களை வெளியிட இயலாது போயிற்று என்பது வியப்பாக உள்ளது. இவ்வகைத் திட்டத்தில் செயல்பட்டவர்கள் மிகமிகக் குறைவே. நூல்வடிவில் இல்லாவிடினும், வேறு நூல்கள் எழுதும் போது அவற்றின், கலைகள் தொடர்பான விரிவான குறிப்புகளைத் தந்துள்ளார். எடுத்துக்காட்டாக, பல்லவ மன்னர்கள் பற்றி எழுதிய நூல்களில், மிக விரிவாக அவர்களது காலத்தின் கலைகள் பற்றியே எழுதியுள்ளார். இந்தப் பின்புலத்தில், பல்வேறு கலை வடிவங்களின் வரலாற்றை வேங்கடசாமி எழுதியுள்ளார். அவற்றை நாம் இங்குத் தொகுத்துக் கொள்ளலாம்.

தமிழர்கள் தொடக்கத்தில் மரங்களைக் கொண்டு கோயில்களைக் கட்டத்தொடங்கினர். இவை காலப் போக்கில் எளிதில் அழிந்து போயின. பின்னர் செங்கல், சுண்ணாம்பு போன்ற பொருட்களைப் பயன்படுத்தினர். இவ்வகையில் தமிழர்களின் கட்டடக்கலை வளர்ச்சியடைந்தது. சங்க இலக்கியம், அகழ்வாய்வு ஆகியவற்றில் இதற்கான ஆதாரங்களைக் காணமுடிகிறது. பின்னர் கற்களால் கோயில் கட்டுதல், குகைகளைக் குடைந்து கோயில் உருவாக்குதல் என்ற செயல்பாடுகள் தமிழகத்தில் நிகழ்ந்தன. மண், மரம், கல் என்ற வகையில் கட்டடக்கலை வளர்ச்சியுற்றது. கோயில் உருவாக்கமும் இவ்வகையில் தான் அமைந்தன. இவ்வரலாற்றை வேங்கடசாமி

அவர்கள் விரிவாகப் பதிவு செய்துள்ளார். இவ்வகையில் வளர்ந்த கோயில் கட்டடக் கலையை அதன் பாணி சார்ந்து நாகரம், வேசரம், திராவிடம் என்று வகைப்படுத்துவதை அடிப்படையாகக் கொண்டு வேங்கடசாமி தமது ஆய்வை நிகழ்த்தியுள்ளார். இப்பகுப்பு, கட்டடங்களின் அமைப்பு, அமைக்கப்பட்டுள்ள இடம், அதில் காணப்படும் ஆகமக்கூறுகள் ஆகியவற்றின் அடிப்படையில்தான் செய்யப்படுகின்றன. நர்மதை நதிக்கு வடக்கே கட்டப்பட்டவை நாகரம் என்றும் இவை பட்டையான அமைப்புடையவை என்றும் கூறுகிறார். இவ்வகைக் கோயில்கள் தமிழ் நாட்டில் காணப் படவில்லை. வேசரம் என்னும் பிரிவு பௌத்த மதத்தினரால் முன்னெடுக்கப்பட்ட கட்டடக்கலை அமைப்பு ஆகும். பௌத்தக் கோயில்கள் இவ்வமைப்பைச் சார்ந்து இருக்கும். கட்டடங்களின் தரை அமைப்பு, உடல் அமைப்பு விமான அமைப்பு ஆகியவற்றின் தனித்தன்மைகள் இப்பிரிவில் காணப்படும். வட்டம் அல்லது நீண்ட அரைவட்ட அமைப்பில் இவ்வகைக் கோயில்களின் விமானம் அமைக்கப்பட்டிருக்கும். இவ்வகை அமைப்பின் செல்வாக்கு தமிழ் நாட்டில் சில கோயில்களில் இருப்பதாக வேங்கடசாமி அவர்கள் கூறுகிறார்.

திராவிடம் என்னும் பிரிவு தென்னிந்தியக் கட்டடக்கலை அமைப்பைச் சார்ந்தது ஆகும். கிருஷ்ணா நதி தொடங்கி கன்னியாகுமரி வரை இவ்வகைப் பாணி இருப்பதாகவும் கூறுகிறார். திராவிடக் கோயில் கட்டடப் பாணியில் சாளுக்கியர் மற்றும் ஹொய்சளர் செல்வாக்கு இருப்பதாகவும் வேங்கடசாமி குறிப்பிடுகிறார். விமானங்களின் அமைப்பு, கூரையின் அமைப்பு ஆகியவற்றைக் கொண்டு கோயில்களை வகைப்படுத்துகிறார் திருநாவுக்கரசர் தமது 'திருத்தாண்டகத்தில்' (5) பல கோயில் அமைப்புகளைக் கூறுகிறார். அவை பெருங்கோயில், ஆலக்கோயில், கரக்கோயில், ஞாழற்கோயில்,கொகுடிக்கோயில், இளங்கோயில், மணிக்கோயில் ஆகும். இவற்றைச் சிற்பநூல்கள் கூறும் விளக்கங்களுடன் ஒப்பிட்டு ஆய்வு செய்துள்ளார் வேங்கடசாமி. இவற்றில், ஆலக்கோயில் என்று திருநாவுக்கரசர் குறிப்பிடுவது உண்மையில் ஆனைக்கோயில் அல்லது யானைக் கோயில் என்று வேங்கடசாமி கூறுகிறார். இக்கோயில் வகைபற்றி,அவரது கையெழுத்துப் பிரதி மூலம் அரிய செய்திகளை அறிய முடிகிறது.

கஜபிருஷ்டக்கோயில் என்பதை சேதிகிருஹம் என்று பௌத்த நூல்கள் குறிப்பிடுவதாகவும், 'சேதியகர' என்ற பிராகிருதச்

சொல்லுக்கு யானைக்கோயில் என்று தமிழில் கூறலாம் என்கிறார். சிற்ப நூல்களில் இவ்வகை பற்றிய விரிவான விளக்கங்கள் காணப்படுகின்றன. கஜம், ஹஸ்தி, குஞ்சரம் என்னும் சொற்களின் பொருள் யானை என்பதாகும். யானையைப் பக்கங்களிலிருந்தும் பின்புறத்திலிருந்தும் பார்த்தால் எவ்விதமான தோற்றமாகக் காணப்படுகிறதோ அப்படிப்பட்ட வடிவமுடையவை இக் கட்டடங்கள். ஆகவே இக்கட்டடங்களுக்குக் கஜபிருஷ்டக் கோயில், ஹஸ்தி பிருஷ்டக் கோயில், குஞ்சரக் கோயில் என்று பெயர்கள் கூறப்படுவதாகச் சொல்கிறார். குஞ்சரக் கோயில் என்பதை மணிமேகலை 'குச்சரக் குடிகை' என்று குறிப்பிடுவதையும் காட்டுகிறார். இவ்வகைக் கோயில்கள் அப்பர் தேவாரம் முதலாம் திருமுறையில் 'ஆனைமாடம்' என்று குறிக்கப் பெறுகிறது. திருஞான சம்பந்தர் 'தூங்கானைமாடம்' என்று குறிப்பிடுகிறார். இவ்வகையில், இக்கோயில் அமைப்பு தமிழகத்தில் செல்வாக்குடன் இருந்ததை வேங்கடசாமி விரிவாக ஆய்வு செய்துள்ளார்.

யானைக்கோயில் என்ற பிரிவை, அதன் வளர்ச்சி நிலை சார்ந்து, ஆதிகாலம், இடைக்காலம், பிற்காலம் என்று மூன்றுவகைப்படுத்திக் கூற முடியும். ஆதிகாலம் என்பது கி.மு. 3-7ஆம் நூற்றாண்டு வரை உள்ள காலம். இக்கால யானைக் கோயில் அனைத்தும் பௌத்தக் கோயில்கள் எனலாம். இடைக்காலம் கி.பி.7-9 நூற்றாண்டு வரை ஆகும். இவற்றை பல்லவர் காலத்து யானைக் கோயில்கள் எனலாம். பிற்காலம் என்பது கி.பி.9 ஆம் நூற்றாண்டு தொடங்கி அண்மைக் காலம் வரை ஆகும். இவை சோழர், பாண்டியர் பின்னர் விஜய நகர மன்னர்கள் காலக் கோயில்கள் ஆகும். இப்பிரிவுகள் ஒவ்வொன்று குறித்தும் வேங்கடசாமி அவர்கள் விரிவாக ஆய்வு செய்துள்ளார். முதல் பிரிவைச் சார்ந்த பௌத்தக் கோயில்கள் குறித்த விரிவான ஆய்வை 'பௌத்தத் திருப்பதிகள்' என்ற பிரிவில் 'பௌத்தமும் தமிழும்' (1940) நூலில் ஆய்வு செய்துள்ளார். காவிரிப்பூம்பட்டினம், பூதமங்கலம், புத்தமங்கலம், சங்கமங்கலம்,போதிமங்கலம், திருவிளந்துறைக் கோயில், கும்பகோணம், திருவலஞ்சுழி, பட்டீச்சரம், எலையனூர், பொன்பற்றி, புத்தகுடி, உறையூர், பெருஞ்சேரி, கோட்டப்பாடி, மயூரபட்டணம், நாகைப்பட்டினம், வெள்ளனூர், செட்டிப்பட்டி, ஆலங்குடிப்பட்டி, காஞ்சிபுரம், திருப்பாதிரிப்புலியூர், சங்க மங்கை, ஆலூர், கூவம், ஞாயர், நாவலூர், திருக்கோபுரம், பல்லாவரம், மாங்காடு, மதுரை, அரிட்டாபட்டி, பொதிகை, தஞ்சை, திருமாலிருஞ்சோலை, தென்கரை, வஞ்சி, அழகர்மலை, கொங்கர் புளியங்குளம், கீழைவளவு, முத்துப்பட்டி, நாகமலை,

திருப்பரங்குன்றம், சித்தர்மலை, விருச்சியூர், குன்னக்குடி, வீரசிகாமணி, மருகால் தலை, ஆறு நாட்டார்மலை, திருச்சிராப்பள்ளி ஆகிய அனைத்து ஊர்களிலும் பௌத்தக் கோயில்கள் இருந்தமையை வேங்கடசாமி தெளிவுபடுத்துகிறார். இவை அனைத்தும் தொடக்ககால யானைக் கோயில் வகையைச் சேர்ந்தவை ஆகும். இக்கோயில்கள் மலைப்பாறைகளைக் குடைந்து அமைக்கப்பட்டவையாகவும் செங்கற்களால் கட்டப்பட்டவையாகவும் அமைந்திருந்தன. பௌத்தப் பாறைக்கோயில்கள் இன்றும் இருப்பதாகவும் செங்கற்களால் கட்டப்பட்டவை அழிந்து விட்டதாகவும் வேங்கடசாமி குறிப்பிடுகிறார்.

செங்கற்களால் தமிழ்நாட்டில் உருவான பௌத்தக் கோயில்கள் முழுவதும் அழிந்து போக, ஆந்திர நாட்டில், அவ்வகைக் கோயில்களின் அடித்தளங்கள் இன்றும் இருப்பதைக் கூறுகிறார். தமிழ்நாட்டில் உருவான பக்தி இயக்கமே, தமிழ்நாட்டுப் பௌத்தக் கோயில்கள் அழிவதற்குக் காரணம் என்கிறார். ஆந்திரப் பகுதியில் அந்நிலை இன்மையால், நீண்ட காலம் அவை உள்ளன என்கிறார். ஆந்திராவில் உள்ள நாகார்ச்சுனகொண்டா என்ற பௌத்தக் கோயிலை மேற்குறித்தமைக்குச் சான்றாகக் கூறுகிறார். விசாகப்பட்டினம் மாவட்டத்திலும் இவ்வகைக் கோயில்கள் இருப்பதாகக் குறிப்பிடுகிறார். செங்கற்களால் கட்டப்பட்டு முழுவதும் சிதையாமல் உள்ள பௌத்த யானைக் கோயில்கள் குறித்தும் வேங்கடசாமி குறிப்பிட்டுள்ளார். அவை கபோதேசுவரர் கோயில், திரிவிக்கிரமன் கோயில் ஆகியவை. இவை முறையே ஆந்திரா, மகாராட்டிரம் மாநிலங்களில் உள்ளவை. தமிழ் நாட்டில், செங்கற்களால் கட்டப்பட்ட பௌத்தக் கோயில் ஒன்று மட்டும் முழுமையாக உள்ளது. அது 'கடந்தைத் தூங்கானை மாடம்' என்னும் பெண்ணாடகம் அருகில் உள்ளது ஆகும். இக்கோயில் சோழன் செங்கணனால் கட்டப்பட்டது ஆகும். இதுவே, தற்போது உள்ள யானைக் கோயில் வடிவில் உள்ள மிகப் பழைய பௌத்தக் கோயில் ஆகும். இது சிவன் கோயிலாகத் தற்போது மாற்றப்பட்டுள்ளது.

பல்லவர் காலத்து யானைக் கோயில்கள் கி.பி. 6-9 ஆம் நூற்றாண்டு வரையில் அமைந்தவை. கூரம், மாமல்லபுரம், சகாதேவரதம், ஒரகடத்து வாடாமல்லீச்சுவர், குடிமல்லம் பரசுராமேச்சுரம், திருத்தணிகை வீரட்டானேச்சுரர் ஆகியவை பல்லவர் கால யானைக் கோவில்களில் குறிப்பிடத்தக்கவை. இக்கோவில் அமைப்பு குறித்து விரிவாக வேங்கடசாமி அவர்கள் ஆய்வு

செய்துள்ளார். பிற்கால யானைக்கோயில்கள் குறித்து வேங்கடசாமி ஆய்வு செய்ததாகக் கையெழுத்துப்பிரதி வழி அறிய முடியவில்லை. யானைக் கோயில் என்ற பெயரில் நூல் ஒன்றை வெளியிட அவர் திட்டமிட்டு, விரிவான களஆய்வு செய்து, தகவல்களைத் திரட்டியுள்ளார். ஆனால் அவ்வாய்வின் சில பகுதிகளை மட்டுமே எழுதியுள்ளார். இறுதிப்பகுதி கிடைக்கவில்லை. இந்நூல் வெளிவந்திருக்குமெனில் தமிழகக் கலை வரலாற்றில், கோயில் கட்டடக் கலையின் வரலாற்றைப் புரிந்து கொள்ள வாய்ப்பாக அமைந்திருக்கும். இவரைப் பின்பற்றி இறுதிப் பகுதியை எழுதிச் சேர்ப்பது நமது கடனாகும்.

பல்லவர் காலக் குகைக்கோயில்கள், கற்றளிகள், மாடக்கோயில்கள் குறித்தும் வேங்கடசாமி ஆய்வு செய்துள்ளார். தமிழகக் கட்டடக்கலை வரலாற்றில் இடைக்காலத்தைச் சேர்ந்தவை யாக இவற்றை மதிப்பிடுகிறார். பல்லவர் காலத்தில் அமைக்கப்பட்ட குகைக் கோயில்களின் தூண் அமைப்பு குறித்தும் வேங்கடசாமி ஆய்வு செய்துள்ளார். இவ்வகையில் தமிழகக் கலை வரலாற்றில் முதன்மையான இடத்தைப் பெறும் கோயில் கட்டடக்கலை குறித்து வேங்கடசாமி அவர்களது ஆய்வைப் புரிந்து கொள்ள முடிகிறது.

கட்டடக்கலையின் வளர்ச்சி நிலையாகவே நாம் சிற்பக் கலையைக் கருத முடியும். ஓவியம், இலக்கியம் ஆகியவற்றோடு பெரிதும் தொடர்புடையதாகச் சிற்பக்கலை அமைகிறது. வேங்கடசாமி அவர்கள், தமிழகச் சிற்பங்கள் குறித்து விரிவான ஆய்வை மேற்கொண்டுள்ளார்.

''தமிழ்நாட்டுச் சிற்பக்கலை, பாரதநாட்டுச் சிற்பக் கலையைப் போலவே, சமயத்தை அடிப்படையாகக்கொண்டு வளர்ச்சி பெற்றிருக்கிறது. ஆகவே, தெய்வ உருவங்கள் நமது நாட்டுச் சிற்பக் கலையில் பெரிதும் முதன்மை பெற்றுள்ளன. கிரேக்க தேசம், உரோமபுரி முதலிய மேல்நாடுகளிலே மனிதத‌த்ரூப சிற்ப உருவங்கள் (Portrait sculpture) சிறப்பாக வளர்ச்சி பெற்றது போல நமது நாட்டில் மனித தத்ரூப சிற்பக்கலை ஓரளவுப் பயிலப்பட்டதேயல்லாமல் முழுவளர்ச்சி அடையவில்லை. இதன் காரணம், நம்மவர் தத்ரூப உருவங்களைச் செய்து வைக்கும் வழக்கத்தை அதிகமாகக் கொள்ளாததுதான். ஆனால், நமது நாட்டில் கற்பனை உருவச் சிற்பங்கள் பெரிதும் வளர்ந்திருக்கின்றன''. (1956:40).

இவ்விதம் நமது சிற்பக்கலையின் அடிப்படை பற்றிக் கூறும் வேங்கடசாமி அவர்கள், தெய்வ உருவங்கள், இயற்கை உருவங்கள்,

கற்பனை உருவங்கள், பிரதிமை உருவங்கள் என்ற வகையில் அமைந்த தமிழகச் சிற்பங்களின் அமைப்புக் குறித்து விரிவாக ஆய்வு செய்துள்ளார். தெய்வ உருவச்சிற்பங்களில் சுமார் 25 தெய்வ உருவங்கள் இடம் பெறுவதாகக் கருதுகிறார். சைவ-வைணவச் சமயங்களில் இவ்வளவு எண்ணிக்கையில் சிற்ப உருவங்கள் அமைந்தாலும் பௌத்தச் சிற்பங்களில் புத்தரின் பல உருவங்களும் அவலோகிதர் மற்றும் தாரை முதலிய தேவிகளின் உருவங்கள் மட்டுமே செய்யப்படுகின்றன. சமணத்தில் இருபத்து நான்கு தீர்த்தங்கரர் உருவங்கள், யட்சன், யட்சி, சாத்தன் உருவங்கள் மட்டும் காணப்படுகின்றன. இயற்கை உருவங்கள் மிக அதிக அளவில் தமிழ்ச்சூழலில் இருப்பதாகக் கூறுகிறார். பிரதிமை உருவங்கள் என்பவை தனிப்பட்ட ஆளின் உருவ அமைப்பை உள்ளது உள்ளவாறு அமைப்பதாகும். நமது நாட்டுப் பிரதிமை உருவங்களில் பல்லவ அரசர்கள் உருவங்கள் புகழ் மிக்கவை. சோழர் காலத்தில் பிரதிமை உருவங்களை உருவாக்கியமையைக் கல்வெட்டுச் செய்திகளில் காண முடிகிறது. விஜயநகரத்து மன்னர்கள் மிகுதியான பிரதிமைகளைச் செய்து வைத்துள்ளனர்.

வேங்கடசாமி அவர்கள், மகாபலிபுரத்தில் உள்ள சிற்பம் ஒன்று 'அர்ச்சுனன் தபசு' என்று இன்றும் அழைக்கப்படுகிறது; அது உண்மையில் ஒரு சமணச் சிற்பம் என்பதைத் தக்க ஆதாரங்களுடன் நிறுவியுள்ளார்.

''ஜைனர் அமைத்துக்கொடுத்த பல கலைச் செல்வங்களிலே ஒன்று, மகாபலிபுரத்திலே கற்பாறையில் அழகுறச் செதுக்கியமைக்கப் பட்டுள்ள புடைப்புச் சிற்பம் (Bas Relief sculpture) இச்சிறந்த சிற்பம் இப்போது, அர்ச்சுனன் தபசு என்று பொதுமக்களாலும் பகீரதன் தபசு என்று வேறு சிலராலும் பெயர் கூறப்படுகிறது. ஆனால், இக்கதைகளுக்கும் இச்சிற்பத்திற்கும் யாதொரு பொருத்தமும் காணப்படவில்லை. ஜைனரின் அஜிதநாதர் புராணத்தில் கூறப்படுகிற சகர சாகரர்களின் கதை இச்சிற்பத்தில் எழுதப்பட்டிருக்கிறது. இந்த ஜைனக் கதை இப்போது மறக்கப்பட்டு இச்சிற்பத்திற்குப் பொருத்தமற்ற வேறு கதைகள் கற்பிக்கப்படுகின்றன.'' (1950:முன்னுரை)

மேற்குறித்த கருத்தை, சென்னையில் அப்போது நடைபெற்ற தொல்பொருள் ஆய்வுத்துறைக் கூட்டத்தில் முன்வைத்தார். இதனைப் பலரும் ஏற்றுக் கொண்டனர். இருப்பினும் இன்று வரை அச்சிற்பத்தை 'அர்ச்சுனன் தபசு' என்றே வழிகாட்டிகள் கூறுகின்றனர். இவ்வகையில்

தமிழகச் சமயங்கள் சார்ந்து, சிற்பங்கள் மற்றும் கோயில்கள் காலத்திற்குக்காலம் மாற்றப்படுகின்றன என்பதை வலியுறுத்தியுள்ளார். கலை வரலாறு குறித்த, இவ்வித அணுகுமுறை பெரிதும் பாராட்ட வேண்டிய ஒன்றாகும். இதனைத் தொடர்ந்து பல்லவ மன்னர்களைப் பற்றிய இவரது ஆய்வு நூல்களில், அவர்களது காலச் சிற்பங்கள் குறித்து விரிவாக எழுதியுள்ளார். பல்வேறு கதைகள் பல்லவர் காலச் சிற்பங்களில் இடம்பெற்றிருப்பதைச் சுட்டிக்காட்டியுள்ளார். சீயமங்கலம் என்னும் ஊரில் உள்ள குகைக்கோயிலில் வாள்வீரன் சிற்பம் குறித்து விரிவாகப் பேசியுள்ளார். மாமல்லன் காலத்தில் மண்டபங்கள் உருவாக்கப்பட்டமை குறித்தும் விவாதித்துள்ளார். கங்காதரமூர்த்தி புடைப்புச்சிற்பம் குறித்த இவரது ஆய்வு குறிப்பிடத்தக்கது.

நடராசர் சிற்பம் குறித்த ஆய்வை மேற்கொண்ட வேங்கடசாமி அவர்கள், நமது கலை வரலாற்றில் சிற்பங்கள் பெறும் இடத்தை விரிவாகப் பதிவு செய்துள்ளார். அயல்நாட்டுச் சிற்பங்கள் உள்ளதை உள்ளவாறே, கண்ணுக்குத் தோன்றுகிறபடியே அமைக்கப்படுகின்றன. ஆனால் நமது சிற்பங்கள் அவ்வகையில் அமைவன அல்ல என்பதைத் தெளிவுபடுத்துகிறார். சிற்ப உருவங்களின் மூலம் ஏதேனும் ஒரு கருத்தைச் சொல்லுவது அல்லது ஒரு உணர்ச்சியைக் காட்டுவதாக நமது சிற்பங்கள் அமைக்கப்படுகின்றன என்கிறார். கிரேக்க நாட்டுச் சிற்பங்கள், மிக மிக அழகாக உடலமைப்பை வெளிப்படுத்தும்; அந்த அமைப்பிலேயே அவர்களது கடவுளர்களையும் அமைத்தார்கள்; அவற்றைநாம் காணும்போது மானிட உடல் அமைப்பில் அழகை இரசிக்க முடியும். அதற்குமேல் செல்லமுடிவதில்லை. ஆனால் நமது சிற்பங்கள்,குறிப்பாகக் கடவுளர் சிற்பங்கள், அதற்கப்பாலும் சென்று, பல்வேறு கருத்தைப் புலப்படுத்தும் வகையில் அமைவதாக வேங்கடசாமி கூறுகிறார். இதன்மூலம் கலை வரலாற்றில் நமக்கான இடத்தைக் காட்டுகிறார். இந்தப் பின்புலத்தில் நடராசர் சிற்பத்தை இவர் ஆய்வு செய்துள்ளார். அதன் முடிவாக அவர் கூறுவது, இங்கு கவனத்தில் கொள்ளத்தக்கது.

''இக்கலை ஆராய்ச்சிக்கு வெறும் சிந்தாந்த சாத்திரங்களை மட்டும் கற்பது போதாது; தத்துவக்கருத்துக்களைக் கூறுகிற தந்திர நூல்களாகிய ஆகமங்களையும் கற்க வேண்டும்; இவற்றோடு சிற்பக் கலையின் இயல்பினையும் அறிய வேண்டும் என்னும் உண்மை விளங்கிற்று. ஏனென்றால் சிந்தாந்தக் கருத்தும் ஆகமக் கருத்தும் ஒன்று சேர்ந்து அமைந்ததுதான் நமது சிற்பக் கலைகள். எனவே, எனது ஐயங்களுக்கு விடை கண்டு நான் தெளிவு பெற வேண்டுமானால்,

சிந்தாந்தநூல், ஆகமநூல், சிற்பநூல் மூன்றையும் ஒருங்கே கற்றவர்களைக் கேட்க வேண்டும் என்னும் உண்மை விளங்கிற்று'' (1967:முகவுரை)

இவ்வகையில் நமது சிற்பக்கலை வரலாறு பல்வேறு பரிமாணங்களை உள்ளடக்கியது. இதில் ஒற்றைப் பரிமாணத்தைக் கொண்டு செயல்பட முடியாது என்கிறார். இது நமது கலை வரலாற்றின் அடிப்படை அம்சங்களில் ஒன்றாகும். இதனை வேங்கடசாமி அவர்கள் தமது சிற்பம் பற்றிய ஆய்வுகளில் விரிவாகவே செயல்படுத்தியுள்ளார்.

நமது சிற்பங்கள் குறித்த பார்வை, நமது மக்களிடத்தில், தவறாகச் செயல்படுவதையும் பல இடங்களில் சுட்டிக் காட்டுகிறார். கோயில்களில் உள்ள சிற்ப உருவங்களுக்கு ஆடை உடுத்தும் வழக்கம் நம்மவர்களிடத்தில் உள்ளது. இத்தன்மை தவறானதும் அநாவசியமானதும் என்கிறார். அவ்வுருவங்கள் அம்மணமாகவோ, நிர்வாணமாகவோ அமைக்கப் பெறவில்லை. சிற்பிகள், உடை அமைப்போடு தான் அவற்றை உருவாக்கியுள்ளனர். ஆனால்,அவை நிர்வாணமாக இருப்பதைப் போல் கருதி, அவற்றின் மீது உடைகளை உடுத்துவது, அச்சிற்பங்களை விகாரப்படுத்துவதும் அச்சிற்பங்களின் இயற்கை அழகை மறைப்பதும் ஆகும். வேங்கடசாமி அவர்களின் இக்கருத்து பெரிதும் கவனத்தில் கொள்ளத்தக்கது.

'மகேந்திரவர்மன்' நூலை எழுதியுள்ள வேங்கடசாமி அவர்கள், அந்நூல் எழுதப்பட்டதற்கான காரணத்தைக் கூறுகிறார். இத்தன்மை, ஒரு கலை வரலாற்று ஆசிரியனின் சமூக அக்கறையைக் காட்டுவதாக அமைகிறது.

'இந்நூலைப் படிப்போர் செய்ய வேண்டிய கடமையுண்டு. மகேந்திரவர்மன் அமைத்த குகைக் கோயில்களையும் அவற்றில் உள்ள சிற்பங்களையும் கண்டுகளித்து அக்கலைச் செல்வங்களை அழிவு படாமல் பார்த்துக் கொள்ள வேண்டிய பொறுப்பும் கடமையும் இதைப் படிப்போர்களைச் சார்ந்தன. ஏனென்றால், நம்நாட்டுக் கலைச்செல்வங்கள் நமக்குச் சொந்தமானவை என்பதை நம்மவரில் பெரும்பாலோர் இன்னும் உணரவில்லை. இப்பொறுப்பை உணர்ந்து அவற்றை பாதுகாக்க வேண்டியது நம் ஒவ்வொருவருடைய கடமையாகும். இக்கலைகளைச் செல்வங்களைப் போல் போற்ற வேண்டும். (1955: முன்னுரை)

நமது சிற்பங்களின் பாதுகாப்புப் பற்றிப் பேசும் போதெல்லாம், அவற்றிற்கு ஊறுவிளைவிப்பவர்களைக் கடுமையான சொற்களால்

விளிக்கிறார். உணர்ச்சி வசப்பட்ட நிலையில், அக்குறிப்பிட்ட சூழலில் வேங்கடசாமி மாறிவிடுகிறார். இவ்வகையில் நமது கலைகளைப் போற்றும் மனநிலையினரான அவர், திருவாரூர் கோயில் ஊழியர் நாகராசநம்பி அறுபத்து மூவர் விக்கிரகங்களின் இரண்டைத் திருடிவிட்டார். இதனை அறிந்த புலவர் ஒருவர், பஞ்சவர்ணக்கிளி ஒன்றுக்குப் பின் கண்ட பாடலைச் சொல்லிக் கொடுக்க, அது கிருஷ்ணதேவராயர் வரும்போது சொல்ல, திருடர் பிடிபட்டார் என்று செவிவழிக் கதை உள்ளது. இதன்மூலம் சிற்பத் திருட்டு என்பதற்கு நீண்ட வரலாறு இருப்பதாகக் கருத முடியும். பாடல் இதோ:

''முன்னால் அறுபத்து மூவர் இருந்தார் அவரில்
இன்னாள் இரண்டுபேர் ஏகினார் - கன்னான்
நறுக்குகின்றான் விற்றுவிட்ட நாகராச நம்பி
இருக்கின்றான் கிட்டின ராயா'', (1956:181)

சிற்பக்கலையில், ஈடுபாடுகாட்டிய அளவிற்கு ஓவியக்கலை குறித்தும் வேங்கடசாமி அவர்கள் ஈடுபாடு கொண்டிருந்தார். சங்க காலம் தொடங்கி விஜயநகர மன்னர்காலம் வரை தமிழகத்தில் உள்ள ஓவியங்களைப் பற்றிப் பேசியுள்ளார். ஓவியங்களின் காலம், அவற்றின் பண்புகள், வரையப்பட்ட முறைகள், வரைவதற்குப் பயன்படுத்திய பொருட்கள், ஓவியங்கள் வெளிப்படுத்தும் செய்திகள், ஓவியங்களில் காணப்படும் வரலாற்றுக் குறிப்புகள் இன்னபிற குறித்து வேங்கடசாமி அவர்கள் விரிவாகப் பதிவு செய்துள்ளார். தமிழகத்தில் பெரும்பான்மையாக இருப்பவை சுவர் ஓவியங்களே என்பதைத் தெளிவுபடுத்துகிறார். அரசரின் அரண்மனை, பிரபுக்களின் மாளிகை, கோயில், மண்டபங்கள் முதலிய கட்டடங்களில் ஓவியங்கள் வரையப்பட்டன. சங்க இலக்கியங்களில் சித்திர மாடங்கள் பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன.

பல்லவ மன்னன் மகேந்திரன் ஓவியத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தான். அவனுக்குச் 'சித்திரக்காரப்புலி' என்னும் சிறப்புப் பெயர் இருந்தது. இவன் அமைத்த குகைக்கோயில்களில் சித்திரங்களை வரைந்துள்ளான். இவன் காலத்தில் எழுதப்பட்ட சித்தன்ன வாசல் ஓவியங்கள் சிறப்புமிக்கவை என்பதைப் பல்வேறு சான்றுகளுடன் எழுதியுள்ளார். தென்னிந்திய ஓவிய' மரபு ஒன்று இருந்ததாக இவர் கருதுகிறார். அது குறித்த அவரது கருத்துப் பின்வருமாறு;

''தஷிண சித்திரம் என்பது பரத கண்டத்தின் தென் பகுதியில் வழங்கிய ஓவியங்களைக் குறிக்கிறது போலும். ஏனென்றால், தக்கிண இந்தியாவில் இருந்து தெற்கே இலங்கை வரையில் ஒரேவிதமான ஓவியக்கலை வளர்ச்சி பெற்றிருந்ததாகத் தெரிகிறது. அஃதாவது வடக்கே அஜந்தாக் குகைகளில் காணப்படுகிற ஓவியங்களும் தமிழ் நாட்டிலே காணப்படுகிற ஓவியங்களும் இலங்கையில் சிகிரியா மலைக்கோட்டையில் காணப்படுகிற ஓவியங்களும் ஒரேவிதப் பண்புடையனவாய்க் காணப்படுகின்றன என்று ஓவிய நூற்புலவர்கள் கூறுகிறார்கள். இந்தத் தக்கிண சித்திரங்கள், அந்தந்த நாட்டிற்கேற்பச் சிறுசிறு மாறுதல்களுடன் காணப்பட்டாலும் பொதுப்படையான அமைப்பில் ஒரேவிதமாக இருக்கின்றன என்று ஓவிய நூல் புலவர்கள் கூறுகிறார்கள்'' (1955;114-115)

மேலே குறிப்பிட்ட அடிப்படையில், தமிழகம் சார்ந்த ஓவியக்கலை வரலாறு குறித்த அக்கறை அவருக்கு இருந்ததை அறிய முடிகிறது. தமிழகத்தின் ஓவியர்களுடன் வேங்கடசாமி தொடர்புடைய வராக இருந்தார். சிற்பி தனபால் அவர்களைக் கொண்டு சித்தன்ன வாசல், வண்ண ஓவியத்தை வரையச் செய்து, அதனைத் தமது 'தமிழர் வளர்த்த அழகுக்கலை' நூலில் வெளியிட்டுள்ளார். இவ்வகையில் தமிழக ஓவியங்கள் குறித்த அவரது கவன ஈர்ப்பை அறிய முடிகிறது. அவ்வகையான ஓவியங்கள் அழிக்கப்படுவது குறித்தும் மனம் வருந்திப் பல இடங்களில் எழுதியுள்ளார்.

''காஞ்சி ஏகாம்பரேசுவரர் கோயில் பௌர்ணமி மண்டபத்தில், அன்னப்பறவை முதலியவற்றின் ஓவியங்கள் எழுதப்பட்ட சிதைவுகள் காணப்பட்டதைச் சில ஆண்டுகளுக்கு முன்னர் கண்டேன். காஞ்சி ஏகாம்பரேசுவரர் கோயில் நூற்றுக்கால் மண்டபத்தின் மேல் பகுதியில், சில ஆண்டுகட்கு முன்னர் பெரிய அளவில் பல ஓவியங்கள் இருந்ததைக் கண்டேன். சிறிது அழிந்து போயிருந்தாலும், பெரிதும் நன்னிலையிலே இருந்தன. வர்ணங்கள் அழிந்துபோன இடங்களில் கோடுகள் புனையா ஓவியமாக நிறைவு செய்திருந்தன; அவை பிற்காலத்து ஓவியங்கள் தான்; 400 அல்லது 500 ஆண்டு பழமை இருக்கலாம். அவற்றை நிழற்படம் (போட்டோ) பிடிக்க வேண்டுமென்று அடுத்த ஆண்டு சென்றபோது-அந்தோ அவை மறைந்து போனதைக்கண்டு துணுக்குற்றேன்? கோயில் அதிகாரிகள் அந்தச் சித்திரங்களின் மேலே கோபி சுண்ணாம்பை நிறையப் பூசி மண்டபத்தை 'அழகு' செய்திருந்தார்கள்!அவர்கள் நீடுழி வாழ்க! இவ்வாறு எந்தெந்தக் கோயில்களில் எத்தனை எத்தனை ஓவியங்கள்

அழிந்தனவோ! 'ஓவியத்துக்கும் கோயிலுக்கும் என்ன சம்பந்தம்' என்று கோயில் தர்மகர்த்தர்கள் நினைக்கிறார்கள் போலும்! அதிலும் 'அரைகுறையாக உள்ள சித்திரங்கள் குற்றுயிராய்க் கிடந்து வேதனைப்பட்டுக் கொண்டிருப்பதை விட, அடியோடு அழிந்து சுகம் பெறட்டும்' என்னும் கருணையினால், 'கொன்று' விடுகிறார்கள் போலும்! அரை குறையான ஓவியங்களாக இருந்தாலும் அவற்றையும் போற்ற வேண்டும். அவற்றை அழிக்க வேண்டி யிருந்தால், முதலில் அவற்றைப் படம் பிடித்து வைத்துக் கொண்டு அல்லது எழுதி வைத்துக் கொண்டு பிறகு அழித்து விடலாம்'' (நம்நாடு:1968)

தமிழகத்துச் சுவரோவியங்களுக்கும் தென்னிந்திய ஓவியக் கலைக்குமான உறவு குறித்து, வேங்கடசாமி அவர்கள் வெளிப் படுத்தியுள்ள செய்திகள், தமிழகக் கலை வரலாற்றில் கவனத்தில் கொள்ள வேண்டியவையாகும்.

தமிழக இசைக்கலை குறித்தும் வேங்கடசாமி விரிவாகப் பேசியுள்ளார். சங்க இலக்கியத்தில் ஒன்றாகக் கருதப்படும் பரிபாடல், இசைப்பாடல் மரபைச் சார்ந்தது. சங்க இலக்கியங்களில் பல்வேறு பண்மரபுகள் குறித்த செய்திகளைக் காணமுடியும். இசைப் பாணர்கள் மரபு பின்னர் திருநீலகண்ட யாழ்ப்பாணர், திருப்பாணாழ்வார் என்று தொடர்ந்தது. நடைமுறையில் இருந்த பல இசை நூல்கள் மறைந்தமை குறித்தும் வேங்கடசாமி ஆய்வு செய்துள்ளார். இசைத்தமிழ்ச் செய்யுட்துறைக் கோவை, இசை நுணுக்கம், இந்திரகாளியம், குலோத்துங்கன் இசைநூல், பஞ்ச மரபு ஆகியவை அவை. சிலப்பதிகாரத்தில் இசை குறித்து வரும் பல்வேறு தரவுகளையும் ஆய்வு செய்துள்ளார். கி.பி.7ஆம் நூற்றாண்டில் பொறிக்கப்பட்ட இசைச்சாசனம் குறித்தும் எழுதியுள்ளார். குடுமியான் மலையில் 1904இல் கண்டுபிடிக்கப்பட்ட இச்சாசனம் 'எட்டிற்கும் ஏழிற்கும் இவை உரிய' என்ற இசைக் குறிப்பைக் கூறுகிறது. தமிழ்நாட்டில் வழங்கிய இசை குறித்து வடமொழியில் எழுதப்பட்ட சாசனம் இது.

சமணர் இசைக்கலையில் கொண்டிருந்த ஈடுபாடு குறித்தும் ஆய்வு செய்துள்ளார். 23.12.1943இல் நடந்த தமிழிசை மாநாட்டில், 'காந்தருவதத்தையின் இசைத் திருமணம்' என்ற சிறுநூல் வேங்கடசாமி அவர்களால் எழுதப்பட்டு, பேராசிரியர் அ. சக்கரவர்த்தி நயினார் அவர்களால் வெளியிடப்பட்டது. இந்நூல் சமணக் காப்பியமான சீவகசிந்தாமணியில் இசை பற்றியுள்ள பல்வேறு கூறுகளையும் கூறுவதாகும். சமணர் இசைக் கலைக்கு எதிரானவர் என்னும்

கருத்தையும் வேங்கடசாமி ஏற்றுக் கொள்ளவில்லை.பெருங்கதையில் இசை குறித்து வரும் செய்திகளையும் ஆய்வு செய்திருக்கிறார்.

தமிழ் நாட்டில் உருவான தமிழிசை இயக்க ஆதரவாளராகவும் இருந்தார். பழந்தமிழ் இசை மரபு பற்றி விரிவாக ஆய்வு செய்துள்ளார். இசையின் வகைகள், அவை பிறக்கும் இடங்கள், சுரம் ஆகியவை குறித்தும் எழுதியுள்ளார். தமிழ் இராகங்கள் குறித்தும் எழுதியுள்ளார். இசைக் கருவிகள் பற்றிய ஆய்வைச் செய்துள்ளார். இசைக் கருவிகளின் வகை, அவை செயல்படும் முறைமை ஆகியவை குறித்தும் பேசியுள்ளார். தமிழ்க்கலை வரலாற்றில், காலந்தோறும் புதிய புதிய இசைக்கருவிகள் உருப்பெறுவதைக் காணமுடியும். இவ்வகையில் நாகசுரம் பிற்காலங்களில் உருவானது குறித்துக் கூறியுள்ளார். இக்கலை குறித்து கி.பி.17ஆம் நூற்றாண்டில் தோன்றிய 'பரதசங்கிரகம்' என்னும் நூல் கூறும் விளக்கத்தை ஆய்வு செய்துள்ளார். நாகசுரம் குறித்த பல தொன்மக் கதைகளை மறுக்கிறார். ஐரோப்பிய மரபிலிருந்து நமக்கு உருவான கருவிகள் குறித்தும் பேசுகிறார்.

யாழ் என்ற இசைக் கருவிக்கு நமது மரபில் இருந்த தொடர்ச்சி பற்றிப்பேசியுள்ளார். யாழ் வாசிப்பதில் பாணர் சிறப்புற்றிருந்தனர். பின்னர் பக்திப் பாடல்கள் எழுந்த காலத்திலும் யாழ் குறித்த செய்திகள் பேசப்பட்டன. ஆனால் கி.பி.11ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு, யாழ் தமிழ்நாட்டில் வழக்கொழிந்து போனது. இக்கருவியை மீட்டுருவாக்கம் செய்யும் முயற்சியை விபுலானந்தர் அவர்கள் தமது 'யாழ் நூல்' (1947) மூலம் செய்திருப்பதை விதந்து பேசியுள்ளார். அவ்வகையான கலை முயற்சிகளில் ஈடுபடுவோரைத் தமிழகம் போற்றிப் பாதுகாக்க வேண்டும் என்றும் கூறுகிறார். இந்தப் பின்புலத்தில் வேங்கடசாமி கூறும் பின்வரும் கருத்து கவனத்தில் கொள்ளத்தக்கது.

'' அண்மைக்காலத்தில் புதிதாக இரண்டு இசைக் கருவிகள் கிடைத்திருப்பது பற்றிக் கூறுவது பொருத்தமாகும். சென்ற பத்தொன்பதாம் நூற்றாண்டிலே வாழ்ந்திருந்த இரண்டு இசைப் புலவர்கள், ஐரோப்பிய இசைக் கருவிகள் இரண்டினை நம்முடைய இசைக் கருவிகளாக மாற்றியமைத்தார்கள். அந்தக் கருவிகள் பிடில், கிளாரினெட் என்பவை. அக்காலத்தில் தஞ்சாவூரை யாண்ட மராட்டிய அரசரின் அரண்மனையில் வித்துவான் வடிவேலு பிள்ளை, வித்துவான் சின்னையா பிள்ளை என்னும் சகோதரர்கள் இசைப் புலவர்களாக இருந்தார்கள். அந்தக் காலத்தில் அரண்மனையில் ஐரோப்பிய பேண்டு (Band) வாத்தியம் வாசிக்கப்பட்டது. அந்த

இசைக் கருவிகளிலே பிடில், கிளாரினெட் என்னும் கருவிகளும் வாசிக்கப்பட்டன. இந்தப் புதுமையான இசைக் கருவிகள், நம்முடைய இசைவாணர்களின் மனத்தைக் கவர்ந்தன. இந்தக் கருவிகளை இந்த சகோதரர்கள் ஊன்றி ஆராய்ந்து, இவற்றை நம்முடைய இசைப்பாட்டுக்குரிய இசைக் கருவிகளாக மாற்ற வேண்டும் என்று கருதினார்கள். ஆகவே, இவர்கள் இந்த இசைக் கருவிகளைப் பயின்று இவற்றை நம்முடைய இசைக் கருவிகளாக மாற்றிவிட்டார்கள்'' (1967:42) இதன்மூலம், தமிழ்க்கலை வரலாற்றில் புதிய கூறுகளை வேங்கடசாமி உள்வாங்கியதை அறிய முடிகிறது. இசைக் கலையில் மேற்குறித்த செயல்பாட்டை வளர்ச்சி என்று பாராட்டுகிறார்.

மேற்குறிப்பிட்ட தகவல்கள் அடிப்படையில், தமிழ்க்கலை வரலாற்றில் இசையின் இடம் குறித்து வேங்கடசாமி கொண்டிருந்த நிலைப்பாட்டை அறிய முடிகிறது. தமிழ் அரங்கக்கலை, காவியக் கலை ஆகியவை குறித்தும் பேசியுள்ளார். அவற்றை நுண் கலைகளாகப் போற்றுகின்றார். இந்தப் பின்புலத்தில், வேங்கடசாமி அவர்கள் தமிழ்க்கலை வரலாறு குறித்து கொண்டிருந்த கண்ணோட்டத்தைப் பின்வருமாறு தொகுத்துக் கொள்ள முடியும்.

- தமிழகத்தில் பெரும்பான்மையாக வளர்ச்சி யடைந்துள்ள கோயில் கட்டடக்கலை குறித்து விரிவான ஆய்வை மேற்கொண்டிருக்கிறார். இவரது யானைக் கோயில் பற்றிய ஆய்வு பெரிதும் பாராட்ட வேண்டிய ஒன்றாகும்.
- தமிழகக் கோயில்களை அவற்றின் கட்டட அமைப்பைக் கொண்டு, இவர் ஆய்வு செய்வதின் மூலம், கோயில்கள் எவ்வகையில் மாற்றப்பட்டன என்பதை அறிய முடிகிறது. தமிழகத்தில் பல பௌத்தக் கோயில்கள் சைவக் கோயில்களாக மாற்றப்பட்ட வரலாற்றைத் தெளிவுபடுத்தியுள்ளார்.
- ஐரோப்பியச் சிற்பக்கலை மரபிலிருந்து, நமது சிற்பக்கலை மரபு வேறுபட்டிருக்கும் அடிப்படைக் கூறுகளை, வேங்கடசாமி விரிவாக ஆய்வு செய்துள்ளார். நமது சிற்பக்கலையின் பல் பரிமாணங் களைக் காட்டுகிறார். சிற்பங்கள் அழிக்கப் பட்ட வரலாறு குறித்தும் எழுதியுள்ளார்.

- தென்னிந்திய ஓவிய மரபு என்ற தனித்த பதிவு குறித்துப் பேசியுள்ளார். இம்மரபு பிற மரபுகளிலிருந்து வேறுபடுவதைக் காட்டுகிறார். நமது பகுதிகளில் கட்டடக்கலை வளர்ச்சியுற்றமையால் சுவரோவியங்கள் பெரிதும் செல்வாக்குடன் இருந்ததைத் தெளிவு படுத்தியுள்ளார்.
- தமிழர்களுக்கென தனித்த இசை மரபு இருந்ததை விரிவாகப் பேசியுள்ளார். இம்மரபு காலப்போக்கில் படிப்படியாக மாற்றம் பெற்றமை குறித்த தரவுகளையும் காட்டியுள்ளார்.
- வேங்கடசாமி அவர்களிடம் கலை வரலாற்றுப் பார்வை தனித்தன்மைகளுடன் இருப்பதைக் காணமுடிகிறது.

---

# 5

# கருத்து நிலை

சுயராஜ்ஜியம், சுயமரியாதை இயக்கம், திராவிட இயக்கம்,தமிழ் மறுமலர்ச்சி இயக்கம் என்ற சார்புகளில் அவர் செயல்பட்டார். 1920 – 1980ஆண்டுக் காலங்களில் வேங்கடசாமி அவர்கள், தாம் வாழ்ந்த சமூகத்தை எதிர்கொண்ட வரலாறுதான் இவரது கருத்து நிலை. அதனை இப்பகுதி விவரிக்கிறது.

மயிலை சீனி. வேங்கடசாமி எழுத்துலகில் எழுதத் தொடங்கிய காலம் 1920களின் தொடக்கமாகும். தமிழகச் சூழலில் இந்தக் காலம் என்பது, பொது நல ஈடுபாடு கொண்ட பலரும் காங்கிரஸ் அமைப்பிலிருந்து விலகிப், படிப்படியாக வட்டாரம் சார்ந்த பொது நல அமைப்புகளில் பங்கு பெறத் தொடங்கிய காலமாகும். தமிழகத்தைப் பொறுத்தவரை, பிற்பட்டோர் நலத்தை முதன்மைப் படுத்திய நீதிக்கட்சியும் சுயமரியாதை இயக்கமும் இக்காலச் சூழலில் உருவாயின. வேங்கடசாமி அவர்கள் தொடக்கத்தில் இந்தியா சுயராஜ்ஜியம் அடைவது குறித்து நம்பிக்கையுடன் பேசுகிறார். சுயராஜ்ஜியம் பெறுவதில் தடைகளாக இருப்பவை, இந்தியச் சமூக அமைப்பில் உள்ள சாதி, ஆண்-பெண் சமத்துவம் இன்மை, பெண் கல்வி இன்மை, விதவை மணம் மற்றும் குழந்தை மணம் தொடர் பானவைகள் என்றும் பேசுகிறார்.

''இந்தியத் தாயாகிய இவ்வன்னை, இப்போது நாமிருக்கும் நிலைமையைக் கண்டு பரிதபித்து மனம் வாடுகின்றாள், ஏனென்றால், அவ்வன்னையின் மணி வயிற்றில் தோன்றிய நாம் நம்முளொருவர்க் கொருவர் ஒற்றுமையின்றி சாதி வித்தியாசம், சமய வித்தியாசங் களையே பெரிதெனக் கொண்டு ஒருவருக்கொருவர் அன்பின்றி வாழாமல் வாழுகிறோம். அயல்நாட்டினின்று வந்தவரை நன்கு மதிப்போம்; அவரைத் தீண்டுவோம்; அவரைச் சமமாகப்

பாவிப்போம்; அவரோடு உண்போம். ஆனால் நம்மோடுடன் பிறந்தவரைத் தீண்டோம்; அவரோடு உறவாடோம்; அவர் நம்மின் தாழ்ந்தவர், அவரை ஒருபோதும் நன்கு மதியோம் என்னும் அநாகரிகத்தை மேற்கொண்டோம். (லக்ஷ்மி. 1:7:1924)

இதன்மூலம் இந்திய நாட்டின் சாதியச் சிக்கல்களை வேங்கடசாமி தெளிவுபடுத்துகிறார். மேலும், நமது நாட்டில் 'ஆச்சாரம்' என்ற பெயரில் நடைபெறும் கொடுமைகள் குறித்தும் விரிவாக பேசியுள்ளார். அது இந்திய சுயராஜ்ஜியத்திற்கு எதிரானது என்ற கண்ணோட்டத்தில் விவாதிக்கிறார்.

''ஆசார சீர்திருத்தங்களினால் மக்கள் வாழ்க்கை சிறப்படையும் என்பது மாத்திரமல்ல, அதுவே சுயராஜ்ஜியத்திற்கும் அடிப்படையாக இருக்கிறது. இக்காலத்து, நமது நாட்டில் பல அரசியல் கட்சியாரும், சுயராஜ்ஜியத்தைப் பெறும் நோக்கத்துடன் பற்பல அரசியல் சீர்திருத் தங்கள் கேட்கிறார்கள். நமது நாட்டிற்கு அரசியல் சீர்திருத்தங்கள் எவ்வளவு அவசியமாகவிருக்கின்றனவோ, அவ்வளவு அவசியமாக (அதைவிட அதிகமாகவே) ஆசார சீர்திருத்தங்களும் இதுகாலை நமக்கு வேண்டியதாயிருக்கின்றன. தீண்டாமை ஒழிப்பது, தீண்டப்படாதவர்களை ஆலயங்களுக்குச் செல்ல அனுமதிப்பது. தீண்டப்படாத மக்களுக்குப் பொதுச் சாலைகளிலும் குளங்களிலும் வேறு நிலையங்களிலும் உரிமை கொடுப்பது முதலிய சீர்திருத்தங்கள் கிராமாந்தரங்களிலும் நடைபெற்றாலன்றோ, நமது நாடு உண்மையான சுயராஜ்ய நாடாக விளங்கும்?..

நமது நாட்டில் சுயராஜ்ய கூச்சல்களும் பேச்சுக்களும் அதிகமாயிருக்கின்றன. ஆனால் சுயராஜ்ஜியத்திற்கு அடிப்படையான சீர்திருத்தங்களைப் பேசுவோர் மிகச் சொற்பமாக இருக்கிறார்கள். பேச்சளவில் நிற்காமல் சீர்திருத்தங்களைச் செய்கையளவில் பயன் படுத்தினாலன்றிப் பயன் என்? இந்தியத் தேசம் சுயராஜ்ஜியம் பெறுவதற்கு முன் சீர்திருத்த வேலைகள் மும்முரமாக நடைபெற வேண்டும். சீர்திருத்தர்களின்றி மக்கள் சுயராஜ்யம் பெறமுடியாது. முக்கியமான இந்துக்களின் பழக்கவழக்கங்கள் மிகுந்த ஊழலாக விருக்கின்றன. அவையாவும் சீர்திருத்தப்படாத வரையில் இந்துக்களுக்கு ஒரு நாளும் சுயராஜ்ஜியம் கிட்டாது'' (லஷ்மி 3:1:1926)

மேற்குறித்த பின்புலத்தில் வேங்கடசாமி அவர்கள் கொண்டிருந்த கருத்து நிலையைப் புரிந்து கொள்ள முடிகிறது. பின்னர் சுயமரியாதை இயக்கம் தொடர்பான செயல்பாடுகளில் ஈடுபாடு

கொண்டவராகச் செயல்படுகிறார். சுயமரியாதை இயக்கச் சார்பான குடியரசு' இதழில் தொடர்ந்து எழுதுகிறார். இக்காலங்களில் 'ஆரம்பாசிரியன்' என்னும் இதழில் தொடர்ந்து எழுதி வந்துள்ளார். இந்தியாவில் உள்ள கல்விமுறை, கல்வி நிலையங்களின் தன்மை, ஆசிரியர்களின் மனநிலை, தமிழ்வழிக் கல்வியின் தேவை ஆகிய பல்வேறு செய்திகள் தொடர்பாக அவ்விதழில் எழுதியுள்ளார். சமூகத்தின் மீது அக்கறை மிக்க இளைஞராக தமது முப்பது வயது காலச்சூழலில் செயல்படுகிறார். உலக நிகழ்வுகள் பற்றி அக்கறையுடன் கவனித்து மேற்குறித்த இதழில் 'பத்தி' (Column) எழுதுகிறார். அவற்றில் பல்வேறு தகவல்களையும் விவாதிக்கிறார். கல்வி பற்றிய அவரது அக்கறைகளைப் புரிந்து கொள்ள இப்பத்திக் கட்டுரைகள் பெரிதும் உதவுகின்றன. தொடர்ந்து 'குடியரசு' இதழில் பத்திக் கட்டுரைகள் எழுதுகிறார். இதில் பெண் அடிமை, மூடநம்பிக்கை ஆகியவை தொடர்பான விரிவான விவாதங்களை முன்வைக்கிறார். தேசியத்தைக் கட்டமைப்பதற்கும் மூடநம்பிக்கை தடையாக இருப்ப தாகவும் எழுதுகிறார். இந்தியாவில் இந்தி பொது மொழியாகச் செயல்படுவதற்கானச் சூழல் இல்லை என்பதையும் விவாதித்துள்ளார். இதன் தொடர்பாக நடந்த போராட்டங்களிலும் பங்கு கொண்டுள்ளார். ஆங்கில மொழி வளர்ச்சியோடு ஒப்பிடும் போது, இந்தி மிகவும் பின்தங்கியதைச் சுட்டுகிறார். இந்தியா பல்வேறு மொழிகளைக் கொண்ட நாடாக இருப்பதால் ஆங்கிலமே பொது மொழியாகச் செயல்பட முடியும் என்கிறார். நமது நாட்டில் 'அரசியல் அடிமை, பொருளாதார அடிமை. பாஷை அடிமை சமய அடிமை' என்ற நான்கு அடிமைத்தனங்கள் செயல்படுவதாகக் கூறுகிறார். இவைகளிலிருந்து விடுதலை பெறாமல், இந்தியாவில் 'சுதந்திரம்' என்பது சாத்தியம் இல்லை என்பதை உறுதிபடக் கூறுகிறார்.

உலகத்தில் உள்ள பல்வேறு குடியரசு நாடுகள் குறித்து 'குடியரசு' பத்திக் கட்டுரையில் விரிவாகப் பேசுகிறார். அத்தன்மைகளை, நமது நாட்டுடன் ஒப்பிட்டு, நமது அடிமை வாழ்வு பற்றி விவாதிக்கிறார். இவ்வகையில் இவரது குடியரசுக் கட்டுரைகள், சமூகத்தின் மீது இவரது அக்கறையைக் காட்டும் வகையில் அமைந்திருக்கின்றன. சுய மரியாதை இயக்கச் சார்பில் வெளிவந்தது 'குடியரசு' இதழ். வேங்கட சாமி அவர்களின் சுயமரியாதை இயக்கச் சார்பைக் காட்டும் வகையில், 'குடியரசு' இதழில் வெளிவந்த கட்டுரைகள் அமைந் துள்ளன. இந்தியச் சமூக அமைப்பில் வாழும் மனிதர்கள், இந்து மத நம்பிக்கை கொண்டு செயல்படுவதால் ஏற்படும் நிலைமைகள் குறித்துப் பின்வருமாறு பேசுகிறார்.

''இந்து என்பவன் இந்தப் பிறப்பையும் இந்த உலகத்தையும் மறந்து விடுகிறான். அடுத்த பிறப்பையும் விதியையும் வினையையும் நினைத்துக்கொண்டிருக்கிறான். ஆகையால் அவன் சோம்பேறியாய் தரித்திரத்திலும் அடிமைத்தனத்திலும் துன்பத்திலும் உழன்று நாள்தோறும் கீழ்நோக்கிச் சென்று கொண்டிருக்கிறான். ரிஷிகளால் உண்டாக்கப் பட்ட இந்து மதம் இவனை இந்நிலைக்குக் கொண்டு வந்துவிட்டது. பிரம்மா, விஷ்ணு, சிவன் என்னும் மும்மூர்த்திகளையும் முப்பத்து முக்கோடி தேவர்களையும் இன்னும் ஆயிரக்கணக்கான தெய்வங்களையும் உடைய இந்து மதம், இந்தியனைத் தரித்திரத்திலும் அடிமைத்தனத்திலும் துன்பத்திலும் துக்கத்திலும் அமிழ்த்திக் கொண்டே போகிறது. வினை விதியை நம்பிக்கொண்டு அடுத்த பிறப்பைப் பற்றிக் கவலை கொண்டுழலும் இத்தீய குணம் என்றுதான் ஒழியுமோ''. (குடியரசு:13.4.1930)

மேற்குறித்த வேங்கடசாமி அவர்களின் வெளிப்பாடு மூலம் அவரது இந்து சமயம் குறித்த கண்ணோட்டத்தைப் புரிந்து கொள்ள முடிகிறது. கடவுள் மறுப்பை சுயமரியாதை இயக்கம் முன்னிலைப் படுத்தியது. கடவுள் தொடர்பான அனைத்து நடவடிக்கைகளையும் சுயமரியாதை இயக்கம் விமரிசனம் செய்தது. வேங்கடசாமி அவர்களும் அவ்வகையான கருத்துநிலை உடையவராகவே இருந்தார். இதனை உறுதிப்படுத்தும் வகையில் அவரது பின்கண்ட விளக்கம் அமைந்துள்ளது.

''எல்லாச் சாமிகளும் இந்தியாவில்தான் அவதாரம் செய்கின்றனவே தவிர மற்ற நாடுகளில் அவதாரம் செய்வதில்லை. இந்தியாவைப் போல அவதாரம் பெருத்த தேசம் உலகத்திலே வேறெங்கும் கிடையாது. இதற்குக் காரணம் கேட்பின், இந்தியா புண்ணிய தேசம்,ஆகையால் சாமிகள் இந்தியாவில் அவதாரம் செய்கின்றன என்று சாமிகளின் 'பத்தர்கள்' சொல்லுகிறார்கள். ஆனால் சுயமரியாதை இயக்கம் என்ன சொல்லுகிறதென்றால், அவதாரப் புரட்டை நம்புவதற்கு, இந்தியாவில் ஜனங்கள் இருக்கிறபடியால்தான் சாமிகள் இந்தியாவிலே அறிவில்லாமல் அவதாரம் செய்து கொண்டிருக்கின்றன. மற்ற தேச மக்கள் பகுத்தறிவுடையவர்கள் ஆகையால், சாமிகள் அந்தத் தேசங்களில் அவதாரம் செய்யப் பயப் படுகின்றன என்று சொல்லுகிறார்கள். (குடியரசு:17.4.1932)

குடியரசு இதழில், சுயமரியாதை இயக்கம் சார்ந்த பத்திக் கட்டுரைகளைத் தொடர்ந்து எழுதி வந்தார். அறிவியல் மற்றும் உணவு தொடர்பான கட்டுரைகளையும் எழுதியுள்ளார். சுயமரியாதை

இயக்கம், பெண் சமத்துவம் குறித்தும் பேசியது. வேங்கடசாமி அவர்களும் ஆண், பெண் சமத்துவம் மிகவும் அடிப்படையானது; இந்து மதம் பெண்ணை அடிமைப்படுத்துகிறது. எனவே, பெண் விடுதலைக்கு உழைப்பது சுயமரியாதை இயக்கத் தொண்டர்களின் கடமைகளில் ஒன்றாகும் என்று வேங்கடசாமி எழுதுகிறார். (குடியரசு:10.5.1931) சுயமரியாதை இயக்கம், சமூகத்தில் நடைபெறும் பல்வேறு நிகழ்வுகளிலும் சீர்திருத்தத்தை முதன்மைப்படுத்திப் பேசிவந்தது. பல்வேறு சடங்குகள் குறித்தும் சுயமரியாதை இயக்கம் விமரிசனம் செய்தது. இறப்புச் சடங்கில் சீர்திருத்தம் குறித்து வேங்கடசாமி பின்வருமாறு எழுதுகிறார்.

''கணக்கற்ற சீர்திருத்தங்கள் செய்யப்பட வேண்டியிருக்கின்றன. அச்சீர்திருத்தங்களில் சவச்சடங்கைப் பற்றிய சீர்திருத்தமும் ஒன்றாகும். சவச்சடங்கைச் சீர்திருத்த வேண்டுமானால், பகுத்தறிவுச் சீர்திருத்தக்காரர்களாகிய சுயமரியாதை இயக்கத்தினரால்தான் முடியும். ஏனென்றால், வைதீகர்கள் சீர்திருத்தத்திற்கு உடன்படமாட்டார்கள்; பொது ஜனங்களோ என்றால் பழைய வழக்கம் என்று சொல்லிப் பழமை பாராட்டுவார்கள். அரசாங்கத்தாரோ என்றால், சமய சம்பந்தமான விஷயங்களில் தலையிட மாட்டோம் என்றுசொல்லி விடுவார்கள். ஆகவே, இந்தச் சீர்திருத்தப் பொறுப்பு சுயமரியாதை இயக்கத்தின் மேல் விழுகிறது''. (குடியரசு:6.11.1932)

இவ்வகையில் சீர்திருத்தங்கள் குறித்துப் பேசிய வேங்கடசாமி அவர்கள், உணவுமுறைகள்; குறிப்பாகச் சைவ-அசைவ உணவுகள், உணவுப்பொருட்களின் தன்மை, உணவுப் பொருட்களில் உள்ள சத்து போன்ற பல செய்திகள் குறித்தும் விரிவாகப் பேசுகிறார்.

ஆரம்பப்பள்ளி ஆசிரியராகப் பணியாற்றிய வேங்கடசாமி அவர்கள், அடிப்படைக் கல்வியான ஆதாரக்கல்வி குறித்தும் 'ஆரம்பாசிரியன்' என்னும் இதழில் தொடர்ந்து எழுதியுள்ளார். கல்விக்கும் சமூகத்திற்குமான உறவுகள் குறித்து விரிவாக விவாதித்துள்ளார். கல்வி அனைவருக்கும் கிடைக்கச் செய்வது ஒவ்வொருவரின் கடமை என்றும் எழுதுகிறார். ஐரோப்பிய நாடுகளின் கல்வி வளர்ச்சியையும் நமது நாட்டின் கல்வி வளர்ச்சியையும் ஒப்பிட்டு விரிவாகப் பேசியுள்ளார்.

''தேசத்து மக்களை அறிவும் ஆற்றலும் உடையவர்களாகச் செய்வது கல்வியே. அதாவது பாடசாலையே, தேச முன்னேற்றத்தின் அடிப்படையாக இருக்கிறது. தேசத்துச் சிறுவர்களுக்குக் கல்வி யறிவைப் புகட்டி, அவர்களை அறிவாளிகளாகச் செய்வதன்மூலம்

தேச முன்னேற்றத்தை அளிக்கவல்ல சிறந்த செய்கையுடையது பற்றியன்றோ, உபாத்திமைத்தொழிலை மிக மேன்மையான சிறந்த தொழிலென்று உலகம் கொண்டாடுகிறது'' ('ஆரம்பாசிரியன்': 7:10:1931)

இவ்வகையில் கல்வி குறித்த வேங்கடசாமி அவர்களின் அணுகு முறையைக் காணமுடிகிறது. இளமைக் காலங்களில்,இந்தியா சுயராஜ்ஜியம் பெற வேண்டியதன் அவசியம் குறித்துப் பேசியவர், பிற்காலங்களில் சுயமரியாதை இயக்கத்தோடு தன்னை அடையாளப் படுத்திக் கொண்டார். பெரியார் ஈ.வெ.ராமசாமி மீது பெரும் மதிப்புடையவராக இருந்தார். தமது இறுதிக் காலம் வரை, பெரியார் மீது ஈடுபாடு கொண்டவராகவே இருந்தார். சுயமரியாதை இயக்கத்தில் செயல்படும் காலங்களில், கிறித்தவம் தமிழுக்கு ஆற்றிய பணிகளைக் குறித்து 'கிறித்தவமும் தமிழும்' என்னும் நூலை எழுதினார். இதனைத் தொடர்ந்து சமணம், பௌத்தம் ஆகிய சமயங்கள் தமிழுக்கு ஆற்றிய பணிகளை மதிப்பீடு செய்யும் வகையில் நூல்களை எழுதத் தொடங்கினார். பௌத்த, சமணக் கோட்பாடுகள் குறித்தும் விரிவாக எழுதத் தொடங்கினார். சுயமரியாதை இயக்கச் சார்பு, பொருள்முதல் கருத்தியலை முன்னிலைப்படுத்தும் பௌத்த சமண சமயங்களின் மீது ஈடுபாட்டை உருவாக்குவது இயல்பானதே. இவ்வகையில் வேங்கடசாமி அவர்கள் பௌத்த சமண சமயங்கள், தமிழகத்தில் செயல்பட்ட முறை குறித்துப் பல தளங்களிலும் ஆய்வு செய்யத் தொடங்கினார். தமிழ்நாட்டில் பௌத்த சமண சமயங்கள் பெற்றிருந்த இடத்தைக் குறித்துப் பின்வரும் வகையில் தெளிவு படுத்துகிறார்.

''சமண சமயமும் பௌத்த மதமும் தமிழ்நாட்டிற்கு வந்த பிறகு தமிழருள் பெரும்பான்மையோர் சமணராகவும் பௌத்தராகவும் மாறினார்கள். பழைய சைவ வைணவ சமயங்கள் ஒதுக்கிப் புறக் கணிக்கப்படும் அளவுக்குச் சமண பௌத்த மதங்கள் தமிழ்நாட்டிலே வளர்ந்து வளம் பெற்றன. இந்த மதங்கள் வளம் பெற்றுச் சிறந்திருந்த காலம், கி.மு.2ஆம் நூற்றாண்டு முதல் கி.பி.8ஆம் நூற்றாண்டு வரையில் ஆகும். அதாவது, ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகள், இந்த மதங்கள் தமிழ்நாட்டில் சிறப்பும் செல்வாக்கும் முதன்மையும் பெற்று விளங்கின. பின்னர் கி.பி.8ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு, சைவ வைணவ சமயங்கள் தலையோங்கிய காலத்தில், சமண பௌத்த மதங்கள் செல்வாக்கிழந்து மெல்லமெல்லக் குன்றிக் கி.பி.12 அல்லது 13ஆம் நூற்றாண்டிலே மறைந்துவிட்டன. இப்போது பௌத்த மதம் அடியோடு மறைந்து விட்டது. ஆனால், சமண சமயம் ஆங்காங்கே

சிறிதளவு நிலை பெற்றிருக்கிறது''(மே,வீ,வேணுகோபாலப் பிள்ளை மணிவிழா மலர்:1956)

இவ்வகையில் தமிழகத்தில் செயல்பட்ட பௌத்த சமண சமயங்கள், காலப்போக்கில் எவ்விதம் மறையத் தொடங்கியது என்பது தொடர்பான செய்திகளை ஆங்காங்கே, தமது ஆய்வுகளில் வேங்கடசாமி வெளிப்படுத்தியுள்ளார். வைதீகச் சமயங்கள், பௌத்த சமய கருத்துக்களை உள்வாங்கிக் கொண்டமை, மேலும் அச்சமயங்களில் சடங்குகள், விழாக்கள் போன்ற பிறவற்றை வைதீகச் சமயங்கள், தமதாக்கிக் கொண்டமை, பௌத்த-சமணக் கோயில்கள், வைதீகச் சாமிகளின் கோயில்களாக மாற்றப்பட்டமை, பௌத்த சமணச் சிற்பங்கள், ஓவியங்கள் ஆகிய கலை வடிவங்கள் அழிக்கப்பட்டமை ஆகியன குறித்து விரிவாக, வேங்கடசாமி அவர்கள் பதிவு செய்துள்ளார். மேற்குறித்த பதிவுகளில்,அவர் தம்மை பௌத்த-சமண சமயங்களின் சார்பாளராகவே அடையாளப்படுத்திக் கொள்கிறார். சமணம், பௌத்தம் ஆகியவை மக்களின் சமயமாகச் செயல்பட்டதாகக் கருதும் வேங்கடசாமி அம்மதங்கள் மொழி பற்றிக் கொண்டிருந்த கண்ணோட்டத்தைப் பின் வருமாறு பதிவு செய்துள்ளார்.

''மனித இனம் முழுவதும் ஒரே மொழியைப் பேசாமல், வெவ்வேறு மக்கள் வெவ்வேறு மொழிகளால் மக்களிடையே பிரச்சாரஞ் செய்த மதப்பிரசாரகர்கள், அந்தந்த மக்கள் பேசிய அந்தந்த மொழிகளிலேயே நூல்களை எழுதினார்கள். ஆனால்,சமண சமயத்தாரும், பௌத்த சமயத்தாரும் இந்த விஷயத்தில் கண்ணுங் கருத்துமாக இருந்தார்கள். சமண சமயத்தைப் போதித்த வர்த்தமான மகாவீரரும், பௌத்த மதத்தைப் போதித்த கௌதம புத்தரும் அந்தந்த மக்கள் பேசுகிற மொழிகளிலேயே போதிக்க வேண்டும் என்றும் மக்கள் தெரிந்துகொள்ள முடியாத வேறுமொழிகளில் போதிக்கக் கூடாது என்றும் தங்கள் சீடர்களுக்குக் கண்டிப்பாகக் கட்டளையிட்டு இருந்தார்கள் (திருக்கோயில்,1967:9:4).

பௌத்தம், சமணம் தமிழ் நாட்டில் செல்வாக்குடன் செயல்பட்ட காலத்தில் பாலி மொழியிலிருந்து தமிழுக்குப் பல நூல்களை இவர்கள் மொழி பெயர்த்தனர் என்றும், அதற்கென 'கிரந்த எழுத்து' என்ற எழுத்து வடிவத்தை உருவாக்கினர் என்றும் வேங்கடசாமி எழுதுகிறார். இந்தப் பின்புலத்தில் தமிழில் பல, காப்பிய நூல்கள் உருவாயின. தமிழில் உருவான பல இலக்கியங்களில் பௌத்த சமண செல்வாக்கு ஏற்பட்டது குறித்தும் ஆய்வு செய்துள்ளார்.

திருவிளையாடல் புராணத்தில் கூறப்படும் பல கதைகள் பௌத்த மதக்கதைகள் என்றும் (1971) வேங்கடசாமி எழுதியுள்ளார். இவ்வகையில், தமிழகத்தில் செல்வாக்குப் பெற்றிருந்த சமயம், பக்தி இயக்கம் உருப்பெற்ற காலங்களில் அழியத் தொடங்கியது. சமணர்களைக் கொடுமைப்படுத்துதல், கழுவேற்றுதல், கொலை செய்தல், கலகம் விளைவித்தல், நிலபுலன்களைக் கவர்தல் ஆகியவை நடைபெற்றன. இதனால் இச்சமயத்தவர்கள் வாழ இயலாமல் போயிற்று என்றும் வேங்கடசாமி எழுதுகிறார். (1954) இதற்குச் சான்றாக பின்கண்ட தொண்டரடிப்பொடி ஆழ்வாரின் பாடலை மேற்கோள் காட்டுகிறார்.

''வெறுப்பொடு சமணர் முண்டர் விதியில் சாக்கியர்கள்-நின்பால்
பொறுப்பரியனகள் பேசிப் போவதே நோயதாகிக்
குறிப்பெனக் கடையுமாகில் கூடுமேல் தலையை ஆங்கே
அறுப்பதே கருமங் கண்டாய் அரங்கமா நகருளானே!...''

மேலும் சமண மதத்திற்கு இழைக்கப்பட்ட கொடுமைகள் குறித்துப் பின்வருமாறு பதிவு செய்துள்ளார்.

''திருஞான சம்பந்தர் மதுரையிலே எட்டு ஆயிரம் சமணரைக் கழுவேற்றினார் என்று சைவ சமய நூல்களாகிய பெரியபுராணம், திருவிளையாடற் புராணம், தக்கயாகப் பரணி முதலிய நூல்கள் கூறுவதும் இவற்றை நினைவுப்படுத்த மதுரை பொற்றாமரைக் குளத்து மண்டபத்தின் சுவரில் சமணரைக் கழுவேற்றுங் காட்சியைச் சித்திரந்தீட்டி வைத்திருப்பதும் மதுரைக் கோயிலில் நடைபெற்று வரும் உற்சவங்களில் ஐந்துநாள் கழுவேற்று உற்சவம் ஆண்டுதோறும் நடைபெற்று வருவதும் இவை நடைபெற்றதற்கு முதன்மையான சான்றுகளாகும்'' (1954:68)

இவ்வகையில் தமிழகத்தில் சமண, பௌத்த சமயங்களுக்கு இழைக்கப்பட்ட கொடுமைகளை விரிவாக ஆய்வு செய்துள்ளார். மேலும் சமண பௌத்த கலைச்சின்னங்கள் அழிக்கப் பட்டமை குறித்தும் விரிவாக எழுதியுள்ளார். தமிழகத்தின் பல கோயில்கள் பௌத்த சமணக் கோயில்களே; அவை படிப்படியாக சைவ -வைணவக் கோயில்களாக மாற்றப் பட்டன. தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலும் காணப்படும் சிற்பங்கள் பௌத்த சமணச் சிற்பங்களாகும். இவை பெரும் பகுதி சிதைக்கப்பட்டன அல்லது அவைகளுக்கு வேறு பெயர்கள் வழங்கப்பட்டன. இவ்வகையில்

நடைபெற்ற நிகழ்வு ஒன்றை, பின்வரும் வகையில் வேங்கடசாமி அவர்கள் காட்டுகிறார்.

''காஞ்சீபுரத்துக் காமாட்சியம்மன் கோயிலிலே சில ஆண்டுகளுக்கு முன்னர் சில புத்தர் உருவச் சிலைகள் இருந்ததைக் கண்டேன். அவைகளில் சில சிறிது உடைபட்டிருந்தன. சில ஆண்டுகளுக்குப் பிறகு மீண்டும் சென்று பார்த்தபோது, அந்தப் புத்தர் உருவச் சிலைகள் எல்லாம் துண்டு துண்டாக உடைக்கப்பட்டுக் கற்குவியலாகப் போடப்பட்டிருப்பதைக் கண்டேன். சமயப் பொறாமை காரணமாக இவைகள் உடைத்து அழிக்கப்பட்டன.

காமாட்சியம்மன் கோயில் குளத்துப் படித்துறைக்கு இரண்டு பக்கத்திலும் இரண்டு புத்தர் உருவச் சிற்பங்கள் சில ஆண்டுகளுக்கு முன்னர் இருந்தன. அந்தப் புத்தர் உருவங்களைக் 'காமாட்சி லீலாப் பிரபாவம்' என்னும் நூல் 'பூதங்கள்' என்று கூறுகிறது. வெண்மையான சலவைக் கல்லினால் புடைப்புச் சிற்பமாகச் செய்யப்பட்டிருந்த அந்த இரண்டு உருவங்களும் உண்மையில் புத்தர் உருவங்களேயாகும். ஆனால் அந்தச் சலவைக்கல் புத்த உருவங்கள், இப்போது அங்கே காணப்படவில்லை. ஆனால், 'சிமிட் ' டியால் செய்யப்பட்ட இரண்டு பெரிய விகாரமான பூத உருவங்கள் அங்கு வைக்கப் பட்டிருக்கின்றன. இதுவும் சமயப் பொறாமையினால் விளைந்த உருமாற்றங்களாகும்'' (1956:183)

இவ்வகையில் பௌத்த சமண பண்பாடு மற்றும் கலை குறித்த ஆய்வுகளை வேங்கடசாமி அவர்கள் மேற்கொண்டுள்ளார்கள். இதில் இவர் எடுக்கும் சார்பு நிலை, இவரது கருத்தியலைப் புரிந்து கொள்ளப் பெரிதும் உதவுகின்றது.

இருபதாம் நூற்றாண்டில், தமிழகத்தில் அரசியல் நிகழ்வுகள் என்பவை, இந்தியாவில் தனித்தன்மை மிக்கவை. தமிழகம், தனது தொடர்ச்சியான வரலாற்றுப் போக்கில் செயல்பட்டுக் கொண் டிருப்பதைக் காண முடிகிறது. இயற்கைநெறி சார்ந்து, தமிழகத்தின் சங்க காலம் என்று சொல்லப்படுகிற காலம் செயல்பட்டது. அதனைத் தொடர்ந்து சமய நிறுவனங்கள் உருப்பெற்ற காலங்களில், பௌத்தம், சமணம், சாங்கியம் போன்ற கடவுள் மறுப்பு சமயங்கள் தமிழகத்தில் செல்வாக்குடன் செயல்பட்டதைக் காண முடிகிறது. பின்னர் உருவான வரலாற்று வளர்ச்சியில் இவ்வகையான அவைதீகச் சமயங்கள் செல்வாக்கிழந்து, வைதீகச் சமயங்கள் உருவாயின. வைதீகச் சமயங்களின் செல்வாக்கு இன்று வரை தொடர்ந்து கொண்டிருப்பதைக் காணமுடிகிறது. இவ்வகையான வரலாற்றுப்

போக்கில், வைதீகச் சமயங்களுக்கு எதிரான குரல்கள் ஆங்காங்கே எழுந்தன. ஆனால் அவை எதுவும் பதிவு செய்யப்படவில்லை.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கம் முதல் மீண்டும் அவைதீக மரபுகள் விவாதத்திற்கு வரத் தொடங்கியது எனலாம். இஸ்லாம், கிறித்தவம் போன்ற சமயங்களும் இம்மண்ணில் இடம்பெற்றன. நவீன வளர்ச்சிகளும் புதிய சிந்தனை மரபை முன்னெடுத்தன. இந்தப் பின்புலத்தில், சுயமரியாதை இயக்கம், தமிழகச் சூழலில் உருப்பெறத் தொடங்கியது. இந்த இயக்கம், நாளடைவில் பகுத்தறிவாளர் இயக்கம் என்றும் திராவிட இயக்கம் என்றும் வளரத் தொடங்கியது. இவ்வியக்கங்களின் பின்புலத்தில், தமிழ்ச் சமூகத்தில் பல்வேறு பண்பாட்டு நிகழ்வுகள் உருப்பெறத் தொடங்கின. சைவ சமயத்தின் ஒரு பிரிவினர், சைவம் என்பது வைதீகச் சமயமல்ல; அது இயற்கை நெறி சார்ந்தது; திராவிட நெறி மரபைச் சார்ந்தது என்று, சைவத்திற்குப் புதிய அடையாளத்தைக் கொடுத்தனர். மொழி சார்ந்து, மொழித்தூய்மை இயக்கமும் உருவானது. தமிழில் பிறமொழிக் கலப்பை எதிர்க்கும் இயக்கமும் உருப்பெற்றது. இதன் செல்வாக்குப் பலதளங்களில் செயல்பட்டது. தமிழ் இசை மரபை மீட்டெடுக்கும் தமிழிசை இயக்கமும் தமிழ்ப்பாட்டு இயக்கமாக உருப்பெற்றது.

மேற்குறிப்பிட்ட பின்புலத்தில் 'திராவிட இயக்கம்' என்பது தனித்த அடையாளத்தைத் தமிழ்ச் சூழலில் பெற்றது. இந்தியா வடக்கு - தெற்கு என்று இனம் காணப்பட்டது. ஆட்சிமொழி தொடர்பான முரண்களும் உருவாயின. இந்தியைப் பொதுமொழியாக ஏற்றுக் கொள்ளத் தமிழகம் மறுத்தது. இந்தப்பின்புலத்தில் 'இந்தியா' என்ற நாட்டிற்குள், தனித்த மரபுகளைக் கொண்டதாகத் தமிழகம் தன்னை அடையாளப்படுத்தியது. இந்தப் பின்புலத்தில், தமது கருத்தியல் சார்பை உருவாக்கிக் கொண்ட அறிவாளிகள் பலர் தமிழகத்தில் உருவாயினர். இவர்களில் வேங்கடசாமி அவர்கள் குறிப்பிடத்தக்கவர். இவரது கருத்துநிலைச் சார்பு, மேற்குறிப்பிட்ட கண்ணோட்டத்தில் அமைந்தது.

தமிழர்களுக்கென தனியான சமய மரபு இருந்தது; தமிழர்களுக்கென தனித்த பண்பாட்டு மரபு உண்டு; தமிழக்கலை மரபு 'திராவிடக்கலை' மரபு என்று தனித்துப் பார்க்கத் தக்கது, ஆகிய கருத்துநிலைகளைக் கொண்டவராக வேங்கடசாமி அவர்கள் இருந்தார்கள். இக்கருத்து நிலை சார்ந்தே தமது ஆய்வுகளை, இவர் முன்னெடுத்தார். இக்கருத்து நிலைக்குச் சான்றாதாரங்களை முன்வைக்கும் போக்கில் இவரது ஆய்வுகள் உருவாயின. தமிழின்

பழமை. தமிழ் நூல்களின் பழமை. தமிழர்களின் பழமை ஆகியவை குறித்து. இவர் தனித்த கருத்துடையவராக இருந்தார். இத்தன்மையை உறுதிப்படுத்தும் வகையில், இவரது ஆய்வுகள் அமைந்துள்ளன. இந்தப் பின்புலத்தில் 'திராவிடமதம்' என்பது குறித்த வேங்கடசாமி அவர்களின் கருத்து நிலை பின்வருமாறு அமைகிறது.

''பண்டைக் காலத்தில், வடநாட்டினின்று சமணம், பௌத்தம், வைதீகம் முதலிய மதங்கள் தமிழ் நாட்டிற்கு வருவதற்கு முன்னரே, தமிழர் 'திராவிட' மதத்தைக் கொண்டிருந்தனர் என்று முன்னர் கூறினோம் அன்றோ? அந்தத் திராவிட மதம் என்பது முருகன், கொற்றவை, சிவன், திருமால் முதலிய தெய்வங்களை வணங்கும் வழிபாடு ஆகும். அக்காலத்து வைதீகப் பிராமணர் தம் வேள்விகளில் ஆடுமாடுகளைக் கொன்று வந்தது போலவே, அந்தக் காலத்துத் தமிழரும் முருகன் கொற்றவை முதலிய தெய்வங்களுக்கு ஆடு கோழிகளைப் பலியிட்டு வணங்கி வந்தனர். உயிர்ப் பலியிடுவதைப் பொறுத்தவரையில் திராவிட மதமும் வைதீக மதமும் ஒற்றுமை கொண்டிருந்தன. ஆனால் அப்பண்டைத் தமிழர் சேயோன், மாயோன் ஆகிய சிவன், திருமால் என்னும் தெய்வங்களுக்கு உயிர்ப்பலி கொடுத்ததாகத் தெரியவில்லை. அன்றியும் அக்காலத்தில் சைவம் என்றும் வைணவம் என்றும் தனித்தனியே இரண்டு மதங்கள் பிரிவுபடவும் இல்லை.

குறுகிய நோக்கமும் குறுகிய கொள்கையும் உடைய வடநாட்டு வைதீக மதம் தென்னாட்டில் செல்வாக்கின்றி ஒதுக்கப்பட்டிருந்த தென்று முன்னர்க் குறிப்பிட்டோமன்றோ? ஒதுக்கப்பட்டுக் கிடந்த இந்த மதம் பௌத்த சமண மதங்களைப்போன்று செல்வாக்குப் பெற முயன்றது. செல்வாக்குப் பெறவேண்டுமானால் இவ்விரண்டு மதங்களையும் அடக்கி ஒடுக்கவேண்டும். இம்மதங்களை அடக்கி ஒடுக்க வைதீக மதத்திற்கு ஆற்றலும் ஆண்மையும் இல்லை. ஆற்றலும் ஆண்மையும் பெற வழியாது? ஒரே ஒரு வழிதான் உண்டு. அவ்வழியாது எனின் தமிழர் வழிபட்டு வரும் திராவிட மதத்துடன் வைதீக மதமும் கலந்து கொண்டு பொதுமக்களின் ஆதரவைப் பெறுவதுதான். இதைச் செய்ய வைதீக மதம் முற்பட்டது... அழியுந்தறுவாயிலிருந்த வைதீக மதம் திராவிட மதத்தைத் தழுவிப் பிடித்துக் கொண்டது. அஃதாவது வைதீக மதம், திராவிட மதத்தின் தெய்வங்களாகிய முருகன், கொற்றவை, சிவன், திருமால் முதலிய தெய்வங்களை ஏற்றுக் கொண்டது'' (1954:57-58).

இவ்வகையில் தமிழகத்தில் 'திராவிட மதம்' என்ற தனி அடையாளத்தை வேங்கடசாமி அவர்கள் கட்டமைக்கிறார். இக்கருத்தியல் சார்ந்து அவரது ஆய்வுகள் முன்னெடுக்கப்படுகின்றன.

மேற்குறித்த கருத்தியல் சார்ந்து சமஸ்கிருத மேலாண்மையை, இவர் எதிர் நிலையில் நிறுத்தி, தமது ஆய்வுகளைச் செய்துள்ளார்.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சங்க இலக்கியங்கள் அறியப்பட்டமை, தொல்காப்பியம் அறியப்பட்டமை, பல்வேறு அகழ்வாய்வுகள் ஆகியவை தமிழ் மற்றும் தமிழரின் பழமையை வலியுறுத்தியன. 'திராவிட இயல்' என்ற கருத்தாக்கம் மேலும் வலுப்பெற மேற்கூறிய செய்திகள் வாய்ப்பாக அமைந்தன. இந்தப் பின்புலத்தில் நீலகண்ட சாஸ்த்திரியார், வையாபுரிப்பிள்ளை போன்றவர்களின் கருத்துகளை வேங்கடசாமி ஏற்றுக் கொள்ளவில்லை. எடுத்துக்காட்டாக, சிலப்பதிகாரத்தின் காலம் கி.பி.எட்டாம் நூற்றாண்டு என்று பேரா.வையாபுரிப்பிள்ளை கருதினார். இதற்குப் பேராசிரியர் காட்டிய சான்றுகளின் ஒன்று; சிலப்பதிகாரத்தில் 'பங்களர்'என்ற சொல் ஆட்சி இடம் பெறுவது. பங்களர் என்பது பங்காள (வங்காள) நாட்டவர் ஆகும். பகரம் வகரமாகும் என்ற விதி சார்ந்து வையாபுரிப்பிள்ளை கூறினார். எனவே வங்காளர் பற்றிய குறிப்பு இருப்பதால், சிலப்பதிகாரம் பிற்காலத்ததுவே என்றார். கே.ஏ. நீலகண்ட சாஸ்த்திரியார்,வி.ஆர். இராமச்சந்திர தீட்சிதர், ஹேமசந்திர ராய் சவுத்திரி ஆகிய பேராசிரியர்களும் வையாபுரிப்பிள்ளையின் கருத்தை ஆதரித்தனர். இவர்கள் பிற்கால நூல்களில் இச்சொல்லாட்சி வருவதை மேற்கோள் காட்டியுள்ளனர். வேங்கடசாமி அவர்கள் மேற்குறித்த பேராசிரியர்கள் சுட்டியுள்ள 'பங்களர்','வங்காளர்' என்னும் இருசொற்களுள் ஒரே பொருளை உடையது என்பதை மறுக்கிறார். தென் இந்தியச் சாசனங்கள் பலவற்றில் 'பங்களர்' என்ற சொல் இடம் பெறுவதைக் காட்டியுள்ளார். 'பங்களர் நாடு' என்று ஒன்று இருந்ததைச் சாசனங்கள் வழி உறுதிப்படுத்துகிறார். இதன் மூலம், தமிழகத்தின் வடபகுதியில் இருந்தது பங்கள நாடு என்கிறார். இவ்வகைப் பங்களர் குறித்த செய்திகள் வங்காளரைக் குறிக்கவில்லை, சங்க காலம் முதல் தமிழ்நாட்டில் வாழ்ந்த ஒரு பிரிவினரையே குறிக்கிறது என்று சான்றுகளுடன் நிறுவுகிறார். கொங்கணர், கங்கர், கட்டியர் முதலிய பெயர்களைப் போன்று பங்களர் என்ற பெயரும் இடம் பெறுவதாகக் கூறுகிறார்.

மேற்குறிப்பிட்ட ஆய்வில்,தமிழ் நூல்களின் காலப்பழமை குறித்து வேங்கடசாமி அவர்களின் நிலைப்பாட்டை அறிய முடிகிறது. இதைப் போலவே தொல்காப்பியத்தின் கால ஆய்வுகள் குறித்தும் வேங்கடசாமி முரண்பட்ட கருத்தைக் கொண்டுள்ளார். 'கி.பி.5ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது தொல்காப்பியம் என்ற கருத்தை இவர் ஏற்றுக் கொள்ளவில்லை. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில், வேங்க டசாமி நிகழ்த்திய(1969) ஆய்வுரைகள், இவ்வகையில் தமிழின்,தமிழ் நூல்களின் பழமையை முன்னெடுக்கும் வகையில் அமைந்தன. இதனைத் தொடர்ந்து, சென்னைப் பல்கலைக்கழகம் (1972), மற்றும் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் தமிழக வரலாறு குறித்த நூலில்(1978)இவர் எழுதிய சங்க கால வரலாறு போன்றவை மேற் குறித்த கருத்தியலை உறுதிப்படுத்தும் வகையில் அமைந்துள்ளன. இவ்வகையில் திராவிடக் கருத்தியலில் சார்புநிலை உடையவராக வேங்கடசாமி அவர்கள் தம்மை அடையாளப்படுத்திக் கொள்கிறார். ஆரிய-திராவிட கருத்தியலில்,திராவிடக் கருத்தியலை ஏற்கிறார். தமிழ் நூல்களில் காலத்தைப் பின்கொண்டு வருவதை இவர் ஏற்கவில்லை. ஏனெனில் சங்க காலம் முதல் தமிழகத்தில் பாலி,பிராகிருதம் போன்ற மொழிகள் தமிழோடு உறவாடியது. இதனால் கலப்பு ஏற்படுவது என்பது தவிர்க்க இயலாது. எனவே, இதனைக் காரணமாகக் கொண்டு நூல்களின் காலத்தைக் கணக்கிட முடியாது என்கிறார்.(1966) கீழ்வரும் அவரது மேற்கோள் இதனை உறுதிப்படுத்துகிறது.

"தமிழ்மொழி இன்றுள்ளது போலவே அன்றும் பேச்சு வழக்கில் இருந்த மொழி. பேச்சு வழக்கில் இருக்கும் மொழிகள், மதங்களின் தொடர்பினாலோ பிறமொழியினருடன் பழகும்போது,பிறமொழிச் சொற்கள் பேச்சு மொழியில் கலந்துவிடுவது இயற்கை. இந்த இயற்கையைத் தடுக்க முடியாது. ஆனால், கட்டுப்பாட்டுக்கு அடங்கி வரம்பு மீறாதபடி பார்த்துக்கொள்வது மொழிப்பற்றுள்ளவரின் கடமை.

அதை அக்காலத்துத் தமிழர் செய்திருக்கிறார்கள். ஆனால், அடியோடு பிறமொழிச் சொற்களைக் கலக்காமல் இருக்கச் செய்ய முடியாது. பேச்சு வழக்கற்றுப்போன ஏட்டு மொழிகளிலேயும் பிறமொழிச் சொற்கலப்பு ஏற்படுகிறது என்றால், பேச்சு வழக்கில் உள்ள மொழிகளில் பிறமொழிச் சொற்கள் கலப்பதைத் தடுக்க இயலுமோ? ஆகவே, சங்க காலத் தமிழகத்திலேயும் பிறமொழிக் கலப்பு ஏற்பட்டுக் கொண்டிருந்தது" (Annuals of Oriented Research Vol. XXI: part I)

வேங்கடசாமி அவர்கள் திராவிடக் கருத்தியல் சார்ந்து தமிழ் இனத்தின் பழமை சார்ந்த கருத்தியலை முன்னெடுத்தது போலவே, தமிழர்களுக்கான,திராவிடர்களுக்கான தனியான கலை மரபு இருப்பதாகவும் கருதுகிறார். அது தொடர்பான விரிவான ஆய்வை மேற்கொண்டுள்ளார். தமிழ்ச்சூழலில் இவ்வகையான கலை வரலாற்றுக் கண்ணோட்டத்தை முதன்முதல் வளர்த்தெடுத்ததில் வேங்கடசாமி அவர்களுக்குத் தனித்த இடமுண்டு. கலை வரலாறு குறித்து அவர் வெளிப்படுத்தும் வரையறை பின்வருமாறு அமைகிறது.

''பாரத (இந்திய) நாட்டுக் கட்டடங்களை மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரித்திருக்கிறார்கள். அவை நாகரம்,வேசரம்,திராவிடம் என்பன...மூன்றாவது பிரிவான திராவிடம் என்னும் பிரிவு தென் இந்தியக் கோயில் கட்டடங்களாகும். இவை வடக்கே கிருஷ்ணா நதி முதல் தெற்கே கன்னியாகுமாரி வரையில் காணப்படுகின்றன. திராவிடக் கோயில் கட்டட வகையில் தமிழர், சாளுக்கியர், ஹொய்சளர் முதலிய பிரிவுகள் உள்ளன. இந்த உட்பிரிவுகளை விடுத்து, தமிழ்நாட்டுக் கோயில்கள் மட்டும் ஆராய்வோம். தமிழ்நாட்டுக் கோயில்களிலும் பல்லவர் காலத்துக் கோயில்கள், (பிற்காலம்) சோழர் காலத்துக் கோயில்கள் பாண்டியர் காலத்துக் கோயில்கள், விஜயநகர அரசர் காலத்துக் கோயில்கள் என்று உட்பிரிவுகள் உள்ளன. அப்பிரிவுகளைத் தூண்கள், கூடுகள் முதலிய அமைப்புக்களிலிருந்து எல்லாம் தமிழ் நாட்டுக் கோயில்களைப் பற்றிய, பொதுவான அமைப்புப் பற்றிய, மேல் போக்கான செய்திகளேயாகும்.'' (1956:14-15).

மேற்குறித்த பின்புலத்தில் ஆனைக்கோயில் (ஆலக்கோயில்), இளங்கோயில், கரக்கோயில், ஞாழற்கோயில், கொகுடிக் கோயில், மணிக்கோயில் எனப் பலவகை கோயில் அமைப்புகள், தமிழ்ச் சூழலில் உருப்பெற்றதைக் கூறுகிறார். இவ்வகையில் திராவிடத் தமிழ் மரபுக்கான தனியான கட்டடக் கலை மரபு இருப்பதை வேங்கடசாமி தெளிவுபடுத்துகிறார்.

இவ்வகையில் தமிழர்களுக்கான சிற்பக்கலை, ஓவியக்கலை, இசைக்கலை ஆகியவற்றின் தனித் தன்மைகளை வெளிப்படுத்தி யுள்ளார். தமிழ் நாட்டில் உருவான தமிழிசை இயக்கம் குறித்தும் பேசியுள்ளார். தமிழர்க்கான தனியான கலை வரலாறு ஒன்றைக் கட்டமைப்பதில் வேங்கடசாமி அவர்கள் செயல்பட்டுள்ளார்.

மேற்கூறிய பல்வேறு தகவல்களின் அடிப் படையில் வேங்கடசாமி அவர்களின் கருத்து நிலைச்சார்பை நாம் புரிந்து

கொள்ள முடிகிறது. 1920-1980 என்ற அறுபது ஆண்டுக்கால வரலாற்றில் தனக்கென ஒரு கருத்துநிலை கொண்ட அறிஞராகவே அவர் வாழ்ந்து மறைந்திருக்கிறார். அவரது இவ்வகைச் செயல்பாட்டைப் பின்வருமாறு தொகுத்துக் கொள்ளமுடியும்.

- இந்தியா பிரித்தானியர்களிடம் அடிமைப் பட்டிருந்த காலத்தில், இந்நாட்டிற்குச் சுய ராஜ்ஜியம் தேவை என்பதை உணர்ந்தவராகச் செயல் பட்டுள்ளார். சுயராஜ்ஜியம் பெறுவதற் காகப் பிரித்தானியர்கள் மட்டும் தடையாக இல்லை; மாறாக நமது சமூகத்தில் உள்ள பல்வேறு முரண் பாடுகளே காரணம் என்றும் பேசுகிறார்.

- சுயமரியாதை இயக்கம் சார்ந்த கருத்துநிலை உடைய வராக இருந்தார். சமூகத்தில் பல்வேறு சீர்திருத் தங்களைச் சுயமரியாதை இயக்கம் செய்யவேண்டும் என்றும் வலியுறுத்துகிறார். சீர்திருத்தங்களின்றிச் சமூகத்தில் மாற்றம் ஏற்படாது என்பதை வலியுறுத்திக் கூறுகிறார்.

- இந்து சமயத்தில் உள்ள பல்வேறு முரண்பாடுகளை விமரிசனம் செய்துள்ளார். இச்சமயம், தமிழகத்தில் தொடக்க காலம் முதல் உருப்பெற்று வந்த திராவிட மதத்தை அழித்து, இந்து மதமாக உருப்பெற்று விட்டது என்றும் கூறுகிறார். திராவிட மதக் கருத் தியலை முதன்மைப்படுத்துகிறார்.

- தமிழ்த் தேசிய இனத்திற்கான புதிய வரலாறு எழுத வேண்டிய தேவை இருப்பதாகக் கருதுகிறார். தமிழில் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட சங்க இலக்கியங்கள் மற்றும் பல்வேறு அகழ்வாய்வு தொடர்பான தரவுகள். ஆகியவை மேற்குறித்த வரலாறு எழுதும் தேவையை அதிகப்படுத்துவதாகக் கருதுகிறார். இக்கண் ணோட்டத்தில் தமிழர் பழமை குறித்த வேறுபட்ட கருத்துடையவராகவே உள்ளார்.

- தமிழர்க்கான தனித்த கலை மரபு இருப்பதாகக் கருதுகிறார். அம்மரபு சார்ந்தே தமது கருத்தியலை முன் வைக்கிறார். இந்தியாவில் வடக்கு-தெற்கு என்ற வேறுபட்ட பண்பாட்டு மரபு இருப்பதை முதன்மைப் படுத்துகிறார். அவ்வேறுபாடுகள் சார்ந்தே தமது கருத்தியலை வெளிப்படுத்துகிறார்.

- தமிழ்ச் சமூக வரலாறு தொடர்பான தனித்த கருத்துருவை உடையவராகவே வேங்கடசாமி அவர்களைக் காண முடிகிறது. இருபதாம் நூற்றாண்டில் இவ்வகையான கண்ணோட்டத்தோடு செயல்பட்ட அறிஞர்களில், இவருக்குத் தனித்த இடமிருக்கிறது.

# இணைப்பு-1

## மயிலை சீனி.வேங்கடசாமி
வாழ்க்கைக் குறிப்புகள்

இப்பகுதியில் மயிலை சீனி.வேங்கடசாமி அவர்களின் வாழ்க்கை நிகழ்வுகள் காலவரிசையில் தொகுக்கப்படுகின்றன. இவரது வாழ்கை நிகழ்வுகளில் ஆய்வுப்பணியே முதன்மை பெறுகிறது. ஆய்வுகள் குறித்த விவரங்கள் கால ஒழுங்கில் பதிவு செய்யப்படுகின்றன.

1900:

-டிசம்பர் 16,ஆம் நாள் மயிலாப்பூரில் (சென்னை)பிறந்தார். தந்தையார் சீனிவாச நாயக்கர், தாயார் தாயாரம்மாள். சீனிவாச நாயக்கர் சித்த மருத்துவத்தில் ஈடுபாடு மிக்கவர். செய்யுள் இயற்றுவதிலும் ஆர்வம் உடையவர். இவரது குடும்பம் பரம்பரை சித்த மருத்துவக் குடும்பம் ஆகும். சித்த மருத்துவம் தொடர்பான ஓலைச் சுவடிகளை சீனிவாச நாயக்கர் சேகரித்துப் பாதுகாத்து வந்தார். பல்வேறு சித்த மருந்துகளை உருவாக்கி சோதனை மூலம், மருத்துவம் செய்தவர் இவர்.

-மயிலை சீனி.வேங்கடசாமி அவர்கள்,மயிலாப்பூரில் இருந்த புனித தோமையர் பள்ளியில் ஆரம்பக் கல்வி தொடங்கி, பள்ளி இறுதி வகுப்புவரை பயின்றார்.

1920:

-சென்னைக் கலைக் கல்லூரியில்(Madras School of Arts) ஓவியம் பயிலுவதற்காகச் சேர்ந்தார். ஆனால் தொடரவில்லை. திருமணம் செய்து கொள்ளாது வாழ்க்கையைத் தொடங்கினார்.

1921:

-தந்தை சீனிவாச நாயக்கர்,தமையன் சீனி. கோவிந்தராஜன் ஆகியோர் மறைந்தனர்.சீனி.வேங்கடசாமியின் வளர்ச்சியில் பெரும்




தாக்கத்தை ஏற்படுத்தியவர் இவரது அண்ணன்,சீனி.கோவிந்தராஜன். இவர் பக்தி இலக்கியங்களில் ஈடுபாடு மிக்கவர். இவர்கள் வாழ்ந்த காரணீசுவரர் கோவில் தெருவில் மகாவித்துவான் சண்முகம் பிள்ளை என்பவர் வாழ்ந்து வந்தார். இவர் புனித பால் உயர்நிலைப் பள்ளி, புனித தோமையர் உயர்நிலைப் பள்ளி ஆகியவற்றில் தமிழாசிரியராக இருந்து ஒய்வு பெற்றவர். தமிழ் அறிஞர் கா.நமச்சிவாய முதலியார் இவரது மாணவர். -சீனி.கோவிந்தராஜனும் சண்முகம் பிள்ளையின் மாணவர் ஆவார். சண்முகம்பிள்ளை அவர்களின் வீட்டில் இருந்த சுவடிகள் மற்றும் நூல்கள் சீனி. கோவிந்தராஜன் மற்றும் சீனி.வேங்கடசாமி ஆகிய இருவருக்கும் படிக்கக் கிடைத்தன. மகாவித்வான் சண்முகம்பிள்ளை தமிழ் இலக்கியப் பதிப்பு முன்னோடிகளில் ஒருவர். 'விவேகசிந்தாமணி'(1892) 'ஞானபோதினி' (1897) போன்ற இதழ்களில் இவர் எழுதியுள்ளார்.

சீனி.கோவிந்தராஜன் செய்யுள் இயற்றும் புலமை மிக்கவர். 'திருமயிலை நான்மணிமாலை' என்பது அவர் இயற்றிய நூல் ஆகும்.

சீனி.வேங்கடசாமி தமையனைப் போலவே தமிழ் நூல்களைப் பயிலத் தொடங்கினார்.

1922:

-தமையன் மற்றும் தந்தை மறைந்த சூழலில்,குடும்பத்தைக் காப்பாற்ற பணிக்குச் செல்லத் தொடங்கினார்.வேங்கடசாமி குறிப்பிடுகிறார்.''ஒரு ஸ்பேர்பார்ட்ஸில் சில காலம் குமாஸ்தாவாக இருந்தேன். அந்த வேலை என் ஆராய்ச்சிப் படிப்புக்கு ஒத்து வரவில்லை. அதைவிட்டு விலகி சிலகாலம் 'குடியரசு' நாளிதழில் பணியாற்றிய பிறகு கார்ப்பரேஷன் பள்ளியில் ஆசிரியராகச் சேர்ந்தேன்''('தீபம்':பேட்டி:மார்ச் 1970)

-குடியரசு இதழ் என்று பேட்டியில் தவறாக வந்துள்ளது. குடியரசு இதழ் 1925க்குப் பின்னர்தான் வெளிவந்தது. 1922-23ல் நீதிக்கட்சி நடத்திய திராவிடன் நாளிதழில் ஆசிரியர் குழுவில் ஒருவராகப் பணிபுரிந்தார். (சான்று: மயிலை சீனி வேங்கடசாமி நூல்களை வெளியிட்ட சாந்தி நூலகப் புத்தக விலைப் பட்டியலில் காணப்படும் அவரது வாழ்க்கைக் குறிப்பு)

1923-27:

-இக்காலங்களில் சென்னையில் இருந்து வெளி வந்த 'லக்ஷ்மி' என்ற இதழில் தொடர்ந்து கட்டுரைகள் எழுதி வந்துள்ளார். பல்வேறு

செய்திகளைத் தொகுத்து எழுதும் தன்மை இக்காலத்திய இவரது கட்டுரைகளில் காண முடிகிறது.

-இப்பத்திரிகையில் 'கொடுங்காற்று' என்ற கதையையும் இவர் எழுதிப் பார்த்துள்ளார். இதற்குப் பிறகு கதைகள் எழுதியதாகத் தெரியவில்லை.

1930:

-இவ்வாண்டில் மயிலாப்பூர் நகராட்சிப் பள்ளியில் தொடக்கநிலை ஆசிரியராகப் பணியில் சேர்ந்துள்ளார்.

1931-32:

-'குடியரசு' இதழில் பல கட்டுரைகளை எழுதியுள்ளார். இக்கட்டுரைகள் 'சுயமரியதை இயக்கக்' கருத்துச் சார்பில் இருப்பதை அறிய முடிகிறது. உணவு முறைமைகள் குறித்த கட்டுரைகளையும் எழுதியுள்ளார். சைவ, அசைவ உணவுகள் பற்றிய விவாதங்களையும் நிகழ்த்தியுள்ளார். இக்கட்டுரைகள் பின்னர் தொகுக்கப்பட்டு 'உணவு நூல்' (1965) என்னும் பெயரில் வெளிவந்தன.

குடியரசு இதழில் பணியாற்றிய காலத்தில் பெரியார் ஈ.வெ.ரா. அவர்களோடு தொடர்பு உருவானது.

-1931இல் 'ஆரம்பாசிரியன்' என்னும் இதழில் தொடர்ந்து கட்டுரைகளை எழுதி வந்துள்ளார். இக்கட்டுரைகள் பொதுச் செய்திகளை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளன. ஆரம்பக் கல்வி குறித்தும் சில கட்டுரைகளை எழுதியுள்ளார். இக்கட்டுரைகள் கல்விமீதான இவரது அக்கறையைக் காட்டும் வகையில் உள்ளன. 1934-38 காலங்களில் 'ஊழியன்' இதழில் சில கட்டுரைகள் எழுதியுள்ளார்.

1936:

-வேங்கடசாமி அவர்களது முதல் நூலான 'கிறித்தவமும் தமிழும்' சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தால் வெளியிடப்பட்டது. இந்நூலுக்கு அறிஞர் ச.த.சற்குணர், விபுலானந்த அடிகள் ஆகியோர் அணிந்துரை வழங்கினர். சற்குணர் சொற்பொழிவைக் கேட்ட உந்துதலில் இந்நூலை உருவாக்கியதாக வேங்கடசாமி கூறுகிறார்.

-சுயமரியாதை இயக்கத் தொடர்போடு,தமிழ் அறிஞர்கள் தொடர்பும் இவருக்கு இந்தக் காலங்களில் இருந்ததை அறிகிறோம். விபுலானந்த அடிகளை அடிக்கடிச் சந்தித்துப் பேசுவதை வழக்கமாகக்

கொண்டிருந்தார். தெ.பொ.மீனாட்சிசுந்தரனார், சிந்தாதிரிப் பேட்டையில் நடத்தும் கூட்டங்களுக்கு இக்காலங்களில் சென்று வந்ததாக மயிலை சீனி வேங்கடசாமி குறித்துள்ளார்.

-1938 ஆம் ஆண்டு முதல் 'செந்தமிழ்ச் செல்வி' இதழில் தொடர்ந்து கட்டுரைகள் எழுதியுள்ளார். இவரது கட்டுரைகள் மிகுதியாக இடம் பெற்றுள்ளது இவ்விதழில்தான்.

1940:

-5.1.1940இல் இவரது'பௌத்தமும் தமிழும்' நூல் சைவசிந்தாந்த நூற் பதிப்புக் கழகத்தால் வெளியிடப்பட்டது. இந்நூலை ச.த.சற்குணர் அவர்களுக்கு வேங்கடசாமி காணிக்கையாக்கியுள்ளார். தொடர்ந்து இந்நூல் பல பதிப்புகள் இன்றுவரை வந்து கொண்டுள்ளது. பௌத்தம் குறித்து தமிழில் எழுதப்பட்ட குறிப்பிடத்தக்க முதல் நூல் இது. இந்நூலின் இரண்டாம் பதிப்புக்கு இலங்கையைச் சேர்ந்த, சிங்கள அறிஞர் முதலியார். ஏ.டி.எஸ்.நி.புஞ்சிஹேவா,அணிந்துரை வழங்கியுள்ளார். இந்த அறிஞரால், இந்நூல் சிங்களத்தில் மொழி பெயர்க்கப்படுவதாகவும் நூலில் குறிப்பு உள்ளது. வேங்கடசாமி கள ஆய்வு செய்து'கூவம்' என்ற கிராமத்தில் கண்டுபிடித்த புத்தரின்முழு உருவச்சிலை இந்நூலின் தொடக்கத்தில் இடம் பெற்றுள்ளது.

1943:

-23.12.1943இல் சென்னையில் நடைபெற்ற தமிழ்இசை மகாநாட்டில்'ஸ்ரீ காந்தருவதத்தையின் இசைத் திருமணம், என்னும் சிறுநூல், பேராசிரியர் அ.சக்கரவர்த்தி நயினார் (தலைவர் ஓய்வு)அரசு கல்லூரி கும்பகோணம்) அவர்களால் வெளியிடப்பட்டது. இச்சிறு நூலில் ச.த.சற்குணர் முன்னுரை எழுதியுள்ளார். தமிழிசை இயக்கத்தில் ஈடுபாடு கொண்டிருந்த வேங்கடசாமி அவர்கள், இவ்வகையான நூலைத் தமிழிசை மாநாட்டில் வெளியிடுவது குறிப்பிடத்தக்கது. சமணர் இசைக்கு அளித்த பங்களிப்பு, இச்சிறு நூலில் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

-இந்நூலில் 'சமணமும் தமிழும்' என்னும் நூல் விரைவில் வெளிவர இருப்பதாகக் குறிப்பு உள்ளது.

1944:

-'இறையனார் அகப்பொருள் ஆராய்ச்சி' என்னும் சிறு வெளியீட்டை (16 பக்கங்கள்) தாமே அச்சிட்டுள்ளார். இச்சிறு

வெளியீட்டின் பின்புற அட்டையில் 'பௌத்தமும் தமிழும்' நூல்பற்றிய விளம்பரம் ஆங்கிலத்தில் வெளிவந்துள்ளது. களவியல் உரையில் மறைந்த பகுதியைக் கண்டுபிடித்து இதில் வெளி யிட்டுள்ளார். 'தமிழ்' என்பதற்கு 'அகம்' என்ற பொருள் இருப்பதை இவ்வாய்வில் சுட்டுகிறார். இவ்வாய்வை 1960களில் விரிவாகச் செய்துள்ளார். நுணுக்கமான ஆய்வைக் கொண்டது இவ்வெளியீடு.

1948:

-'இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம்' என்னும் நூல் வெளிவந்தது. இந்நூலுக்கு திரு.வி.க அணிந்துரை எழுதியுள்ளார். விபுலானந்தருக்கு இந்நூலைப் படையல் செய்துள்ளார். இந்நூலில் மிகவும் நுண்ணிய நோக்குடன் ஆய்வு அமைந்துள்ளது.

1950:

-மகேந்திர விக்ரவர்மன் இயற்றிய 'மத்தவிலாசம்' என்னும் சமஸ்கிருத நகைச்சுவை நாடகத்தை மொழி பெயர்த்து வெளியிட்டார். இந்நூல் வெளிவர தத்துவப் பேராசிரியர் இராவ்பகதூர். அ.சக்கரவர்த்தி நயினார் பொருளுதவி வழங்கி யுள்ளார். எல்.டி.பர்னெட் (L.D.Barnett) அவர்கள் சமஸ்கிருதத்தி லிருந்து ஆங்கிலத்தில் மொழி பெயர்த்ததை அடிப்படையாகக் கொண்டு, வேங்கடசாமி இம்மொழி பெயர்ப்பைச் செய்துள்ளார். பேரா.அ.சக்கரவர்த்தி நயினார். சமஸ்கிருத மூலத்தோடு ஒப்பிட்டுச் சரிபார்த்துத் தந்துள்ளார். இந்நூல் பின்னர் வெளிவந்த 'சமணமும் தமிழும்'நூலில் இணைப்பாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

-'மகாபலிபுரத்து ஜைன சிற்பம்' என்னும் சிறுநூல் இவ்வாண்டில் வெளிவந்தது. தமிழ்நாடு ஜைன சங்கம் இந்நூலை வெளியிட்டுள்ளது. மகாபலிபுரத்தில் உள்ள 'அர்ச்சுனன் தபசு' என்று கூறப்படும் சிற்பம் உண்மையில் 'ஜைனரின் அஜித நாதர்' புராணத்தில் கூறப்படுகிற 'சகர சாகரர்களின் கதை' சிற்பமாக வடிக்கப்பட்டிருப்பதாக உறுதிப்படுத்து கிறார். இதனை அன்றைய தொல்லியல் துறையினரும் ஏற்றுக் கொண்டனர். இவ்வகையில் இச்சிறு நூல் மிக முக்கியத்துவம் வாய்ந்தது. இந்நூலுக்கு வேதராணியத்தைச் சேர்ந்த அ.ஜீ.அனந்த ராஜய்யன் முதலியார்(சமண அறிஞர்) பதிப்புரை எழுதியுள்ளார். இவரே இந்நூல் வெளியிட பொருளுதவி செய்தவரும் ஆவார்.

1952:

-பௌத்த கதைகள்-புத்தர் பற்றிய இக்கதைகள் உலகத்தில் பல மொழிகளிலும் மொழியாக்கம் செய்யப்பட்டவை. தமிழில் முதன்முதல் வேங்கடசாமி மொழியாக்கம் செய்துள்ளார். சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் இந்நூலை வெளியிட்டது. இந்நூலை கா.சுப்பிரமணியபிள்ளை அவர்கட்குப் படையல் செய்துள்ளார். இந்நூலில் 16 கதைகள் உள்ளன.

1954:

-'சமணமும் தமிழும்',நூல் வெளிவந்தது. இதனையும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகமே வெளியிட்டது. 1940 முதல் இந்நூலை எழுதத்தொடங்கி நூல் வெளிவர இயலாமல் போனது குறித்து முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார். இவ்வகைப் பொருளில் தமிழில் இதுவே முதல் நூல். இந்நூலை 'முதற் பகுதி' என்றே குறிப்பிட்டுள்ளார். இரண்டாம் பகுதி வெளி வரவில்லை. சென்னை, தமிழ் எழுத்தாளர் சங்கம் 1961 இல் சிறந்த தமிழ் நூலாசிரியருக்கான கேடயத்தை இந்நூலுக்காக வழங்கியது.

1955

-அரசு பணியிலிருந்து ஓய்வு பெற அப்போது 55 ஆண்டுகள் என்பதால், 16.12.1955 இல் ஓய்வு பெற்றார்.

1955:

-'மகேந்திரவர்மன்' நூல் வெளிவந்தது. பல்லவர்கள் பற்றித் தமிழில் வெளிவந்த முதல் நூல் எனலாம். கல்வெட்டுச் சான்றுகள், தொல்பொருள் ஆய்வுச் சான்றுகள் ஆகியவற்றைப் பயன்படுத்தி இந்நூலை உருவாக்கியுள்ளார்.

1956:

-'தமிழர் வளர்த்த அழகுக்கலைகள்' நூல் வெளிவந்தது. இந்நூலில் கலைச் செல்வ வரிசையில் இனிவெளிவரும் நூல்கள். கலைச் செல்வம்-2 ஆனைக் கோயில்: கலைச்செல்வம்-3 தென் இந்தியச் சிற்பங்கள்; கலைச் செல்வம்-4 காவியப் புலவன் கற்பனையும் ஓவியப் புலவன் கைவன்மையும்; கலைச்செல்வம் -5 தேவபாணி என்று குறிப்பிட்டுள்ளார். கலைச்செல்வம் -1 என்ற

வரிசையில் தமிழர் வளர்த்த அழகுக்கலைகள் என்ற நூல் வெளிவந்துள்ளது. பாரி நிலையம் இந்நூலை வெளியிட்டது. இந்நூலுக்குத் தமிழக அரசு பரிசளித்துக் கௌரவித்தது.

-இந்த ஆண்டில் 'கௌதம புத்தர்' நூல் வெளிவந்தது. தமிழில் புத்தர் வாழ்க்கை வரலாறு குறித்த முதல்நூல், ஸ்டார் பிரசுரம் இந்நூலை வெளியிட்டது. புத்தர் பிறந்த 2500 ஆம் ஆண்டையொட்டி இந்நூல் வெளியிடப்பட்டது.

1957:

-'வாதாபி கொண்ட நரசிம்மவர்மன்' நூல் வெளிவந்தது. பல்லவர் தொடர்பான வரலாற்றில் இது இரண்டாவது நூல். சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் இந்நூலை வெளியிட்டது.

1958:

-'அஞ்சிறைத் தும்பி' நூல் வெளிவந்தது, சொல் ஆராய்ச்சிக் கட்டுரைகளைக் கொண்டது இந்நூல். ஸ்டார் பிரசுரம் இந்நூலை வெளியிட்டது. ''அஞ்சிறைத் தும்பி என்பது அழகான வண்ணச் சிறகுகளுடைய பட்டாம்பூச்சிகளுக்குப் பெயர். மலர்கள் அலர்ந்த பூஞ்சோலையிலே அஞ்சிறைத் தும்பிகள் பூக்கள்தோறும் பறந்து சென்று, தேனையுண்டு மகிழ்வது போல, தமிழ் இலக்கியப் பூங்காவிலே நுழைந்து இலக்கியத் தேனைப் பருகி மகிழ்ந்தபோது, இடையிடையே எனக்குக் கிடைத்த சொல் - ஆராய்ச்சியினால், இச்சிறு நூலுக்கு அஞ்சிறைத்தும்பி என்னும் பெயர் சூட்டப்பட்டது''.

-'மூன்றாம் நந்திவர்மன்' இந்த ஆண்டு வெளிவந்தது. தெள்ளாறெறிந்த நந்திவர்மன் பற்றித் தமிழில் வரும் முதல் நூல் இது. பல்லவர்கள் பற்றிய மூன்றாம் நூல் இது. இந்நூலைப் பாரி நிலையம் வெளியிட்டது.

1959:

-மறைந்துபோன தமிழ் நூல்கள் - இதன் முதல் பதிப்பு பாரி நிலையத்தாரால் வெளியிடப்பட்டது. தமிழில் மிக முக்கியமான ஆவண நூல் இது. 1952 - 53ஆம் ஆண்டுகளில் 'மறைவுற்ற தமிழ் நூல்கள்' என்னும் தொடராகச் 'செந்தமிழ்ச் செல்வி'யில் எழுதியதே, இவ்வகையில் நூல் வடிவம் பெற்றுள்ளது. இந்நூலுக்குப் பேரா.மு.வரதராசனார் முகவுரை எழுதியுள்ளார்.

-'சாசனச் செய்யுள் மஞ்சரி' இவ்வாண்டில் வெளிவந்தது. இந்நூல் ஓர் அரிய ஆவணம். சாகித்திய அகாடமி உதவியுடன் இந்நூல் வெளியிடப்பட்டது. விற்பனை உரிமை-பாரி நிலையம்.

1960:

-'புத்தர் ஜாதகக் கதைகள்'-வாய்மொழி மரபில் கூறப்படும் புத்தர் ஜாதகக் கதைகளின் தொகுப்பாக இந்நூல் வெளிவந்தது.

1961:

-17.03.61 இல் வேங்கடசாமி அவர்களின் மணிவிழா நடத்தப்பெற்றது. மலர் ஒன்று வெளியிடப்பட்டது. சிறுவை மோகன சுந்தரன், ஊ. ஜெயராமன் ஆகியோர் முன்னெடுப்பில் இவ்விழா நிகழ்ந்தது. மணிவிழாக் குழுத் தலைவராக அ.சிதம்பரநாதன் அவர்களும் துணைத் தலைவர்களாக கா.அப்பாத்துரை,மா.இராச மாணிக்கனார். ஆகியோரும் இருந்துள்ளனர். இவ்விழாக் குழு செயலாளராக சிறுவை. மோகனசுந்தரம் இருந்துள்ளார். பொருளராக மா.இளஞ்செழியன் இருந்துள்ளார். புலவர் அன்பு கணபதி, மீ.ப. சோமசுந்தரம், நாரண. துரைக்கண்ணன், ந.சஞ்சீவி, வ.சுப்பையா பிள்ளை; டி.எஸ்.ஸ்ரீபால், பி.எஸ்.செட்டியார். ஊ. ஜெயராமன் ஆகியோர் விழாக்குழு உறுப்பினர்கள். மணிவிழா மலரை ஊ.ஜெயராமன் உருவாக்கியுள்ளார். இம்மலரில், வேங்கடசாமி அவர்கள் குறித்துப் பல பெரியவர்களும் கூறியுள்ள செய்திகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

1961:

-'மனோன்மணீயம்' நூலை விளக்கவுரையுடன் இவ்வாண்டில் பதிப்பித்தார். சாந்தி நூலகம் இந்நூலை வெளியிட்டது.

1962:

-பிப்ரவரி 26,27,28 நாட்களில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் ஆற்றிய உரை 'சங்க காலத் தமிழக வரலாற்றில் சில செய்திகள்' என்னும் நூலாக அப்பல்கலைக்கழகத்தால் பின்னர் வெளியிடப்பட்டது (1970). இச்சொற்பொழிவில், முதல் நாள், 'தொல்காப்பியத்தில் சில ஆய்வுரைகள்' என்பது பற்றியும் இரண்டாம் நாள் 'சங்க நூல்களில் தமிழர் வாழ்க்கை' என்பது பற்றியும் மூன்றாம் நாள் 'சங்க காலத்துக் காவிரிப் பூம்பட்டினமும் மதுரை மாநகரமும்' என்பது பற்றியும் பேசினார்.

1962:

-'பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம்' என்னும் நூல் வெளிவந்தது.

1964:

-சென்னைத் தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர். இலங்கையிலிருந்து அறிஞர்களை அழைத்து, இக்காலங்களில் எழுத்தாளர் சங்கக் கூட்டங்களில் பங்குபெறச் செய்துள்ளார். இவ்வமைப்பில் இதற்குமுன் சில ஆண்டுகள் துணைத் தலைவராக இருந்துள்ளார்.

1965:

-'உணவு நூல்' வெளிடப்பட்டது. சிதம்பரம் மணிவாசகர் நூலகம் வெளியிட்டது. அறிவியல் கண்ணோட்டத்தோடு உணவுப் பழக்கத்தை உருவாக்கிக் கொள்வது பற்றி இந்நூலில் கூறுகிறார். இந்நூலில், 1930களில் 'குடியரசு' இதழ்களில் எழுதிய பல கட்டுரைகள் இணைக்கப்பட்டுள்ளன. வேறுசில புதிய கட்டுரைகளும் இணைக்கப்பட்டுள்ளன.

1966:

-'துளுநாட்டு வரலாறு' (கி.பி.2ஆம் நூற்றாண்டு) என்னும் சிறிய நூல் வெளிவந்தது. சாந்தி நூலகம் இதனை வெளியிட்டுள்ளது. பேரா.கே.கே. பிள்ளை இந்நூலுக்கு அணிந்துரை எழுதியுள்ளார். சங்கச் செய்யுட்களில் ஆங்காங்கே விரவியுள்ள தகவல்களைத் தொகுத்து இந்நூலை உருவாக்கியுள்ளார்.

-'சமயங்கள் வளர்த்த தமிழ்' என்னும் நூல் இவ்வாண்டில் வெளிவந்தது. மணிவாசகர் நூலகம் இந்நூலை வெளியிட்டது. இந்நூலை டி.வி. சதாசிவபண்டாரத்தாருக்குப் படையல் செய்துள்ளார். பல்வேறு சூழல்களில் எழுதிய 22 கட்டுரைகளின் தொகுப்பு இந்நூல்.

1966:

-சென்னைப்பல்கலைக்கழகத்தில் சொர்ணம்மாள் அறக் கட்டளைச் சொற்பொழிவு நிகழ்த்தல்-இச் சொற்பொழிவு கீழ்த்திசை ஆய்வு இதழில் (ORI Journal-Vol. XXI) 'சேரன் செங்குட்டுவன்' என்று வெளியிடப்பட்டுள்ளது. தனி நூல் வடிவம் பெற வேண்டிய ஆய்வு இது.

1969:

-நா. வானமாமலை அவர்களின் ஆராய்ச்சி இதழில் கட்டுரைகளை எழுதத் தொடங்கினார்.

1970:

-'சங்க காலத் தமிழக வரலாற்றில் சில செய்திகள்' என்னும் இவரது நூல் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் வெளியிடப்பட்டது. 1962இல் இவர் நிகழ்த்திய உரைகள் இவை.

1974:

-'பழங்காலத்தமிழர் வாணிகம்-சங்க காலம்' என்னும் நூல் நியூ செஞ்சுரி புத்தக நிறுவனத்தால் வெளியிடப்பெற்றது. இந்நூலில் உள்ள கட்டுரைகள் பல 'ஆராய்ச்சி' இதழில் எழுதப்பட்டவை.

-'கொங்குநாட்டு வரலாறு'- (பழங்காலம் கி.பி.250) என்னும் நூல் நியூ செஞ்சுரி புத்தக நிறுவனத்தால் வெளியிடப்பட்டது. இந்நூலைப் பொள்ளாச்சி நா. மகாலிங்கம் அவர்களுக்குக் காணிக்கை செய்துள்ளார். இந்நூல் எழுதுவதற்கு பொள்ளாச்சி மகாலிங்கம் அவர்களே காரணமாக இருந்தார்கள் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

1975-1979

-தமிழ் நாட்டு வரலாற்றுக் குழு உறுப்பினராக இருந்தார்.

1976

-'களப்பிரர் ஆட்சியில் தமிழகம்' என்னும் நூல் வெளிவந்தது. மக்கள் வெளியீடு இந்நூலை வெளியிட்டது. களப்பிரர் குறித்த புதிய கண்ணோட்டத்தை இந்நூல் கொண்டுள்ளது.

1977

-'இசைவாணர் கதைகள்' என்னும் நூல் வெளிவந்தது. வேலூரைச் சேர்ந்த 'வேணி நூலகம்' இந்நூலை வெளியிட்டது. இலக்கியங்கள் மற்றும் புராணங்களில் உள்ள பல சமயக்கதைகளைத் தொகுத்துள்ளார். இந்நூலை இராஜா சர் அண்ணாமலை செட்டியார் மற்றும் ஆர்.கே சண்முகம் செட்டியார் ஆகியோருக்குக் காணிக்கையாக்கியுள்ளார்.

1980:

-மதுரை காமராசர் பல்கலைக்கழகம்-தமிழ்ச் செம்மல்கள் பேரவை சார்பாக, 'தமிழ்ப் பேரவை செம்மல்' என்னும் பட்டத்தை வழங்கியது.

''எண்பதாண்டு வாழ்ந்து தனிப் பெருந்துறவு பூண்டு, பிறர் புகாத ஆய்வுச் சூழலில் புக்குத் தமிழ் வளர்த்த, உலகச் சமயங்களையும், கல்வெட்டு காட்டும் வரலாறுகளையும், சிற்பம் உணர்த்தும் கலைகளையும் தோய்ந்து ஆய்ந்து தோலா நூல்கள் எழுதிய ஆராய்ச்சியறிஞர் மயிலை வேங்கடசாமி அவர்கட்குத் 'தமிழ்ப் பேரவைச் செம்மல்' என்ற பட்டத்தினை வழங்கியும் தமிழ்ச் செம்மல்கள் பேரவையின் ஓர் உறுப்பினராக ஏற்றுக் கொண்டும் மதுரை காமராசர் பல்கலைக்கழகம் பாராட்டிச் சிறப்பிக்கின்றது'' என்று வாழ்த்துப் பத்திரத்தைப் பேரா.வ.சுப. மாணிக்கம் வாசித்தளித்தார்.

1980:

08.05.1980இல் இல்வுலக வாழ்வை நீத்தார்.

1981:

-'சங்க காலத்துப் பிராமிக் கல்வெட்டெழுத்துக்கள்' என்னும் நூல் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் வெளியிட்டது. இந்நூல் வெளிவர திரு.ஊ. ஜெயராமன் அவர்கள் பெரிதும் உதவியுள்ளார்.

1983:

-: 'தமிழ்நாட்டு வரலாறு-சங்க காலம்-அரசியல்' என்னும் நூல் வந்தது. தமிழ் நாடு அரசு இந்நூலை வெளியிட்டது. இந்நூலில் முறையே 4,5,6 மற்றும் 10வது இயல்களை வேங்கடசாமி எழுதியுள்ளார்.

2001:

-தமிழக அரசு இவரது நூற்றாண்டு விழாவை அறிவித்தது. இவரது ஆக்கங்களை அரசுடைமையாக்கியது.

-சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத்துறையில் வேங்கடசாமி நூற்றாண்டுக் கருத்தரங்கம் நடத்தப்பட்டது.

-'சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத்துறையில், அறிஞர் மயிலை சீனி. வேங்கடசாமி அறக்கட்டளை' அவரது குடும்பத்தாரால் உருவாக்கப்பட்டது. ஆண்டுதோறும் 'தமிழ்க் கலை வரலாறு' என்னும் பொருளில் சொற்பொழிவுகள் நிகழ்த்தப் பெறுகின்றன.

# இணைப்பு-2

கால வரிசையில், மயிலை சீனி, வேங்கடசாமி நூல்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இந்நூலின் உட்பகுதியில் பயன்படுத்தப் பட்டிருக்கும் மேற்கோள்களில் குறித்துள்ள ஆண்டுகள், நூல்கள் வெளிவந்த ஆண்டுகளாகும். ஆண்டுகளோடுஉள்ள எண்கள் பக்கங்களைக் குறிக்கும்.

1936 - கிறித்தவமும் தமிழும்

1940 - பௌத்தமும் தமிழும்

1943 - காந்தருவதத்தையின் இசைத் திருமணம் (சிறு வெளியீடு)

1944 - இறையனார் அகப்பொருள் ஆராய்ச்சி (சிறு வெளியீடு)

1948 - இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம்

1950 - மத்த விலாசம் - மொழிபெயர்ப்பு

- மகாபலிபுரத்து ஜைன சிற்பம்

1952 - பௌத்தக் கதைகள்

1954 - சமணமும் தமிழும்

1955 - மகேந்திரவர்மன்

- மயிலை நேமிநாதர் பதிகம்

1956 - கௌதம புத்தர்
- - தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்

1957 - வாதாபி கொண்ட நரசிம்மவர்மன்

1958 - அஞ்சிறைத் தும்பி

- மூன்றாம் நந்திவர்மன்

1959 - மறைந்து போன தமிழ் நூல்கள்

1960 - புத்தர் ஜாதகக் கதைகள்

1961 - மனோன்மணீயம்

1962 - பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம்

1965 - உணவு நூல்

1966 - துளு நாட்டு வரலாறு

- சமயங்கள் வளர்த்த தமிழ்

1967 - நுண்கலைகள்

1970 - சங்ககாலத் தமிழக வரலாற்றில் சில செய்திகள்

1974 - பழங்காலத் தமிழர் வாணிகம்

- கொங்கு நாட்டு வரலாறு

1976 - களப்பிரர் ஆட்சியில் தமிழகம்

1977 - இசைவாணர் கதைகள்

1981 - சங்க காலத்துப் பிராமிக் கல்வெட்டெழுத்துகள்

1983 - தமிழ் நாட்டு வரலாறு - சங்க காலம் - அரசியல் இயல்கள் 4,5,6,10

ஆ. இ.* - பாண்டியர் வரலாற்றில் ஒரு புதிய செய்தி (சிறு வெளியீடு)

---

*ஆண்டு இல்லை

# இணைப்பு - 3

மயிலை சீனி. வேங்கடசாமி 1923 - 1980 காலங்களில் 'லக்ஷ்மி', 'ஆரம்பாசிரியன்', 'குடியரசு', 'ஊழியன்', 'செந்தமிழ்ச் செல்வி', 'தமிழ்ப்பொழில்', 'கலைக்கதிர்', 'கல்வி', 'நண்பன்', 'திருக்கோயில்', 'முக்குடை' ஆகிய இதழ்கள், பல்வேறு சூழல்களில் வெளிவந்த மலர்கள், தொகுப்பு நூல்கள் ஆகியவற்றில் இடம் பெற்றுள்ள கட்டுரைகள்,ஆண்டு வரிசையில் தொகுக்கப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| 1923 | - | தூக்கம், லக்ஷ்மி, பிப்ரவரி |
| 1924 | - | வெண்பா நூற்கள், லக்ஷ்மி.2:5 |
| | - | சம்பாபதி, லக்ஷ்மி. 1:7 |
| 1925 | - | கொடுங்காற்று, லக்ஷ்மி. 3:1:3 |
| | | தமிழ் நாட்டின் தொன்மை, லக்ஷ்மி, 2:8 |
| 1926 | - | இயற்கைப் பொருணூற் கடலின் ஒரு சிறுதுளி, லக்ஷ்மி, 3:6 சனவரி |
| | - | ஆசார சீர்திருத்தம், லக்ஷ்மி 3:1 |
| 1927 | - | காலக்குறிப்பு, லக்ஷ்மி, 5:2 |
| 1928 | - | தமிழாசிரிய மாணவர் வழிமுறை விளக்கம் Part-I, செந்தமிழ்ச் செல்வி: 6:1 |
| 1929 | - | தேச பாஷை புத்தகசாலை, ஆரம்பாசிரியன், 5:1 - முதல் வகுப்பில் தமிழ் கற்பிக்கும் முறை, ஆரம்பாசிரியன், 5:2 |
| | - | கல்வியைக் குறித்த பழமொழிகள், ஆரம்பாசிரியன், 5:4 |
| | - | சிறுமணித்திரள், ஆரம்பாசிரியன், 5:4 |
| | - | அமெரிக்கா, ஆரம்பாசிரியன் 5:4 |

- பிள்ளைகளின் அறிவு வளர்ச்சி, ஆரம்பாசிரியன், 5:5
- இரத்தம், ஆரம்பாசிரியன், 5:7
- சூரியன், ஆரம்பாசிரியன், 5:7
- வானசாஸ்திர குறிப்புகள், ஆரம்பாசிரியன், 5:10
- ஆனந்தரங்க பிள்ளை, ஆரம்பாசிரியன்,5:7

குருடர்களுக்குக் கல்விப் புகட்டிய முதல் ஆசிரியர் யார்?, ஆரம்பாசிரியன், 5:7

- ஹெய்க்ஹாசன், ஆரம்பாசிரியன், 5:8:-9
- சிறுமணித்திரள், ஆரம்பாசிரியன், 5:9
- வான சாஸ்திரக் குறிப்புகள், ஆரம்பாசிரியன், 5:10
- உடம்பும் உணவும்,ஆரம்பாசிரியன், 5:11.
- சிறுமணித்திரள், ஆரம்பாசிரியன், 5:11
- வெளிநாட்டிலிருக்கும் இந்தியச் சகோதரரும் நமது கடமையும், ஆரம்பாசிரியன், 5:12

1930 - சென்சஸ் உற்பத்தி - அதிகாரிகளுக்கு ஒரு யோசனை, குடியரசு,23.01.1930.

- காட்டேரி அல்லது கொள்ளிவாய்ப் பிசாசு, குடியரசு, மார்ச்.
- மேல் நாட்டாரின் முற்போக்கு, குடியரசு, ஏப்ரல்
- இந்தியாவைக் கெடுத்தது இந்து சமயம், குடியரசு 13.4.1930.

1931 - கிரேக்கக் கவி ஹோமரும் கவிச் சக்ரவர்த்தி கம்பரும், குடியரசு, மே.

- ஆண் பெண் சமத்துவம், குடியரசு, மே,
- சைவ சாப்பாடு அல்லது மரக்கறி உணவு, குடியரசு, மே.
- மாமிச உணவைப் பற்றிய சில குறிப்புகள், குடியரசு, ஜூன்.
- தேசியப் பாடல்கள், குடியரசு, ஜூன்
- இந்தியாவின் பொதுபாஷை இங்கிலீஷா? ஹிந்தியா? குடியரசு, ஆகஸ்டு

- மாமிச உணவைப் பற்றிய தடைக்கு விடை, குடியரசு, செப்டம்பர்.
- வைட்டமின் (Vitamin) என்னும் ஜீவ சத்துப் பொருள், குடியரசு, நவம்பர்.
- ஆசியாக் கண்டத்தாரின் அறிவு, குடியரசு.
- பாடசாலையில் பேசும் படக்காட்சி, ஆரம்பாசிரியன், 7:3
- திப்புசுல்தான், ஆரம்பாசிரியன், 7:4
- குழந்தைகளும் அவைகளைப் பேணும் முறையும், ஆரம்பாசிரியன், 7:4
- ஆரம்பாசிரியர் பிள்ளைகளுக்கு இலவசக் கல்வி, ஆரம்பாசிரியன். 7:4
- வட்டமேஜை மகாநாட்டின் எதிரொலி, ஆரம்பாசிரியன், 7:7
- சம்பளக் குறைவு, ஆரம்பாசிரியன், 7:8
- உணவை, உண்ணும் விதம், ஆரம்பாசிரியன், 7:8
- தண்ணீர், அதை உபயோகிக்கும் விதம், ஆரம்பாசிரியன், 7:8
- தேசமுன்னேற்றத்தின் அடிப்படை, ஆரம்பாசிரியன், 7:10
- ஐதர் அலியும் போர்வீரனும், ஆரம்பாசிரியன், 7:11.
- உலகத்திலுள்ள குடியரசு நாடுகள், ஆரம்பாசிரியன், 7:11

1932 - சாமிகள் இனி அவதாரம் செய்யுமா? குடியரசு, 17.4.1932
- இந்துக்கள் பசுவைத் தெய்வமாகக் கொண்டாடுவது ஏன்? குடியரசு, ஏப்ரல்.
- சோதிடப்புரட்டு, குடியரசு, மே.
- சிருஷ்டி கர்த்தாவுடன் யுத்தம் - விதியும் வினையும் ஓடி ஒளிகின்றன, குடியரசு, அக்டோபர்.
- 55 வயதில் குழந்தை பெறுதல், குடியரசு, அக்டோபர்.

| | | |
|---|---|---|
| | - | முதுமையைத் தடுத்தல் அல்லது எப்பொழுதும் வாலிபம், குடியரசு, அக்டோபர். |
| | - | சவச் சடங்கில் சீர்திருத்தம், குடியரசு, 6.11.1932 |
| 1933 | - | மேல் நாட்டின் முன்னேற்றமும் கீழ் நாட்டின் பின்னேற்றமும், குடியரசு, சனவரி |
| | - | தேவாரத்தில் திருக்குறள், 'செந்தமிழ்ச் செல்வி:13:10 |
| 1934 | - | வைட்டமின்(உடலுக்கு உரம் அளிக்கும் உணவுச் சத்து), ஊழியன், ஆகஸ்டு. |
| 1935 | - | நெய்க்குடத்தில் கை விடுதல்,ஊழியன், ஜூன் 14:52. |
| | - | தேவாரத்தில் திருக்குறள்,செந்தமிழ்ச் செல்வி,13:10 |
| | - | பிளெச்சரிஸம் (Fletcherism), ஊழியன்,ஜூன். |
| 1936 | - | ஸ்ரீமதிகள் ருக்மணிதேவி, பாலசரஸ்வதி, ஊழியன்,24.4.1936. |
| 1937 | - | ஐரோப்பியர் வருகை, தமிழ் மணிக்கோவை (இரண்டாம் கோவை),இ.மா.கோபால கிருட்டிணக்கோன் பதிப்பகம்,சென்னை-மதுரை. |
| | - | நுண்ணுணர்வாளரின் உடல் நலம்,ஊழியன்,தை. |
| | - | கிறீன் வைத்தியர், (Samuel fisk Green)செந்தமிழ்ச் செல்வி,15:6. |
| | - | கந்தியார்,செந்தமிழ்ச்செல்வி,சிலம்பு,16:6. |
| 1938 | - | அந்தக்காலத்து ஐரோப்பிய நடை,ஊழியன்,தை. |
| | - | மாங்கொட்டை,ஊழியன்,தை. |
| | - | நீகண்டனார்,கலைக்கோட்டுத் தண்டனார்,செந்தமிழ்ச் செல்வி,1:6. |
| | - | மலையாள மொழி,(மொழிபெயர்ப்புக் கட்டுரை,மலையாள விருது)செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 16:8. |
| 1939 | - | ஆசீவகமதம்,திருவிளக்கு,பிப்ரவரி |
| 1940 | - | நீண்ட வாழ்க்கையும் நோயற்ற உடம்பும்,ஆனந்த போதினி, வெள்ளி விழா மலர். |
| 1946 | - | இதுதானா ஜனநாயக ஆட்சி,குடியரசு,ஆகஸ்டு. |

1947 - சீனா தேசத்தின் இன்றைய போராட்டம், குடியரசு,டிசம்பர்.

- திருக்கேத்தீச்சுரம்,லோகோபகாரி,51:36,டிசம்பர்.

- தமிழ்-அகப்பொருள்,செந்தமிழ்ச் செல்வி,22:3

- அத்திரி,செந்தமிழ்ச்செல்வி,22:11.

1948 - பழஞ்செய்திகள், செந்தமிழ்ச்செல்வி, 22:7.

- உதிரப்பட்டி அல்லது இரத்தக்காணி,செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு, 22

- உறையூர் மறைந்த வரலாறு,செந்தமிழ்ச் செல்வி, 22:1

- கழுதை ஏர் உழவர்,செந்தமிழ்ச் செல்வி,23:1.

- சென்னை நகரம் யாருக்கு உரியது? செந்தமிழ்ச்செல்வி,23:2.

- இராவணன் இலங்கை எது? செந்தமிழ்ச் செல்வி,23:3.

- பழங்காலத்து எழுது கருவிகள், செந்தமிழ்ச் செல்வி,23:5.

- திருவள்ளுவர் கூறிய பொருட் செல்வம், செந்தமிழ்ச் செல்வி,23:11.

- நான்கு வித அடிமைத்தனம்,குடியரசு,சனவரி.

- சீனதேசத்தின் சுதந்திரப்போர்,குடியரசு,சனவரி.

- மேற்கு அய்ரோப்பிய நாடுகளின் அய்க்கிய சங்கம், குடியரசு,மார்ச்.

- வந்த சுயராஜ்யம் என்ன செய்யப் போகிறது?, குடியரசு,மே.

- உயர் திரு.விபுலாநந்த அடிகள் எழுதிய கட்டுரைகள், ஈழமணி,1:2.

- பேராசிரியர் உயர்திரு. விபுலானந்த அடிகள் வரலாற்றுக் குறிப்பு, ஈழமணி மலர்,1:2.

- யானை உரித்த பெருமான், செந்தமிழ்ச்செல்வி,22:9.

1949 - மணிபல்லவம்-ஜம்புகொலபட்டினம்,செந்தமிழ்ச் செல்வி,23:10.

- தமிழ் நூல்களில் மீன்வகை,செந்தமிழ்ச் செல்வி,23:8.

- நகில்குறைத்தல்,செந்தமிழ்ச்செல்வி,24:3.
- கடவுள்-முனிவர்-தெய்வம்,செந்தமிழ்ச் செல்வி.24:8.
- வசுந்த குசு மாகர மாத்திரை, செந்தமிழ்ச் செல்வி,25. (ஓலைச்சுவடியிலிருந்து புதுப்பித்து எழுதப்பட்ட கலி வெண்பா-மருந்து செய்முறை குறித்தது)

1950 - கோழிப்பாம்பு, செந்தமிழ்ச் செல்வி,24:11
- நான் கண்ட பெருந்தமிழன், செந்தமிழ்ச் செல்வி,25.
- சங்க காலத்து மதுரை, செந்தமிழ்ச் செல்வி,25:3.

1951 - சங்ககாலத்துக் காவிரிப் பூம்பட்டினம், செந்தமிழ்ச் செல்வி,25:9
- எழுத்து ஆக்கம், செந்தமிழ்ச் செல்வி,25:7.

1952 - செந்தமிழ்ச்சிந்தாமணி-கால ஆராய்ச்சி, சீவகசிந்தாமணி சொற்பொழிவு நினைவு மலர்-ஜைனத் தமிழ் இலக்கிய மன்றம், காஞ்சிபுரம்.

1953 - மறைவுற்ற தமிழ் நூல்கள், செந்தமிழ்ச் செல்வி 25:7 (தொடர்ச்சியாக சிலம்பு 28 முதல் 10 இதழ்களுக்கு மேல் வெளி வந்துள்ளது இக்கட்டுரை. இதுவே பின்னர்'மறைந்துபோன தமிழ்நூல்கள்' என நூலாக வெளிவந்தது).
- தமிழ்நாட்டுச் சிற்பக்கலைகள், செந்தமிழ்ச் செல்வி,28.
- யாரால் மழை பெய்கிறது? செந்தமிழ்ச் செல்வி,28.

1954 - கன்னடமும் தமிழும், செந்தமிழ்ச் செல்வி,28:6.

1955 - சான்றோன் யார்? அறிஞனா, வீரனா? திருக்குறள் ஆராய்ச்சி (தொகுப்பு நூல்), திருக்குறள் மன்றம்,கொழும்பு

1956 - பௌத்த சமயம் மதுரைத் தமிழ்ச் சங்கப் பொன்விழா மலர்.
- தமிழ்நாட்டுச் சிற்பக்கலைகள், தமிழ் இலக்கியக் கோவை-ஐந்தாம் படிவம் (பாடநூல்),திருநெல்வேலி டயோசீசன் புக்டெப்போ, பாளையங்கோட்டை (1953-செந்தமிழ்ச் செல்வி சிலம்பு 28இல் வெளிவந்த கட்டுரை).

- தமிழறிஞர் ச.முனிசாமிப்பிள்ளை அவர்கள் மறைவு, செந்தமிழ்ச் செல்வி,31.
- தமிழும் சமண பௌத்த மதங்களும், மஹாவித்வான் மே.வீ.வேணுகோபாலப் பிள்ளை மணிவிழாமலர்.
- கூவத்துப் பௌத்தச் சிலைகள், கலைக்கதிர், புத்தர்மலர்,8:6.

1957 - பாவாடை, சென்னை மாணவர் மன்றம் வெள்ளிவிழா மலர்.

1958 - தமிழில் பிறமொழிச் சொற்கள்,'பாரதி'-தமிழ் எழுத்தாளர் ஆறாவது மாநாட்டு மலர்.
- சமயங்கள் வளர்த்த தமிழ், கலைக்கதிர், பொங்கல் மலர் 10:1, சனவரி.
- தென்னிந்திய சுவரோவியங்கள், கலைக் களஞ்சியம், தொகுதி-5.

நடைவாவி, நண்பன், மலர்-3

- அடிமை வாழ்வு, நண்பன். மலர்-8
- வருணன் வணக்கம், தமிழ்ப் பொழில்,34:5
- இலங்கைத் தீவில் வருணன் வணக்கம், தமிழ்ப் பொழில்,34:5.
- உன்மகள், கி.ஆ.பெ.மணிவிழா மலர்.
- சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம், தமிழ்ப் பொழில்,35:2.

1959 - செயற்கரிய செய்த பெரியார்,டி.எஸ்.ஸ்ரீபால் மணிவிழாமலர்.
- நாட்டியமும் சைவ ஆகமங்களும், கலைக்களஞ்சியம், தொகுதி-6.
- தேனவரை நாயனார் சாசனம், தமிழ்ப்பொழில்.34:11.
- மணிமேகலையில் முரண்பட்ட செய்தியா?, தமிழ்ப் பொழில்,35:3
- ஒரு தொடர்புரை, தமிழ்ப்பொழில், ஜூலை, ஆகஸ்டு,35:4.

| | | |
|---|---|---|
| | - | பத்தினிச் செய்யுளும் கண்ணகியும், தமிழ்ப்பொழில்,35:6-7. |
| | - | பாண்டியன் கோட்டம், கல்கி, தீபாவளி மலர் |
| | - | திருமாவுண்ணி கண்ணகியா? கலைக்கதிர்,9:11. |
| | - | பஞ்ச சீலம், கலைக்கதிர்-பொங்கல் மலர்,11:1. |
| | - | பாண்டியர் நிறுவிய தமிழ்ச்சங்கம். கலைக்கதிர், ஜூன், 11:5. |
| | - | சிலப்பதிகாரமும் பங்களரும், கலைக் கதிர், ஆகஸ்டு, 11:8. |
| | - | உண்மைப்பொருள், கலைக்கதிர், அக்டோபர்,11:10. |
| | - | பௌத்தம், தாமரை,1:11. |
| | - | சிற்பக்கலையில் தாமரை, நண்பன், ஜூன், மலர்-5 |
| | - | கோழிப்பாம்பு, நண்பன், மலர் 6.(செந்தமிழ்ச் செல்வியிலும் வெளிவந்துள்ளது) |
| | - | பாமரர்பகர்ச்சி, நண்பன், ஆகஸ்டு, மலர் - 7 |
| 1960 | - | பொத்த குட்டன், கலைக்கதிர்,12:1. |
| | - | ஆல்நீர், கலைக்கதிர், செப்டம்பர்.12:9. |
| | - | 'மெய்' என்னும் சொல் ஆராய்ச்சி, தமிழ்ப்பொழில், 36:7. |
| | - | சேரலாதன் அளித்த பெருஞ்சோறு,1,11,111, தமிழ்ப்பொழில் (தொடர்க்கட்டுரை) 36:4,36:9,37:1. (1961) |
| 1961 | - | மதுரைக் காஞ்சியின் காலம், இரா.பி.சேதுப்பிள்ளை வெள்ளிவிழா மலர். |
| | - | கருமாறி பாய்ச்சல், முழுமதி, பொங்கல் மலர். |
| | - | எழினி-யவனிகா, Tamil Culture Vol. IX No.4. |
| | - | கொங்கு நாட்டில் பிராமி எழுத்துக்கள், செந்தமிழ்ச்செல்வி, சிலம்பு 35:10. |
| | - | தொல்காப்பிய 'ஆராய்ச்சி'க்காரர்கள், செந்தமிழ்ச் செல்வி,36:2(1961). |
| | - | சிறுபாணன் சென்ற வழி, Tamil Culture Vol. IX No.1. |

- தமிழ் நாட்டில் யவனர், கலைக்கதிர், பிப்ரவரி,13:2.
- சைவ வைணவ பௌத்த சமண சிற்பங்கள், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக 1008 ஆவது நூல் வெளியீட்டுவிழா மலர்.
- சேரநாட்டு முத்து, தெ.பொ.மீ. மணிவிழா மலர், கோவை.

1962 - அவையடக்கம், தென்றல்.பொங்கல்மலர்.
- பதலை-தபலா,குத்தூசி,1:3.
- துளுமொழியும் தமிழ் மொழியும், கலைக்கதிர் பொங்கல் மலர்.
- ஆட்சியாளருக்கு எழுத்தாளர் வேண்டுகோள், 'பாரதி' தமிழ் எழுத்தாளர் சங்கம்.
- இந்தியாவில் தமிழ் கெடுமா? முரசொலி, பொங்கல் மலர்,

1963 - கண்ணன் பிறந்த மாட்சி (கவிதை), மலையாளக்கவிதையைத் தழுவி எழுதியது. 'பாரதி'-தமிழ் எழுத்தாளர் மாநாட்டு மலர்.
- பௌத்த மதமும் திருக்குறளும், செந்தமிழ், 63:5.
- சைவ சமய வரலாறு,ஸ்ரீகாசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம் நூற்றாண்டு விழா மலர்.
- ஒல்லாந்து தேசம், Recreation Club, Third Anniversary.
- திருப்பாலைவனம், செங்கற்பட்டு மாவட்டத் தமிழ் எழுத்தாளர் சங்கம், முதலாவது மாநாட்டுமலர், ஏப்ரல்.
- தமிழ் எழுத்தாளர் சங்கம், பதினோராவது மாநாட்டுத் தலைமையுரை, பாரதி மாநாட்டு மலர், தமிழ் எழுத்தாளர் சங்கம்.
- கம்பரும் சரளரும், செங்கற்பட்டு மாவட்டத் தமிழ் எழுத்தாளர் சங்கம், இரண்டாவது மாநாட்டு மலர்.

1964 - தமிழ் எழுத்தாளர் சங்க 12 ஆவது மாநாட்டு-தலைமையுரை, 'பாரதி',தமிழ் எழுத்தாளர் சங்கம், சென்னை.

- எலேனாவின் எழில், த.வே.முருகேசனார், மணிவிழா மலர், சென்னை கல்விச் சங்கம்.

1965 - முத்தமிழ் வள்ளல், நகரத்தார் மாநில மாநாட்டு மலர்.

- பௌத்த சமயம், மதுரைத் தமிழ்ச் சங்கம் பொன்விழா மலர்.

1966 - சங்க காலச் சேர அரசரின் பிராமி எழுத்துச் சாசனம், கல்வி, மலர்-1,நவம்பர்.

- சங்க காலத்துப் பாண்டிய அரசனின் பிராமி எழுத்துச் சாசனம், கல்விமலர்-2, டிசம்பர்.

- 'வண பண்டித ஹிஸ்ஸெல்லெ தருமரதன தெரோ' 'பாரதி' 14ஆவது தமிழ் எழுத்தாளர் மாநாடு சிறப்பிதழ்.

- நற்பண்பாளர், குத்தூசி குருசாமி நினைவு மலர், சென்னை.

- சேரன் செங்குட்டுவன், AOR vol xxl, part-l, University of Madras.

- ஆரியப்படையும் பௌத்தெய கணமும், கல்வெட்டுக் கருத்தரங்கு, இரா.நாகசாமி,(தொ.ஆ).

1967 - கல்லாடனார், கல்வி, சனவரி, மலர் -3.

-முதுகுடுமிப் பெருவழுதி, கல்வி, பிப்ரவரி, மலர்-4.

- மதுரை ஆசிரியர் நல்லந்துவனார், கல்வி, மலர்-9,ஜூலை.

- பௌத்த சமணத் தமிழிலக்கியங்கள், தமிழ் வட்டம் முதலாம் ஆண்டு.

- சமணமும் தமிழும், திருக்கோயில்,9:4.

- பௌத்தமதமும் திருக்குறளும், செந்தமிழ்ச் செல்வி,63:5.

1968 - சிவன் திருமால் உருவ அமைப்பு, தமிழியற் காட்சிகள், -தமிழகப் புலவர்குழு வெளியீடு, வ.சுப. மாணிக்கம், (ப.ஆ) திருச்சி.

ஆதிபகவன், கலைக்களஞ்சியம், தொகுதி -10

- பௌத்தர் வளர்த்த தமிழ், உலகத் தமிழ் மாநாடு, விழா மலர்.

- 'தமிழ்க் கலைகளைத் தாமறிந்து போற்றுக' நம்நாடு, உலகத்தமிழ் மாநாட்டுச் சிறப்பிதழ்.
- மாதவி; காவிரிப்பூம்பட்டினத்தின் கலைச்செல்வி, பெங்களூர்த் தமிழ்ச் சங்கச் சிறப்பு மலர்.
- தேவந்தி - கண்ணகியின்தோழி, சென்னை இளைஞர் கழக இரவு உயர்நிலைப்பள்ளி - பொன்விழாமலர்.
- முப்புரம் எரித்த முதல்வன், திருக்கோயில், 10:10, ஜூலை
- வரகுண பாண்டியனின் கல்வெட்டு, திருக்கோயில் செப்டம்பர், 10:12
- வரகுண பாண்டியனின் திருத்தொண்டுகள், திருக்கோயில், அக்டோபர், 11:1
- கல்விச் செல்வம் வழங்கும் கொடை வள்ளல், இளைஞர் கழக இரவு உயர்நிலைப்பள்ளி பொன்விழாமலர், பழைய மாணவர் மன்ற வெளியீடு, சென்னை.
- 'தொறு' என்னும் சொல்லின் வரலாறு, ஓர் ஆராய்ச்சி, தாமரை, 9:8
- மறைந்துபோன மருங்கூர்ப்பட்டினம் (சங்ககாலத்துத் துறைமுகம்), இரண்டாவது உலகத்தமிழ் கருத்தரங்க நிகழ்ச்சிகள், தொகுதி - 111

1969

- இளங்கோ அடிகளின் கவிதை நயம், தமிழ்வட்டம் இரண்டாவது ஆண்டு மலர்.
- மணிமேகலையில் முரண்பட்ட செய்தியா? தமிழ்ப் பொழில், 35:3
- திருமெழுக்குப்புறம், திருக்கோயில், சனவரி, 11:4
- ஒரு பிராஃமி எழுத்துச் சாசனம், ஆராய்ச்சி, 1:1
- சங்க காலத்து நடுகற்கள், ஆராய்ச்சி, மலர், 1:2
- மகாத்மா காந்தி தந்த சுயராஜ்யம், காந்திஜி நூற்றாண்டு சிறப்பு மலர், சென்னை, மகாஜனசபா.

1970 - இலிங்கோத்பவ மூர்த்தம், இராமலிங்கர் பணிமன்ற முத்திங்களிதழ், 3:12

- திருக்காரிக்கரை, திருக்கோயில், மார்ச், 12:6

- திருவக்கரை, திருக்கோயில், மே, 12.8

- சங்க காலத்து வாணிகம், ஆராய்ச்சி, மலர், 1:4

1971 - ஆரியப்படை கடந்த, அரசு கட்டிலில் துஞ்சிய பாண்டியன் நெடுஞ்செழியன், செந்தமிழ்ச்செல்வி, 46:6

- சங்க காலத்துக் கைத்தொழிலும் வாணிகமும், ஆராய்ச்சி, மலர்-3

- திருவிளையாடற் புராணத்தில் பௌத்தக் கதைகள், தில்லி தமிழ்ச்சங்க வெள்ளிவிழா மலர்

- மாநாய்கனும் மாசாத்துவானும், செந்தமிழ்ச்செல்வி, 46:1

- 'தொறு' என்னும் சொல்லின் வரலாறு, மூன்றாவது உலகத் தமிழ்க் கருத்தரங்கு நிகழ்ச்சி, தொகுதி 111. (1968-இல் தாமரையிலும் இக்கட்டுரை வந்துள்ளது)

- சிலப்பதிகார ஆய்வுரை, செந்தமிழ்ச் செல்வி, 46:2

1972 - சங்கநிதி - பதுமநிதி, சிதம்பரம் ஸ்ரீ சிவகாமி அம்பாள் திருக்கோயில் திருக்கும்பாபிஷேக மலர்

- காவியப் புலவரும் ஓவியக் கலைஞரும், ஆராய்ச்சி, 3:2, 5.3, (1976)

- சொல் ஆராய்ச்சி, செந்தமிழ்ச்செல்வி, 46:9

- மணிமேகலையின் விண்வழிச் செலவு, தமிழ்ப்பொழில் மணிவிழா மலர், கரந்தைத் தமிழ்ச் சங்கம்.

1973 - வையாவி நாட்டுச் சங்க காலத்து அரசர்கள், பழனி திருக்கோயில் திருக்குட நன்னீராட்டு பெருவிழா சிறப்பு மலர், 2.11.1973.

- கண்ணகியார் தெய்வமான இடம் எது? வ.சுப்பையா பவழவிழா மலர்.

- நல்ல சிற்றம்பலமும் தில்லைச் சிற்றம்பலமும், திருக்கோயில், 15:6

- தமிழகம். Journal of Tamil Studies Vol.3.1973.
- அவையடக்கச் செய்யுள், மன்னர் துரைசிங்கம் நினைவுக் கல்லூரி, வெள்ளிவிழா மலர், 1971:73.

1974 - இலக்கியத்தில் நடுகற்கள், Seminar on Hero Stones கருத்தரங்கக் கட்டுரைத் தொகுப்பு, இரா. நாகசாமி (தொ.ஆ)- தொல்லியல் துறை, தமிழக அரசு
- தேசிகப் பாவை, முக்குடை, 1:5
- கங்காதர மூர்த்தியின் அரியதொரு சிற்ப வடிவம். Journal of Tamil Studies Vol 5.
- திருக்குறளில் பௌத்தமும் சமணமும், திருக்குறள் கருத்தரங்கு மலர், திருவேங்கடவன் பல்கலைக்கழகம், திருப்பதி.
- பழந்தமிழும் பல்வகைச் சமயமும், 'பல்கலைப் பழந்தமிழ்' (தொகுப்பு நூல்), சென்னைப் பல்கலைக் கழகம்.

1975 - கவிமணிக்கு அஞ்சலி, கவிமணி தேவி மலர்.
- பன்னிரண்டு சூரியர் கல்வெட்டு-6, இராட்சச ஆண்டு.
- தமிழ் அகம், Journal of Tamil Studies, Vol III (இக்கட்டுரை செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 22லும் வெளிவந்துள்ளது)
- நாய்வேடம் கொண்ட நம்பன், கொங்கு, 5:12
- இராமேசுவரத்தீவு, இராமநாத சுவாமி கோயில் கும்பாபிஷேக சிறப்பு மலர், சோமலெ (ப.ஆ).

1976 - இளங்கோவும் சாத்தனாரும், மணிமேகலை மன்றம் விழா மலர், இராஜபாளையம்.
- சோழவாண்டிபுரம், முக்குடை, பிப்ரவரி
- வஞ்சிக்கருவூர்: சங்க காலச் சேரநாட்டின் தலைநகரம், Journal of Tamil Studies: 9, June.
- போரூர் பார்சுவநாதர், முக்குடை, 3:5
- காவிரி-காவேரி, செல்வச் சிலம்பு (கட்டுரைத் தொகுப்பு), தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம் சென்னை.

1978 - ஒரு குறளுக்கு பௌத்த விரிவுரை, தமிழ் ஆராய்ச்சியின் புதிய எல்லைகள், பேரா. நா.வா. மணிவிழா மலர்.

- காவியப் புலவரின் சொல்லோவியம், செந்தமிழ்ச் செல்வி, 52:4

- சீறாவின் காப்பியப் பண்புகள், 'சிந்தைக்கினிய சீறா' (நூல்), மீரா ஃபௌன்டேஷன், சென்னை.

- ஓடத்தில் ஒருநாள், பாவேந்தர் மலர், தென்னார்க்காடு மாவட்டத் தமிழ்க் கவிஞர் மன்றம், 28:5:1978.

1980 - தமிழ் நாட்டு ஜைனசிற்பங்களும் ஓவியங்களும், முக்குடை, 7:3

- சாக்கைக் கூத்தர், தமிழ் நாடு, இயல் இசை நாடக மன்றம், வெள்ளி விழா மலர்.

கையெழுத்துப் பிரதி: யானைக் கோயில் (1956).



மயிலை சீனி. வேங்கடசாமி இருபதாம் நூற்றாண்டுத் தமிழியல் ஆய்வில் பெரும் சாதனை நிகழ்த்தியவர். சுயமரியாதை இயக்க மரபில், தனித்த தமிழியல் ஆய்வுகளை மேற்கொண்டவர். 1920 - 1980களில் தொடர்ந்து ஆய்வையே வாழ்வாகக் கொண்டு வாழ்ந்தவர். திராவிட இயல் கருத்துருவாக்கத்திற்கு முதன்மையான பங்களிப்பு செய்தவர்.

வீ. அரசு (1954) சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத் துறையின் பேராசிரியர்-தலைவர். தமிழ்ச் சமூகம் தொடர்பான வரலாற்று ஆய்வுகள், இருபதாம் நூற்றாண்டின் ஊடகங்கள் ஆகியவை குறித்த ஆய்வுகளை மேற்கொள்பவர்.

உருவ ஓவியம் : டிராஸ்கி மருது

Mayilai Seeni. Vengatasamy (Tamil) Rs. 25/-

ISBN-81-260-1720-1